மூதறிஞர்

# மு. இராகவையங்கார்

பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

தமிழறிஞர் வரிசை – 5

# மூதறிஞர்
# மு. இராகவையங்கார்

பதிப்பாசிரியர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
முனைவர் ச. சிவகாமி



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை – 600 113.

# BIBLIOGRAPHICAL DATA

திங்கள் (தொடர்) ஆய்வுக் கருத்தரங்கம் - தமிழறிஞர் வரிசை - 5
மூதறிஞர் மு. இராகவையங்கார் (22-8-2003)

| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Mūtariñar Mu. Irakavaiyaṅkār** |
| Editors | : | Dr. S. Krishnamoorthy<br>Director<br>IITS, Taramani, Chennai - 600 113.<br>Dr. S. Sivakami<br>Associate Professor<br>IITS, Taramani, Chennai - 600 113. |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Taramani, Chennai - 600 113.<br>Ph: 22542992 |
| Publication No | : | 497 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 kg TNPL Map litho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | viii +136 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 40/- (Rupees Forty Only) |
| Printing | : | United Bind Graphics<br>101-D, Royapettah High Road,<br>Chennai - 600 004. |
| Subject | : | Biographical & Critical Studies on<br>M. Raghavaiyangar |

---

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஒல்லும்வகையெல்லாம் தமிழை வளர்ப்பதில் அயராது பாடுபட்டுவருகிறது. வாரக்கருத்தரங்கு, திங்கள் கருத்தரங்கு, ஆண்டுக்கருத்தரங்கு, அறக்கட்டளைக் கருத்தரங்கு போன்ற பல்வேறு கருத்தரங்குகளைத் தொடர்ந்து நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை நூலாக வெளியிட்டுத் தமிழுக்கு வளம் சேர்த்து வருகிறது. தமிழாய்வுக்கு உடனடித் தேவை என்ன என்பதை உணர்ந்து அதைச் செயல்படுத்திவருவதே இதற்குக்காரணமாகும்.

இந்நிறுவனம் தொடக்கக் காலத்திலிருந்து பல்வேறு பொருண்மைகளில் கருத்தரங்குகளை நடத்திவருவதைத் தமிழுலகம் நன்கு அறியும். தமிழுக்கென்று அமைந்த மரபையும் பாரம்பரியத்தையும் எடுத்துக்காட்டும் வகையில் தமிழ் இலக்கியக் கொள்கை என்ற தொடர்கருத்தரங்கை இந்நிறுவனம் நடத்திவந்தது. தமிழர் கலைச் செல்வங்கள் என்ற தலைப்பில் தொடர் கருத்தரங்காகத் தமிழ் மரபினை உணர்த்தும் வகையிலும் கருத்தரங்குகளை நடத்திவந்தது. இவையன்றியும் பல்வேறு இலக்கியப் பொருண்மைகளில் கருத்தரங்கை நடத்திவந்தபெருமை இந்நிறுவனத்திற்கு உண்டு. இந்நிறுவனம் தன் அளவிலும் பிற நிறுவனங்களோடு சேர்ந்தும் இத்தகைய கருத்தரங்குகளை நடத்தித் தமிழாய்வுக்குச் சிறப்புச் சேர்த்து வந்துள்ளது. இக்கருத்தரங்குகளைத் தொடர்ந்து தமிழறிஞர்களை மையப்படுத்திய நிலையில் தொடர்கருத்தரங்கு ஒன்றைத் தொடங்க எண்ணியது. இவ்வகையில் **'தமிழறிஞர் வரிசை'** என்ற பெயரில் தொடர் கருத்தரங்கை நடத்துவதன்மூலம் அறிஞர் பலரின் அரிய தமிழ்த் தொண்டுகளை எல்லாம் இவ்வுலகிற்கு எடுத்துக்காட்ட முடியும் என்ற நிலையில் இத்தகைய தொடர்கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது.

வரலாறு எழுதப்படாத தமிழறிஞர்களுக்கு ஒரு வரலாற்றை உருவாக்குவதன் மூலம் அத்தமிழறிஞர்களைப் பற்றிய செய்திகள் ஆவணப் படுத்தப்படும். அவ்வாறு ஆவணப்படுத்தப்படுவதால் இத்தமிழறிஞர்கள் இம்மண்ணில் பிறந்த பயனும், இம்மண்ணிற்கும், மொழிக்கும், இனத்திற்கும் ஆற்றிய அரும்பெரும் பணிகளும் பின்வருவோரால் போற்றப்படும் நிலை உருவாகும். இதனால் இத்தமிழறிஞர் வரிசைக்கருத்தரங்கை வாழ்க்கை வரலாற்றுக் கருத்தரங்காக அமைக்காமல்

ஆய்வுக்கருத்தரங்கமாக அமைத்துக்கொள்ள முடிவு எடுக்கப்பட்டது. அவ்வகையில் தமிழுக்கு உழைத்து மறைந்த அறிஞர்கள் பலநூறுபேர் நம்முன் வந்தனர். அவர்கள் அனைவரைப் பற்றியும் இத்தொடர் கருத்தரங்கம் அமையவேண்டும் என்பது எங்கள் அவா. எனவே அனைவரையும் பட்டியலிட்டுப் பகுதி பகுதியாக இத்தொடர் கருத்தரங்கை நடத்த முடிவு செய்யப்பட்டது. அதில் முதல் கட்டமாகப் பதினாறு அறிஞர்கள் தெரிவுசெய்யப்பட்டனர்.

இத்தமிழறிஞர்களின் முதல் பட்டியலைக் கொண்டு தமிழறிஞர் களைப் பற்றிய கருத்தரங்கு நடைபெறும் நாள், கட்டுரை வழங்க வேண்டிய நாள் பற்றிய குறிப்புகளுடன் முதல் அட்டவணை தயார் செய்யப்பட்டது.

இப்பதினாறு தமிழ் அறிஞர்களைப் பற்றியும் கட்டுரைகள் வழங்கத் தமிழகத்தில் உள்ள பல்வேறு கல்லூரிகள், பல்கலைக்கழகங்களில் பணி புரியும் ஆசிரியர்கள் அழைக்கப்பட்டனர்.

ஒரு திங்களுக்கு ஒரு தமிழறிஞர் என ஒருவரைப் பற்றிய கருத்தரங்கில் 5 அல்லது 6 பேர் ஆய்வு செய்யவேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் கட்டுரைகள் கோரப்பட்டன. ஒருவரைப் பற்றிப் பலர் ஆய்வுசெய்து கட்டுரை வழங்குவதால் அவ்வறிஞருடைய பன்முக ஆளுமையை வெளிக்கொணர முடியும். அத்தமிழறிஞர்களின் வாழ்க்கை வரலாறு முதலில் அமையவேண்டும். பதிப்பு, மொழிபெயர்ப்பு, திறனாய்வு போன்ற நிலைகளில் அவ்வறிஞர் பற்றிய ஆய்வுகள் தொடர்ந்து இடம்பெறவேண்டும் என்ற நோக்கில் கட்டுரைகள் பெறப்பட்டன. இக்கருத்தரங்கில் மிகுந்த விருப்பத்துடன் ஆய்வாளர்கள் கட்டுரை வழங்க முன்வந்தமை உண்மையிலேயே எங்களுக்கு வியப்பு அளித்தது. முறையாகத் திட்டமிடப்பட்டுச் செயல்படத் தொடங்கிய **இத்திங்கள் தொடர் ஆய்வுக்கருத்தரங்கு - தமிழறிஞர்வரிசை** புதுப்பொலிவுடன் எண்ணிய வண்ணம் தொடர்ந்து நடைபெற்றுவருகிறது. இம்முதல் பட்டியலைத் தொடர்ந்து இரண்டாவது பட்டியல்,மூன்றாவது பட்டியல் எனத் தமிழறிஞர் வரிசை ஆண்டுக் கணக்கில் நடைபெறும் தொடர் கருத்தரங்காக உருவெடுத்துள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இன்றைய, நாளைய தலைமுறையினர்க்கும் தமிழ் உலகிற்கும் ஒரு சிறந்த ஆவணமாக அமைய இருக்கும் இத்தமிழறிஞர்வரிசைக் கருத்தரங்கக் கட்டுரைகளைத் தொடர்ந்து நூலாக வெளியிடுவதில் இந்நிறுவனம் பெருமை கொள்கிறது. எப்போதும் ஒரு பணியைத் திட்டமிட்டு எதிர்கால நோக்கில் செயல்படுத்தினால் அத்திட்டம் வெற்றியடைவது உறுதி என்பதற்குச் சான்றாக இத்தமிழறிஞர் வரிசைத் தொடர் கருத்தரங்கு அமையலாம்.

இத்தமிழறிஞர் வரிசையின் ஐந்தாம் கருத்தரங்காக **மூதறிஞர் மு. இராகவையங்கார்** கருத்தரங்கு அமைகிறது. இக்கருத்தரங்கிற்கு எழுவர் கட்டுரை வழங்கியுள்ளனர்.

பேரறிஞராகவும், புகழ் பெற்ற பதிப்பாளராகவும், கல்வெட்டியல், மற்றும் வரலாற்றியல் ஆராய்ச்சியாளராகவும் விளங்கிய மு. இராகவையங்காரின் சிறப்புகளை வெளிப்படுத்தும் முகத்தான் இக்கட்டுரைகள் அமைகின்றன.

கட்டுரை ஆசிரியர்கள் மு. இராகவையங்காரின் மொழிப்பற்றையும், நாட்டுப்பற்றையும் ஆய்வுசெய்து விளக்கியதுடன், இதிகாச புராணங்கள் பற்றிய அவர்தம் உயர் ஆய்வு நுட்பத்தையும், இலக்கணத்தின்பால் அவருக்கிருந்த புலமையையும் அரிய சான்றுகள் காட்டி விளக்கி யிருக்கிறார்கள். **மூதறிஞர் மு. இராகவையங்கார்** பற்றிய ஒரு முழுமையான ஆராய்ச்சி நூலாக இந்நூல் அமைந்துள்ளது.

இத்தொடர் கருத்தரங்கிற்கு ஒருங்கிணைப்பாளராக இருந்து சிறப்புடன் நடைபெற முழு முயற்சியுடன் செயல்பட்ட இலக்கியம் மற்றும் சுவடிப்புல இணைப் பேராசிரியர் முனைவர் ச. சிவகாமி அவர்களுக்கு என் நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறேன். இக்கருத்தரங்கு சிறப்புடன் நடைபெற அனைத்து உதவிகளையும் செய்த நல் உள்ளங்களுக்கு நன்றி. இத்தொடர் கருத்தரங்கக் கட்டுரைகள் நூலாக்கம் பெற இசைவளித்த நிறுவனப் பதிப்புக்குழுவினர்க்கு நன்றி.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் **மாண்புமிகு கல்வி மற்றும் பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் திருமிகு சி.வி. சண்முகம்** அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் **செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப.** அவர்களுக்கும், **சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு ஒளிஅச்சுக்கோப்புச் செய்த திருமதி இரா. வெண்ணிலாவிற்கும், அழகுற அச்சிட்டுத்தந்த யுனைடெட் பைன்ட் கிராபிக்ஸ் அச்சகத்தார்க்கும் என் பாராட்டுகள்.

சென்னை

25-06-04 **இயக்குநர்**

## கட்டுரையாளர்

முனைவர் மோ.கோ. கோவைமணி

ஓலைச்சுவடித் துறை

தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005

திருமதி சு. கௌசல்யா

ஆய்வாளர்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113

முனைவர் எச். சித்திரபுத்திரன்

தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் - 613 005

முனைவர் சிலம்பு நா. செல்வராசு

புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்

புதுச்சேரி - 605 001

திரு பெ.சு. மணி

சென்னை

திரு நா. ஜானகிராமன்

ஆய்வாளர்

பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி - 24

செல்வி க. ஜெயந்தி

ஆய்வாளர்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600 113.

# உள்ளே

# வாழ்க்கை வரலாறு

*சு. கௌசல்யா*

வரலாற்று ஆய்வில் வரலாறு படைத்த பேரறிஞர்; இலக்கிய ஆய்வில் இணையற்ற புகழ்பெற்ற பேராசிரியர்; இதழியல் பதிப்பித்து வெளியிட்ட அருமையில் பெருமை அடைந்த பேரறிவாளர்; சிலா சாசனங்களை வெளிப்படுத்திய பாங்கில் சிறப்புப் பெற்ற பெருந்தகையாளர், என்ற பெருமையனைத்தையும் தன்னகத்தே கொண்ட முதுபெரும் புலவர் மு. இராகவையங்காரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## தந்தையார்

150- ஆண்டுகளுக்கு முன் சேது சமஸ்தானத்தின் தலைநகரான இராமநாதபுரத்திலே குடியேறிய வைஷ்ணவப் பிராமண குடும்பங்களுள் மு. இராகவையங்காரின் முன்னோர்கள் சிறந்தவர்களாக இருந்திருக்கின்றனர். சமஸ்தான அதிபதியான முத்துராமலிங்க சேதுபதி கி.பி. 1763 முதல் 1795 வரை ஆட்சி புரிந்த போது பிரதான மந்திரியாக முத்திருளப்ப பிள்ளையும், இரண்டாவது மந்திரியாகச் சின்னப்பிரதானி கிருஷ்ண ஐயங்காரும் இருந்திருக்கின்றனர். இராமேசுவரக் கோயில் மூன்றாம் பிரகாரத் திருப்பணியைச் சேதுவேந்தர் கி.பி. 1740இல் தொடங்கிய போது, இம் மந்திரிகள் இருவரின் மேற்பார்வையில் இனிது நடைபெற்று 1769ஆம் ஆண்டு கோயில் திருப்பணி பூர்த்தியடைந்தது. இப்பணியானது 29 ஆண்டுகள் நடைபெற்றது. அப்பிரகாரமானது சொக்கட்டான் கட்டவுருவில் அமைக்கப்பட்டதால் 'சொக்கட்டான் மண்டபம்' என அழைக்கப்படுகிறது. இப்பிரகாரத்தின் கிழக்கிலும் மேற்கிலும் அமைந்த மண்டபங்களிலே முத்துராமலிங்க சேதுபதியின் உருவமும் அவர்க்கு இருபுறங்களிலும் அவர் மந்திரிகளான முத்திருளப்ப பிள்ளை, கிருஷ்ணஐயங்கார் ஆகிய இருவர் உருவங்களும் தனித்தனிக் கற்றூண்களில் அழகாக விளங்குவதை இன்றும் காணலாம். இவ்வாறு இராஜகாரியங்களையும் தெய்வகைங்கரியங்களையும் சிறப்புற நடத்தி வந்த சின்னப்பிரதானி கிருஷ்ணஐயங்கார் தம் அரசரால் வெகுமானிக்கப்பெற்று பெருஞ்செல்வராக இராமநாதபுரத்தில் வாழ்ந்து வந்தார். இவரின் மூத்த பேரர் நாராயண ஐயங்கார் ஆவார்.

இவருக்கு இரு புத்திரர்களும் ஒரு புத்திரியும் இருந்தனர். இரு புத்திரர்களுள் மூத்தவர் துவாத்ரிம் சதாவதானி கிருஷ்ணஐயங்கார்; இளையவர் சதாவதானி முத்துஸ்வாமி ஐயங்கார்; புத்திரி பத்மாஸனி அம்மாள். இவர்களுள் சதாவதானி முத்துசாமி ஐயங்காரின் புதல்வரே மு. இராகவையங்கார்.

## மதுரை வாழ்க்கை

சதாவதானி முத்துசாமி ஐயங்காரின் ஏகபுத்திரரான மு. இராகவையங்கார், பாண்டிநாட்டு அரியக்குடியில் பகுதான்ய ஆண்டு ஆடிமாதம் மிருகசீரிஷ நட்சத்திரத்தில் பிறந்தவர் (1878ஆம் ஆண்டு ஜூலை மாதம் 26ஆம் தேதி). இவருடைய தந்தையார், இவருக்குப் பதினாறு வயது நடந்து கொண்டிருக்கும்போது இறந்து விடவே, பாண்டித்துரைத் தேவரின் ஆதரவாலும் ஊக்குதலாலும் தமிழை நன்கு கற்றுத் தேர்ச்சி பெற்றார். தேவரவர்கள் 1901ஆம் ஆண்டு மதுரையில் தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கிய பொழுது, இவரை உடன் அழைத்துச் சென்றார். அங்கு, சங்க கலாசாலையின் உபாத்தியாயராகவும், அதற்கு அடுத்த வருடம் செந்தமிழ்ப் பத்திரிகையைத் தொடங்கிய போது, அதன் உதவி ஆசிரியராகவும் நியமனம் செய்யப் பெற்றார். செந்தமிழ்ப் பத்திரிகையின் முதல் பதிப்பாசிரியராக இவருடைய அத்தை குமாரரான மஹாவித்வான் ரா. ராகவையங்கார் பொறுப்பி லிருந்தார். அவர், மூன்று ஆண்டுகள் வரை செந்தமிழ்ப் பத்திரிகையைச் சிறப்புற நடத்திய பின்பு விலகிக் கொண்டார். தேவரவர்கள் வயதில் இளையவராக இருந்த மு. இராகவையங்காரையே செந்தமிழ்ப் பத்திரிகையின் பதிப்பாசிரியராக்கினார். இதற்குக் காரணம், மு. இராகவையங்காரின் எழுத்திலும் ஆராய்ச்சியிலும் தேவரவர்களுக்கு இருந்த மதிப்பே ஆகும். மு. இராகவையங்காரும், எதிர்பார்ப்பிற்கிணங்கப் பல அரிய கட்டுரைகளைச் செந்தமிழ்ப் பத்திரிகைக்கு அளித்தார்.

பல ஆண்டுகளுக்கு முன்பு, இலக்கிய இலக்கண ஆராய்ச்சி தமிழறிஞர்களிடம் உண்டாயினும், சரித்திரத்துறையானது அவர்களில் பெரும்பாலர்க்குப் புதிய ஒன்றாகவே இருந்தது. பழைய சரித்திரச் செய்திகளை அறிவதில், தமிழ் மக்களும், ஆங்கில அறிஞர்களும் அக்காலத்தில் விருப்புற்று இருந்தனர். இதை உணர்ந்த மு. இராகவையங்கார் அத்துறையில் நாட்டம் கொண்டு, முற்காலச் செய்திகளையும் பிற்காலச் செய்திகளையும் துருவி ஆராய்ந்து பல அரிய செய்திகளை வெளியிட்டார். அவ்வாறு ஆய்ந்து வெளியிட்ட ஆராய்ச்சி உரைகளுள் "வேளிர் வரலாறு" என்ற நூலும் ஒன்று. இந்நூலில், சிற்றரசரைப் பொதுவிற் குறிப்பிடுவதாகக் கருதப்பட்டு

வந்த 'வேளிர்' என்ற பழஞ்சொல், ஒரு சார் தனிவேந்தர் குலத்தைச் சுட்டுவது என்பதும் அக்குலத்தவரின் பழைய வரலாறுகள் இன்னது என்பதும் அரியபல கருத்துகளுடன் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

இக்கட்டுரை, 1905ஆம் ஆண்டு நிகழ்ந்த மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் நான்காம் ஆண்டுக் கூட்டத்தில் "The Tamil 1800 years ago" என்ற அரிய சரிதநூலின் ஆசிரியர் வி. கனகசபைப் பிள்ளையின் தலைமையில் கூடிய அறிஞர்களின் முன்பு வெளியிடப்பட்டது. இக் கட்டுரையின் அருமை பெருமைகளை அக்கூட்டத்தில் பங்கு பெற்ற அனைவரும் பாராட்டி மகிழ்ந்தனர். செந்தமிழ்ப் பத்திரிகையில் இக்கட்டுரை வெளிவந்ததும் இதனைப் படித்த அறிஞர் பலரும் சரித்திர உண்மைகள் பல இதில் அமைந்திருந்ததற்கு மகிழ்ச்சி தெரிவித்துப் பல கடிதங்களைச் சங்கத் தலைவருக்கும் ஆசிரியருக்கும் எழுதலாயினர். இக்கட்டுரை, சரிதவாராய்ச்சியில் வல்லவரான கொழும்பில் வாழ்ந்த வி.ஜே. தம்பிப்பிள்ளையால் ஆங்கிலத்தில் பல கீழ்க்குறிப்புகளுடன் மொழிபெயர்க்கப் பெற்று "ராயல் - ஏஷியாடிக்-ஸொஸைடி-ஜெர்ன"லில் பிரசுரிக்கப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழகமும் 'இண்டர்மீடியட்' தேர்வுப் பாடங்களில் ஒன்றாக இருமுறை வைத்து இதனைச் சிறப்பித்தது.

செந்தமிழ் இதழின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றிருந்த மு. இராகவையங்கார் 1907ஆம் ஆண்டு 'வீரத்தாய்மார்' என்ற கட்டுரையைச் செந்தமிழ் இதழில் எழுதி வெளியிட்டு இருந்தார். அக் கட்டுரையைப் படித்துச் சுவைத்த மகாகவி பாரதி மகிழ்ந்தும் நெகிழ்ந்தும் மு. இராகவையங்காருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

ஒருமுறை மு.இராகவையங்கார் தமிழ் மக்களின் 'பழைய கைத்தொழில் வணிகம்' பற்றிய தனது கட்டுரையைச் 'செந்தமிழ்' பத்திரிகையில் வெளியிட்டிருந்தார். அக்கட்டுரையைப் படித்த 'கப்பலோட்டிய தமிழர்' வ.உ. சிதம்பரனார் ஒரு பாராட்டுக் கவிதையை ஐயங்காருக்கு அனுப்பி வைத்தார்.

இவ்விரு பெருமக்களின் பாராட்டுரைகள் மு இராகவையங்காரின் பேரறிவை உலகிடை ஒளிர வைத்தன. இவர்கள் மட்டுமல்லாது, மு.இராகவையங்காரின் கட்டுரைகளை வாசித்து அவரின் எழுத்தறிவையும் ஆற்றலையும் பலர் போற்றியும் சிறப்பித்துப் பேசியும் பாராட்டியும் உள்ளனர். அவர்களுள் உ.வே.சா., காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீன கர்த்தர்களாய் விளங்கிய அம்பலவாணதேசிகர், ரா. ராகவையங்கார், S.R.M.M. இராமசாமி

செட்டியார், செல்வகேசவராய முதலியார், தேசிக விநாயகம் பிள்ளை போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

இங்ஙனம், மு. இராகவையங்காரின் தலைமையின் கீழ்ச் செந்தமிழ்ப் பத்திரிகை எட்டு ஆண்டுகள் இனிது நடைபெற்றது. இந்தக் காலத்தில், இவரது தலையங்கக் கட்டுரைகளும் பிறவும் புதிய புதிய கருத்துகளை வெளியிட்டு வந்தமையால், அப்பத்திரிகையின் மதிப்பும் பிரசுரமும் அதிகமாயின. இதன் வெற்றி முழுமையும் மு. இராகவையங்காரையே சாரும்.

## சென்னை வாழ்க்கை

1912ஆம் ஆண்டு அன்றைய அரசாங்கம், சென்னைப் பல்கலைக் கழகத்தின் மேற்பார்வையில் தமிழ்ப் பேரகராதி யொன்றைத் தயாரித்து வெளியிட வேண்டிப் பொருளுதவி செய்ய முன் வந்தது. தமிழ்ப் பேரகராதியை உருவாக்கத் தகுந்தவராக மு.இராகவையங்காரை, அக்குழுவிற்குத் தலைவராகவும் பதிப்பாசியராகவும் விளங்கிய மதுரை அமெரிக்கன் மிஷனைச் சார்ந்த Rev.J.S. சாண்ட்லர் துரை தேர்ந்தெடுத்தார். தமிழ்ப் பெரியார்களின் தூண்டுதலின் காரணமாகத் துரையால் தேர்ந்தெடுக்கப் பெற்ற மு.இராகவையங்கார், தாம் பணியில் சேர்ந்த நாளிலிருந்தே அகராதி வேலையையும் ஆரம்பித்தார். மதுரையிலும் சென்னையிலும் இவர் தம் தலைவருடன் ஒத்துழைத்து, அப்பேரகராதி அச்சேறுவதற்கு அடிப்படையான தமிழ் வேலைகளை எல்லாம் செய்து கொடுத்து உதவினார். இவரது ஊக்கத்தையும் உழைப்பையும் கண்டு பெரிதும் உவந்த துரை, இவருக்குத் தக்கவாறு வெகுமதியளித்ததோடு அல்லாமல், இந்நாட்டிலும் பிறநாட்டிலும் பத்திரிகைகளில் ஐயங்காரைப் பாராட்டிக் கட்டுரைகளையும் வெளியிட்டார். இங்ஙனம் ஏழு ஆண்டுகளாகத் தலைமை வகித்து சாண்ட்லர் விலகிய பின்பு, அவருக்குப் பின்பு வந்தவர்கள் அனைவரும் ஐயங்காரின் செயலைப் பாராட்டி வரவேற்றனர். இவ்வாறு பேரகராதி தொடங்கப் பெற்றது முதல் அது நிறைவேறிய காலம் வரை, ஐயங்கார் தலைமைப் பண்டிதராய் இருந்து வந்ததோடு அல்லாமல், அதன் அநுபந்தத் தொகுதி நடைபெற்று வந்தபோதும், அப்பணியில் தலைநின்று நடத்தி வந்தார்.

## மு. இராகவையங்காரின் படைப்புகள்

இவ்வாறு, மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் பத்திரிகை ஆசிரியராய் இருந்த காலத்திலும், சென்னையில் அகராதிப் பணியில் அமர்ந்திருந்த காலத்திலும் இவர் எழுதி வெளியிட்ட நூல்கள் பல.

வேளிர் வரலாறு, தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி, சேரன் செங்குட்டுவன், ஆழ்வார்கள் காலநிலை, சாஸனத் தமிழ்க்கவி சரிதம் ஆகியன இவரின் ஆராய்ச்சி நூல்களாகும்.

இவர், செந்தமிழ்ப்பத்திரிகை நடத்திய காலத்தில் அப்பத்திரிகையில் ஆராய்ந்து பதிப்பித்த சிறு நூல்கள் ஆறு ஆகும். அவை (1) நரிவிருத்தம் (அரும்பதவுரையுடன்), (2) சிதம்பரப் பாட்டியல் (உரையுடன்), (3) திருக்கலம்பகம் (உரையுடன்), (4) விக்கிரம சோழனுலா, (5) சந்திரா லோகம், (6) கேசவப் பெருமாள் இரட்டை மணிமாலை முதலியன. இவையன்றிச் சொந்தத்தில் ஆராய்ந்து வெளியிடப்பட்டனவும், படாதனவுமான நூல்களும் உள்ளன. அவையாவன (1) பெருந்தொகை (முதற்றொகுதி), (2) நூற்பொருட் குறிப்பு, (3) நிகண்டகராதி (அச்சிடப்படவில்லை), (4) திருக்குறள், பரிமேலழகர் உரையுடன்.

இவர் படைத்த நூல்கள் எல்லாம் இவரின் ஆய்வுத் திறனைப் புலப்படுத்திய தோடு, அறிஞர் உலகம் மதித்துப் போற்றும் அரிய புகழையும் ஈட்டிக் கொடுத்தது. இவருடைய இலக்கியக் கட்டுரைகள் வெளியானபோது இவரின் பெரும்கீர்த்தி தமிழுலகில் கொடிகட்டிப் பறந்தது.

சுவடிகள், கல்வெட்டாய்வுகள், பண்டைய நூலுரைகள், கர்ண பரம்பரை, பல வழிகளாகக் கிடைத்த பழைய தனிப்பாடல்களை எல்லாம் 'கடவுள் வாழ்த்தியல்', 'அறவியல்', 'பொருளியல்' என முப்பெரும் பகுதிகளாக அமைத்து, முறைபடத் தொகுத்துப் 'பெருந்தொகை' என ஐயங்கார் பதிப்பித்த அரிய நூல், ஆய்வுக்குரிய செய்திகள் பலவற்றை அறிவிப்பதாக அமைந்ததால், ஆராய்ச்சியாளர் பலராலும் புகழப் பெற்றது. இலக்கிய ஆய்வாளருக்கும் வரலாற்று ஆய்வாளருக்கும் பெரிதும் உதவக் கூடிய 'நூற் பொருட் குறிப்பு', 'நிகண்டு அகராதி', 'திருக்குறள் பரிமேலழகர் உரை' ஆகியவற்றைப் பதிப்பித்து வெளியிட்டுப் பதிப்புத்துறைக்குப் பெருமை சேர்த்தார்.

## கௌரவ ஆசிரியர் பணி

தமிழர் கல்விச்சங்கத்தின் சார்பாக நன்கு நடைபெற்று வந்த 'தமிழர் நேசன்' (Tamilian Friend) என்ற மாதாந்திரப் பத்திரிகைக்கு அச்சங்கத்தின் தலைவரான டி. சதாசிவ ஐயரவர்கள் விரும்பியவாறு கௌரவ ஆசிரியராகச் சில ஆண்டுகள் இருந்தார். அப்போது அவர் பல அரிய கட்டுரைகளை எழுதி வெளியிட்டார்.

இதுபோன்றே, சென்னையில் நடைபெறும் 'கலைமகள்' என்ற அரிய பத்திரிகையின் கௌரவ ஆசிரியர்களுள் இவரும் ஒருவராக இருந்தார். அதுமட்டும் அல்லாமல் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்க்கல்விச் சபை, பரீக்ஷசபைகளிலும் அங்கத்தினராயிருந்த சிறப்பும் இவருக்குண்டு.

## பெற்ற பட்டங்கள்

சென்னை சர்வகலாசாலையின் வேண்டுதலுக்கு இணங்கி, 1929ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம், இலக்கியங்களும் சாசனங்களும் ஒன்றிற்கொன்று உதவிவரும் நெறியை விளக்கி, ஐயங்கார் நான்கு சொற்பொழிவுகள் நிகழ்த்தினார். அறிஞர் பலர் குழுமியிருந்த அப்பேரவை, ஐயங்காரின் சிறந்த புலமையையும் உரையாற்றும் வளமையையும் போற்றிப் பாராட்டியதோடு அல்லாமல் 'முதுபெரும் புலவர்' எனச் சிறப்புச் செய்தது.

தமிழ்ப் பேரகராதிப் பணியை நிறைவு செய்த வேளையில் ஐயங்காரின் அயராத உழைப்பையும் ஆழ்ந்த புலமைத் திறத்தையும் பணியைப் பாங்குற முடித்த பான்மையையும் எண்ணிப் பார்த்து, 'ராவ் சாகேப்' என்னும் பட்டத்தை அரசாங்கம் வழங்கிக் கௌரவித்தது. இப்பட்டம் 1939ஆம் ஆண்டு வழங்கப்பட்டது.

இவ்வாறு முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழாராய்ச்சித் துறையை விசாலப்படுத்திய மு.இராகவையங்கார், தம் சொந்த ஊரான இராமநாதபுரத்தில் ஓய்வு எடுத்துக் கொண்டு இருக்கையில், சென்னை லயோலாக் கல்லூரியில் தமிழ்த்துறையின் கௌரவ விரிவுரையாளராக அழைக்கப்பட்டார். லயோலாக் கல்லூரியில் நான்கு மாதம் மட்டுமே பணியாற்றினார். அப்போது திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் (இப்பொழுதுள்ள கேரளப் பல்கலைக் கழகம்) அழகப்பச் செட்டியாரவர்கள் தமிழாராய்ச்சிப் பேராசிரியர் இடம் ஒன்றைப் பெரும் பொருட் செலவில் ஏற்படுத்தி 1944ஆம் ஆண்டின் இறுதியில் ஐயங்காரைத் தமிழ்ப் பேராசிரியராக நியமித்தார்.

திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகப் பேராசிரியர் பதவியில் ஐயங்கார் இருந்தபோது, அவர் பல சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவற்றுள் சிலவற்றை "Some Aspects of Kerala from Tamil Literature" என்று ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துத் திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகப் பிரசுரமாக வெளியிட்டார். ஐயங்கார் கேரள நாட்டில் பணியாற்றிய நேரம், சேர வேந்தர்கள்

பற்றியுள்ள செய்யுள்களை, தம் விளக்க உரையுடன் "சேரவேந்தர் செய்யுட் கோவை" என்ற தலைப்பில் இரண்டு பாகங்களாக வெளியிட்டார். திருவிதாங்கூர்அரண்மனைச் சுவடி நிலையத்திலிருந்து கிடைத்த "அரிச்சந்திர வெண்பா" என்ற அரிய நூலைத் தம் உரையுடன் அச்சிலேற்றினார். ஐயங்கார் 1951ஆம் ஆண்டு திருவிதாங்கூர்ப் பேராசிரியர் வேலையிலிருந்து விலகினார்.

ஐயங்காரைத் தமிழாராய்ச்சியில் ஈடுபடுத்திய பாண்டித் துரைத் தேவரும், அவரின் தந்தை பொன்னுச்சாமித் தேவரும் சிறந்த கவிகளாகவும் செந்தமிழ் வளர்த்த செல்வர்களாகவும் திகழ்ந்தவர்கள். ஐயங்கார் "செந்தமிழ் வளர்த்த தேவர்கள்" என்ற பெயரால் தேவர்களின் சரிதையை எழுதி வெளியிட்டார். சேதுபதிகளின் செல்வாக்கும் தமிழ் வளர்த்த முறையும் எக்காலத்திலும் நிலைத்திருக்கும்படி அந்நூலை எழுதினார். அந்நூலைச் சென்னை அரசாங்கத்தார் பள்ளி இறுதித் தேர்வுக்கு ஒரு துணைப் பாடமாக நியமித்தார்கள். அதன் மூலம் ஐயங்காருக்குக் கிடைத்த ரூபாய் இரண்டாயிரத்தையும் மூலதனமாகக் கொடுத்து, அதன் வருவாயில் இருந்து, தம் சொந்த ஊரான இராமநாதபுரத்திலுள்ள ராஜா உயர்நிலைப் பள்ளியில் ஐந்தாம் பருவத்தில் சிறப்பாகத் தேர்ச்சி பெறும் மாணவருக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கும்படி ஏற்பாடு செய்தார்.

சிரமம் என்பதைச் சிறிதும் அறியாமல் இடையறாது தமிழ்ப்பணி புரிந்து வந்த ஐயங்கார் 1954ஆம் ஆண்டில் தம் உயிருக்குயிராய் நேசித்து வந்த ஆசாரமும் தரும சிந்தையும் விசால புத்தியும் நிறைந்த மனைவியையும் மூத்த குமாரனையும் மருமகளையும் இழக்கும்படி நேர்ந்தது. இந்நிகழ்ச்சி அவருடைய உள்ளத்தில் பெரும் சோகத்தைத் தோற்றுவித்தது. இச்சோகத்தை வெளியிடும் வகையில் 'கையறுநிலை' என்ற இரங்கற்பாவைப் பாடினார். அப்பாடலானது இவரது அறுபதாம் ஆண்டு நிறைவு நாளில் வெளியான 'ஆராய்ச்சித் தொகுதி' என்ற நூலின் அனுபந்தத்தில் வெளியானது. பெரும் சோகத்தில் ஆழ்ந்திருந்த ஐயங்கார் 1954ஆம் ஆண்டில் இருந்து மானாமதுரையில் தம் இளைய குமாரனுடன் வாழ்ந்து வந்தார்.

1955ஆம் ஆண்டு காரைக்குடி கம்பன் விழாவுக்குத் தலைமை தாங்கும்படி ஐயங்காரைச் சா. கணேசன் அழைத்தார். கம்பன் விழாவில் கம்ப நாடரின் தெய்வப்புலமை பற்றி ஐயங்கார் ஒரு சிறப்பான ஆய்வுரை நிகழ்த்தினார். தமிழ் எழுத்தாளர்கள், கவர்னர் ஸ்ரீபிரகாசா மூலம் கேடயம் அளித்து அவரைக் கௌரவித்தார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தார் கம்ப இராமாயணப் பதிப்பாசிரியர் குழுவில் உறுப்பினராகப் பணியாற்ற அழைத்ததற்கு இணங்கி 1956 முதல் 1959 ஆம் ஆண்டு வரை ஐயங்கார் பாலகாண்டத்திற்கும் சுந்தர காண்டத்திற்கும் சில பகுதிகளுக்குச் சிறப்புரை எழுதிக் கம்பராமாயணப் பிரசுரப் பணியில் ஈடுபட்டுத் தம் துயரை மறந்தார்.

ஐயங்காரின் சதாபிஷேகத்தைச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும் என்ற அவா நிறைவேறுமோ என்னும் சந்தேகம் அவரின் உடல் நிலையின் காரணமாகத் தோன்றியது. ஐயங்காரின் 80ஆம் ஆண்டு நிறைவு 1958ஆம் ஆண்டில் கொண்டாடப் பெற்றது. அப்போது தமிழ்ச் சொற்களின் வினை முதனிலைகளை எடுத்தெழுதி, அவை இயங்கும் விதங்களைப் பாகுபாடு செய்து, அவற்றிற்கு ஒரு விதியையும் கண்டு, தமிழ் மொழியின் இயற்கை மேம்பாட்டைக் காட்டி, "வினைத்திரிபு விளக்கம்" என்ற நூலை நூற்பாவும் விளக்கவுரையுமாக இயற்றினார். இந்நூல் 80ஆம் ஆண்டு நிறைவு ஞாபக வெளியீடாக அச்சிடப் பெற்றது.

ஐயங்காரின் அறுபதாம் ஆண்டு நிறைவுக்குப் பின் புத்தக வடிவில் இரு நூல்கள் வெளிவந்தன. அவை, இலக்கியக் கட்டுரைகள், கட்டுரை மணிகள் என்பன.

## மறைவும் நிறைவும்

கட்டுரை மணிகள் என்ற நூலில் 13ஆவது கட்டுரையான 'களப்பிரர்' கட்டுரையை எழுதி முடிக்கையில் ஐயங்கார் நோய்வாய்ப் பட்டார். தமது இறுதி மூச்சுவரை தமிழ்த் தொண்டாற்றிய முதுபெரும் புலவர், ராவ் சாகேப் மு. இராகவையங்கார் 1960ஆம் ஆண்டு தமிழன்னையின் புகழொளியில் கலந்து நிலைபெற்றார். 02.02.1960ஆம் நாளன்று தமது 82ஆவது வயதில் இயற்கை எய்தினார்.

பெரும்புலவர் மு. இராகவையங்காரின் தமிழ்த் தொண்டு போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியது. இப்பேரொளியை ஏற்றுவித்ததோடு, அணையாமலும் காத்து, ஆதரவு நல்கித் தமிழ்த் தொண்டாற்றிய பாண்டித்துரைத் தேவருக்குத் தமிழரும் தமிழ்நாடும் என்றென்றும் நன்றி பாராட்ட வேண்டும்.

# துணை நூல்கள்

1. அருந்தொண்டு ஆற்றிய தமிழக அந்தணர்கள், பகுதி (3), கே.சி. லட்சுமி நாராயணன், தாம்ப்ராஸ் ஹெரிடேஜ் புராஜக்ட், சென்னை, பதிப்பு, 2002.
2. தமிழ் வளர்த்த நல்லறிஞர்கள், குன்றக்குடி பெரிய பெருமாள்.
3. ஆராய்ச்சித் தொகுதி, மு.இராகவையங்கார், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1984.
4. தேதி சொல்லும் சேதி- தொகுதி 4, கவிஞர் செவ்வியன், எம்.எல்.எம். பிரிண்டர்ஸ், 2001.

**ஐயங்காரின் ஆராய்ச்சி நூல்களாவன**

1. **வேளிர் வரலாறு:** இந்நூல் சென்னைச் சட்டசபை அங்கத்தினராக விளங்கிய இராமசாமிச் செட்டியாரின் ஆங்கில முகவுரையுடன், மதுரைத் தமிழ்ச் சங்கப் பிரசுரங்களுள் ஒன்றாக வெளிவந்தது. இராஜராஜேஸ்வர சேதுபதிக்கு உரிமையாக்கப் பெற்றது இந்நூல். இருபதிப்புப் பெற்றது.
2. **தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி :** இந்நூலின் சிறப்புக் கருதி, சென்னைப் பல்கலைக்கழக வித்வான் தேர்விற்குப் பல்லாண்டுகளாகப் பாடமாக வைக்கப்பட்டு இருந்தது. இந்நூலும் மதுரைத் தமிழ்ச்சங்கப் பிரசுரங்களுள் ஒன்றாய் இருபதிப்புப் பெற்றது.
3. **சேரன் செங்குட்டுவன் :** கடைச்சங்க காலத்துப் பெரு வேந்தனாகத் திகழ்ந்த சேரன் செங்குட்டுவனின் வரலாற்றைக் கூறுவதோடு, சங்க நூல்களையும் பிற கருவிகளையும் துணைக் கொண்டு எழுதப்பட்ட அரியநூல் ஆகும். இந்நூல், சென்னை, மைசூர், ஆந்திர பல்கலைக் கழகங்களிலும் இலங்கையிலும் பலமுறை தமிழ்ப் பாடமாக நியமிக்கப் பெற்றுச் சிறப்புப் பெற்றது. இந்நூலும் பாண்டித்துரைத் தேவருக்கு உரிமையளிக்கப்பட்டது. நான்கு பதிப்புகளை இந்நூல் பெற்றுள்ளது.
4. **ஆழ்வார்கள் காலநிலை :** திருமால் அடியார்களாகிய ஆழ்வார்களின் காலங்களைப் பற்றிப் பல்லாண்டுகள் ஆராய்ந்து கண்ட அரிய முடிவுகளை இந்நூலில் காணமுடிகிறது. வெளியான முதற்பகுதி சென்னைப் பல்கலைக்கழகத்தாரால் இளங்கலை (B.A.) வகுப்புப் பாடமாக இருமுறை நியமிக்கப் பெற்றது.
5. **சாசனத் தமிழ்க்கவி சரிதம் :** பண்டைப்புலவர் பெருமக்களைப் பற்றிச் சாசன வாயிலாக அறியப்படும் செய்திகளை எல்லாம் இந்நூலில் அறியலாம். எண்பதின்மர்க்கு மேற்பட்ட புலவர் வரலாறுகள் இதில் பேசப்பட்டுள்ளன. இவர்களுள் இதுவரை அறியப்படாத புலவர்கள் பலராவர். இந்நூல் ஐயங்கார் தம் தந்தையாரின் உரிமையாகச் சமர்ப்பிக்கப் பெற்றது.

## பதிப்பித்த நூல்கள்

செந்தமிழ்ப் பத்திரிகை நடத்திய காலத்தில் அப் பத்திரிகையில் ஆராய்ந்து பதிப்பித்த சிறு நூல்களாவன :

1. நரிவிருத்தம் (அரும்பதவுரையுடன்)
2. சிதம்பரப் பாட்டியல் (உரையுடன்)
3. திருக்கலம்பகம் (உரையுடன்)
4. விக்கிரம சோழனுலா
5. சந்திராலோகம்
6. கேசவப் பெருமாள் இரட்டை மணிமாலை

இவையன்றி ஐயங்கார் சொந்தத்தில் ஆராய்ந்து வெளியிடப் பட்டனவும் படாதனவுமான நூல்களும் உள்ளன.

1. பெருந்தொகை (முதற்றொகுதி): பண்டை நூலுரைகள், சுவடிகள், சாசனங்கள், கர்ணபரம்பரை முதலிய பல வழியாகவும், கிடைத்த பழைய தனிப்பாக்களை எல்லாம் கடவுள் வாழ்த்தியல், அறவியல், பொருளியல் என முப்பெரும் பகுதிகளாக அமைத்து முறைப்படத் தொகுக்கப் பெற்றது. இந்நூல் அரியபல செய்திகளை அறிவிப்பதாதலின் ஆராய்ச்சியாளர்கள் பலராலும் புகழப்பட்டது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் பதிப்பித்து வெளியிடப்பெற்றது. இன்பவியல், ஒழிபியல்கள் இரண்டும் அடங்கிய இதன் இரண்டாம் பாகம் இன்னும் அச்சிடப் படவில்லை.

2. நூற்பொருட் குறிப்பு : இறையனார் களவியலுரை, குறுந்தொகை, நற்றிணை, வீரசோழியம், திருக்கோவையார், தேவாரம், நாலாயிரப் பிரபந்தம் முதலிய நூல்களுக்கு ஐயங்காரால் கருத்துகள் முயன்று தொகுக்கப்பெற்றது. நூலாராய்ச்சியாளர்களுக்கும் சரித்திர ஆராய்ச்சியாளருக்கும் பெரிதும் உதவக்கூடிய கருவியாக இந்நூல் விளங்குகிறது. இம்மாதிரி வெளிவந்த பொருட் குறிப்புத் தொகைநூல்களுள் இது முதலாவதாகும்.

3. நிகண்டகராதி : திவாகரம், பிங்கலந்தை, சூடாமணி, உரிச்சொல் என்ற நிகண்டுகள் நான்கிலும் கண்ட சொற்களுக்கு எல்லாம், அவற்றின் பொருள்களும் இடங்களும் தந்து, அகராதி வரிசையில் அமைக்கப்பட்டுள்ளது இந்நூல். தமிழ்ப் பேரகராதி உருவாக்கத்தில் ஐயங்கார் தீவிரமுயற்சியில் ஈடுபட்டு இருந்தபோது, இத்தகைய கருவியொன்று இன்றியமையாதது என்பதனை உணர்ந்து, பெருமுயற்சியுடன் பல மாதங்கள் உழைத்து இதனை முடித்தார். ஆனால், இந்நூலானது அச்சிடப்படவில்லை. இவ்வாறே திவாகர நிகண்டும் பற்பல ஏட்டுப்பிரதிகளைக் கொண்டு, எண்ணற்ற திருத்தங்களுடன் அச்சுக்குத் தயாரான நிலையில் வைக்கப் பெற்றுள்ளது.

4. **திருக்குறள், பரிமேலழகருரையுடன் : (கையடக்கப் பதிப்பு)**

கையடக்கப் பதிப்பாக வெளிவந்த இந்நூல் அனைவராலும் வரவேற்கப்பட்டது. இதில் ஐயங்கார் தந்த அரிய பாடங்களையும் குறிப்புகளையும் அனைத்துக் குறள் பதிப்பாளர்களும் ஏற்று வெளியிடலாயினர். முரா. கந்தசாமிக் கவிராயர் என்பவரின் உதவியால் இந்நூல் பதிப்பு நிறைவேறியது. இந்நூலின் இரண்டாவது பதிப்பும் வெளிவந்துள்ளது.

## ஆசிரியரின் அறுபதாம் ஆண்டு நிறைவுக்குப் பின் புத்தக வடிவில் வெளிவந்துள்ள நூல்கள்

1. **இலக்கியக் கட்டுரைகள் :** 15 கட்டுரைகளின் தொகுப்பு. சென்னை, அண்ணாமலை, திருவிதாங்கூர், பஞ்சாப் பல்கலைக் கழகத்தினராலும் ஹிந்திப் பிரசார சபையாராலும் தேர்வுக்குரிய பாடமாக நியமிக்கப் பெற்றது.

2. **வினைத் திரிபு விளக்கம் :** ஆசிரியரின் 80 ஆம் ஆண்டு நிறைவு ஞாபக வெளியீடு.

3. **கட்டுரை மணிகள் :** சீரிய 14 கட்டுரைகளின் தொகுப்பு.

இவரது ஷஷ்டியப்த பூர்த்தியின் நினைவுச் சின்னமாக இவரது ஆராய்ச்சிக் கட்டுரைகள் (35) 'ஆராய்ச்சித் தொகுதி' என்ற தலைப்பில் இவரது புதல்வர்கள் இருவராலும் பதிப்பிக்கப்பட்டது.

## ஐயங்காரின் அச்சிடப்படா நூல்கள்

1. 'தெய்வப் புலவர் கம்பர்' பற்றிய கட்டுரைகள்
2. 'இலக்கியச் சாசன வழக்காறுகள்' என்னும் தலைப்பிலுள்ள சென்னைப் பல்கலைக்கழகச் சொற்பொழிவுகள்.
3. 'கேரளமும் தமிழிலக்கியமும்'- கேரள நாட்டிற்கும் மலையாள மொழிக்கும் தமிழோடு உள்ள தொடர்பினை விளக்குவது.
4. 'பெருந்தொகை' (இரண்டாம் பாகம்) : பண்டைய நூலுரைகள், சுவடிகள், சாஸனங்கள் முதலிய பல வழிகளாலும் கிடைத்த பாடல்களின் தொகுதி. இன்பவியல், ஒழிபியல் பகுதிகள் இதில் அடங்கும்.
5. **பரிசோதித்து வைத்துள்ள பழந்தமிழ் நூல்கள்**
   1. திவாகரம்
   2. தமிழ் நாவலர்

சரிதை ஏட்டுச் சுவடிகளைக் கொண்டு பரிசோதித்துச் செப்பம் செய்யப் பெற்றவை. திருந்திய பாடல்களுடனும் பொருட் குறிப்புகளுடனும் கூடியவை.

# மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும்

பெ.சு. மணி

பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவில் தோன்றிய தேசிய உணர்ச்சி, இந்திய மொழிகள் பலவற்றின் புத்துணர்ச்சிக்கு ஊக்கமளித்தது. இது போலவே இலக்கிய மறுமலர்ச்சியும், தேசிய வரலாற்றுணர்ச்சிக்குப் புத்தெழுச்சியைத் தூண்டியது.

தமிழ் ஞானத்தோடு, ஆங்கில மொழியறிவு பெற்ற தமிழறிஞர்கள் "பாஷாபிமானம், தேசாபிமானம், மதாபிமானம்" எனப் பேசத் தொடங்கினர்.

'மாயூரம் முன்சீப்' வேதநாயகம் பிள்ளை (1826-1889), பேராசிரியர் 'மனோன்மணீயம்' சுந்தரம் பிள்ளை (1855-1897), யாழ்ப்பாணம் சி.வை. தாமோதரம் பிள்ளை (1832 - 1901), 'பரிதிமாற்கலைஞர்' வி.கோ. சூரியநாராயணசாஸ்திரியார் (1870 - 1903) முதலானோர் 'பாஷாபிமானம், தேசாபிமானம்' என்று குறிப்பிட்டு அவற்றின் தேவையை எடுத்துரைத்துள்ளனர். இவற்றுள் சிலவற்றை இங்கு அறிவோம்.

பண்டைய அரிய ஏட்டுச் சுவடிகளைப் பதிப்பிக்கப் புரவலர்கள் முன்வர வேண்டும். அவ்வாறு முன்வருவதே, "தேசாபிமான, மதாபிமான, பாஷாபிமான"த்திற்குரிய செயலாகும் என்பதைத் தமிழ்ப் பேரறிஞர் சி.வை. தாமோதரம் பிள்ளை பின்வருமாறு சுட்டிக் காட்டியுள்ளார்.

"சீமான்களே! இவ்வாறு இறந்தொழியும் நூல்களில் உங்களுக்குச் சற்றாவது கிருபை பிறக்கவில்லையா? ஆச்சரியம்! ஆச்சரியம்! அயலான் அழியக் காண்கினும் மனந்தளும்புகின்றதே! தமிழ் மாது நுந்தாயல்லவா? இவள் அழிந்தால் நமக்கு என்ன என்று வாளாவிருக்கிறீர்களா? தேசாபிமானம், மதாபிமானம். பாஷாபிமானம் இவையில்லாதார் பெருமையும் பெருமையாமோ? இதனைத் தயைகூர்ந்து சிந்திப்பீர்களாக"[1].

1891இல் தாமே பதிப்பித்த மனோன்மணீய கவிதை நாடகத்தில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை நாடக மாந்தர் வாயிலாகப் "பாஷாபிமானம், தேசாபிமானம்" குறித்துப் பின்வருமாறு கூறுகிறார்.

"பாஷாபிமானமும் தேசாபிமானமும்
பொருளெனக் கருதா தருணிறை நுமது
தாய்முலைப் பாலுடன் வாய்மடுத் துண்டநல்
ஆண்மையுஞ் சுதந்திரக் கேண்மையு மொருங்கே
நிந்தை வஞ்சியர்செய வந்தநுங் கோபம்
முற்று மியல்பே."

தமிழ்மொழியை அலட்சியம் செய்து ஆங்கிலத்தை மட்டுமே தழுவும் போக்கு "சுதேசாபிமானமும், சுபாஷாபிமானமும்" அற்றது என்பதை வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பின்வருமாறு சாற்றியுள்ளார்.

"இக்காலத்தில் ஆங்கில பாஷை கற்ற தமிழ் மக்களிற் பலர் தமது தாய்மொழியான தமிழைப் படிக்க வேண்டுவது அவசியமற்ற தென்றும், தமக்கு வேண்டிய விஷயங்கள் ஆங்கிலத்திலேயே அகப்படு கின்றன வென்றும் பல திறம்படக் கூறுவர். அவர் ஆங்கிலமொழிச் சிறப்பு மட்டிற் கூறியமைவதே நன்றாகுமன்றித் தமிழ் கற்க வேண்டியதவசிய மன்று என்பது அறியாமையோடு கூடிய துணிந்துரையாம். இது சுதேசாபிமானமும் சுயபாஷாபிமானமு மற்றவர் கூற்றாகும்."[2]

தேசாபிமானம், மதாபிமானத்திற்கு மூலமாகும் எனும் கருத்தைத் தமிழ் வளர்த்த சேதுபதிகள் மரபைச் சார்ந்தவரும், மு. இராகவையங்கார் புரவலருமான பாண்டித்துரைத்தேவர் (1867 - 1911) வெளியிட்டுள்ளார்.

தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையின் இருபத்திரண்டாவது ஆண்டு விழாவில் (1905) 'கல்வி' எனும் தலைப்பில் பாண்டித்துரைத்தேவர் ஆற்றிய பேருரையின் செய்திக்குறிப்பு மதுரை 'விவேகபாநு'வில் பின்வருமாறு வெளிவந்துள்ளது.

"தன்னிகரல்லாத தலைமை பெற்றிருந்த (தமிழின்) மாண்பையும், இக்காலத்து ஆங்கிலம் கற்றார் சிலர் அதனை அவமதித்தல் அடாச் செய்கையே என்பதனையும், சுயபாஷாபிமானமே, ஏனைத்தேசாபிமானம், மதாபிமானங்கட்கு மூலமாகுவதென்பதனையும் வரிசைக் கிரமமாகக் கொண்டு கடல் மடை திறந்தாற்போல் திவ்யப் பிரஸங்கஞ் செய்து சபையார் குதூகலிக்கச் செய்தார்கள்."[3]

"பாஷாபிமானம், தேசாபிமானம், மதாபிமானம்" எனும் பொதுப் பார்வை, பிரிட்டிஷ் ஏகாதிபத்ய எதிர்ப்பு தேசிய அரசியல் பார்வையாக மாறிய நிலையில் தமிழறிஞர்களில் சிலர் 1905-இல் வீறு

கொண்டெழுந்த 'வந்தேமாதர அரசியல் இயக்கத்தை,' வரவேற்கத் தொடங்கியதை மகாகவிபாரதியார் "ஓர் முக்கியமான அறிகுறி" என்று போற்றிப் பாராட்டினார். தமிழ்ப்புலவர் மரபும் தேசிய மரபும் இணைய வேண்டும் என அவாவி நின்றார், போர்க்களப்புலவர் பாரதியார்.

தமிழ்ப் பெரும் புலவர்களின் தேசியச் சிந்தனையை வரவேற்றுப் பாரதியார் தமது 'இந்தியா' வார இதழில் "ஓர் முக்கியமான அறிகுறி" (A SIGN OF THE TIMES) எனும் இருமொழித் தலைப்புகளில் பின்வருமாறு எழுதினார்.

"காலாபிவிர்த்திக் கேற்பவே பல முக்கிய அறிகுறிகள் பல திசைகளிலும் வெளிப்பட்டு வருகின்றன. இந்திய ஜனங்கள் மனதிலே புதிய ஆவல்கள் திளைக்கின்றன. இதுவரை தேசப் பொதுமை சம்பந்தப்பட்ட மட்டிலே அதிக சிரத்தை எடுத்துக்கொள்ளாத ஜனங்களெல்லாம் இப்போது ராஜதந்திர விவகாரங்களைக் கவனிக்கத் தொடங்கினார்கள். சென்ற தடவை "விவேக பாநு" பத்திரிகை நமது பார்வைக்கு வந்தது. அதிலே சில விஷயங்களைப் படித்துப் பார்த்தவுடனே நமக்கு ஈசனிடம் அடங்காத நன்றி அறிவு பொங்கி விடுவதாயிற்று. இலக்கண விஷயங்களிலே நாளெல்லாம் கழித்த பண்டித சிரோன்மணிகள் இப்போது ராஜாங்கத்தாரின் செலவு கணக்குகளிலே சிரத்தை எடுக்கத் தொடங்கி விட்டார்கள்."[4]

மேலே பாரதியார் குறிப்பிட்ட 'விவேக பாநு" விஷயங்கள் சோழவந்தான் வித்துவான் அரசஞ் சண்முகனாரின் (1868 - 1915) முப்பத்திரண்டு வரிகளில் அமைந்த வந்தே மாதரம் மந்திரச் செய்யுளும், பெரும்புலவரும் தேசியவாதியும், 'விவேக பாநு' ஆசிரியருமான மு.ரா. கந்தசாமிக்கவிராயரின் முப்பத்தாறு வரிகளில் இயற்றப் பெற்ற வந்தே மாதர மந்திரச் செய்யுள் என்பனவுமாகும்.[5]

மேற்குறிப்பிட்ட இரு கவிதைகளும் 'விவேக பாநு' வில் 1906 நவம்பரில் வெளிவந்தன. பாரதியார் இவ்விரு கவிதைகளையும் 'இந்தியா'வில் (24-11-1906) மறு வெளியீடுகளாகப் பதிப்பித்துப் பெருமைப் படுத்தினார்.

"கல்வித் தாய்க்கு மட்டிலுமே இதுவரை வழிபாடு இயற்றி வந்த இவர் இப்போது பூமித்தாய்க்குத் தொண்டு புரிவது அதைக்காட்டிலும் உயர்வாகுமென்பதை அறிந்து கொண்டார்" என்றும், "பாரததேவியின் தெய்வீக விழிகளினின்றும் உதிரும் கண்ணீர்கள் இவரது நெஞ்சை

உருக்கி எமது தாய்க்கு அடிமையாக்கி விட்டன" என்றும் அரசஞ் சண்முகனாரைப் பாராட்டினார், பாரதியார்.

ஆங்கில அரசாட்சிக்கு எதிராகக் "கிளர்ச்சி செய்தல் தகாது - இந்நாட்டவரும் (தமிழ்நாட்டவர்) வடநாட்டவரும் ஒருங்கு குழுமித் தாமே தமது நாட்டை அரசுபுரிதல் கனவிலும் கைகூடாது" என்று 1935இல் மறைமலை அடிகள் (1876 - 1950) கூறியுள்ளார்.[6]

ஆனால், இவரும் கூட பண்டிதர் நாகை வேதாசலம் பிள்ளையாக இருந்த காலத்தில் 1916இல் 'சுதேச முயற்சி வாழ்த்து' எனும் தலைப்பில் இருபத்தெட்டு வரிகளில் தேசிய நோக்குடன் 'இந்திய மாதே!' என விளித்துக் கவிதை இயற்றியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.[7]

இவ்வாறு மொழிப்பற்று, நாட்டுப்பற்றுடன் விளங்கிய தமிழறிஞர்களில் ஆராய்ச்சி மேதை மு. இராகவையங்காரும் (1878 - 1960) ஒருவராவர்.

**காலமும் களமும்**

"வழிவழியாகத் தமிழ்ப் புலமையோடு பல்வகையாற்றல்கள் பெற்ற வைணவச் சான்றோர் குடும்பத்தில் ஒரே புதல்வராய் பேராசிரியர் பிறந்தார். தந்தையார் சதாவதானம் முத்துசாமி ஐயங்கார் இராமநாதபுரம் சேது வேந்தர்களின் சமஸ்தான வித்துவானாகவும் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பெருமக்கள் பல்லோர்க்கும் புலமை கொளுத்திய ஆசானாகவும் திகழ்ந்த பெரியார் ஆவர். பேராசிரியரின் பதினாறாவது பிராயத்திலேயே தந்தையார் தேக வியோகம் அடைந்ததால் அவர் விட்டுச் சென்ற இளைஞரின் பராமரிப்பை, அவர்தம் சீடர், அவர்பால் பேரன்பு வைத்திருந்த சேதுவேந்தர் குலத் தோன்றல் பாண்டித்துரைத்தேவரவர்களே மேற்கொண்டார். இவ்வாறு மு. இரா.வின் பேரன் பேராசிரியர் ஜே. பார்த்தசாரதி எழுதியுள்ளார்.[8]

பாலவநத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத்தேவர், அக்காலத்தில் சேதுபதியாய் ஆட்சி செலுத்திய இராமநாதபுரம் மன்னர் பாஸ்கரசேதுபதி (1868 -1903)யின் ஒன்று விட்ட சகோதர முறையினர். பாஸ்கர சேதுபதி சமயப்பற்று, மொழிப்பற்று, நாட்டுப்பற்று மூன்றிலும் தோய்ந்து உறைந்தவர். இவ்வழியில் பாண்டித்துரைத் தேவரும் சகோதரருடன் இணைந்தவர். இருவரும் இந்திய தேசிய காங்கிரசின் ஆதரவாளர்களாகத் திகழ்ந்தவர்கள்.

சேது சமஸ்தானச் சூழல், பல்துறை அறிஞர்களைக் கொண்டிருந்தது. பாண்டித்துரைத் தேவர் இலக்கியவாராய்ச்சிகளை ஊக்குவிக்க அறிஞர்கள் புடைசூழவிருந்த சூழல் 'மு. இரா'வின் மொழிப்பற்று, பல்துறை இலக்கியவாராய்ச்சிப் புலமை, நாட்டுப்பற்று செழித்தோங்க உறுதுணையாக அமைந்தது.

இக்காலத்தில் 'மு. இரா'வின் இலக்கிய ஆளுமை வளர்ச்சிக்குக் களம் அமைத்துக் கொடுத்தது மதுரைத் தமிழ்ச் சங்கம்.

## மதுரைத் தமிழ்ச்சங்கம்

1901 மே 24இல் மதுரையில் சென்னை மாநில அரசியல் (காங்கிரஸ்) மாநாடு கூடியது. மாநாட்டின் வரவேற்புக்குழுத்தலைவர், பாண்டித்துரைத்தேவர். மாநாட்டின் முடிவில் தமிழ்ச் சங்கம் நிறுவுவது பற்றிய தமது கருத்தை வெளியிட்டார், பாண்டித்துரைத்தேவர். தேவருடன் மாநாட்டிற்கு வந்திருந்த தமிழறிஞர்கள் தேவர் அறிவிப்பை ஒரு மனதாகப் பாராட்டி வரவேற்றனர்.

1901 செப்டம்பர் 14இல் மதுரை சேதுபதி உயர்நிலைப்பள்ளி மண்டபத்தில் கூடிய தமிழ்ப் பெரும் புலவர்கள் அவையில் மதுரைத் தமிழ்ச்சங்கம் நிறுவப்பட்டது. சேது சமஸ்தான ஆஸ்தான வித்துவான் ரா. இராகவையங்கார், டாக்டர் உ.வே. சாமிநாதையர், வை.மு.சு. கோபாலராமாநுஜாசாரியார், வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார், சோழவந்தான் அரசஞ் சண்முகனார், பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், திருமயிலை சண்முகம் பிள்ளை, மு. இராகவையங்கார் முதலான தமிழ்ப் பெரும் புலவர்கள் தொடக்க விழாவில் கலந்து கொண்டனர். இந்த அமைப்போடு செந்தமிழ்க் கல்லூரி, பாண்டியன் புத்தக சாலை, நூல் ஆராய்ச்சித்துறை, அச்சகம் முதலானவையும் அமைக்கப்பட்டன.

வடமொழி - தென்மொழிப் புலமை பெற்ற நாராயண ஐயங்கார், மகாவித்துவான் ரா. ராகவையங்கார், சே. சுப்பிரமணியக் கவிராயர், சே. அருணாசலக் கவிராயர், சே. கந்தசாமிக்கவிராயர், சுந்தரேஸ்வர ஐயர், பி. கோபாலையர் முதலான பேரறிஞர்களுடன் மு. இராகவையங்காரும் இணைந்து மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பணியாற்றத் தொடங்கினர்.

மதுரைத் தமிழ்ச் சங்கம் முந்தைய மூன்று தமிழ்ச்சங்கங்கள் வரிசையில் நான்காம் தமிழ்ச்சங்கமாகவும் கொண்டாடப் பெற்றது.

பாரதியார் பாண்டித்துரைத் தேவர் முயற்சியைப் பின்வருமாறு பாராட்டியுள்ளார்.

''மிஸ்டர் பாண்டித்துரைத் தேவரவர்களும் பிறரும் மதுரையில் தமிழ்ச்சங்கம் ஸ்தாபிக்க வேண்டுமென்று யோசித்தது வெகுநேர்த்தியான யோசனை''[9].

தொடக்கம் முதல் பாண்டித்துரைத்தேவர் அவர்களே தமிழ்ச் சங்கத்தின் ஆயுள்காலத் தலைவராக இருந்து வந்தார்கள்.

1902ஆம் ஆண்டு நவம்பர் முதல் 'செந்தமிழ்' என்னும் தமிழ் ஆராய்ச்சி இலக்கிய இதழ் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வெளியீடாக வந்தது. பேராசிரியர் 'மு. இரா'வுக்கு அத்தை மகனும், அவருக்கு மூத்தவராகவும், அறிவுத்துறையில் ஆதர்சமாகவும் விளங்கிய பெரும் புலவர் ரா. இராகவையங்கார். 'செந்தமிழ்' இதழின் முதலாசிரியராகப் பணியாற்றினார். இவரைத் தொடர்ந்து 1904 முதல் 1912 வரையில் மு. இராகவையங்கார் எட்டாண்டுகள் ஆசிரியராகவிருந்து துறை தோறும் துறை தோறும் அரிய ஆய்வுக்கட்டுரைகளை எழுதி வந்தார்.

ஓர் ஆய்வாளருக்கு அமைய வேண்டிய ஆய்வு நெறிமுறைகளை வகுத்தளித்ததில் இவருடைய பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. உலகப் பெருங்கவிஞர் மில்டன் வாழ்க்கை வரலாற்றை எழுதியதில் டாக்டர் ஜான்சன் குறிப்பிட்ட பின்வரும் கருத்துகள் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

"To recall vagrant inattention, to stimulate sluggish indifferences and to rectify absurd misapprehension"[10]

-(பட்டி மேயும் மனப்போக்கை மீட்டித்தல், சோம்பிக்கிடக்கும் அசிரத்தையை உசுப்பிவிடல், மௌட்டியக் கருத்துகளை மாற்ற உதவுதல்)

கற்றாரைக் கற்றாரே காமுறுதல் போல் பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித் துறைத் தலைவர், ஆய்வுச் செம்மல் எஸ். வையபுரிப்பிள்ளை 1938இல் 'மு. இரா.'வின் ''ஆராய்ச்சித் தொகுதி'' பதிப்பிற்கு எழுதிய முன்னுரையில் பின்வருமாறு விதந்தோதியுள்ளார்.

''தமிழ்க் கல்வியிலும் தமிழாராய்ச்சியிலும் பேரவாக் கொண்ட தமிழ் மக்கட்கு உறுதுணையாய் நின்றது செந்தமிழ்ப் பத்திரிகையேயாம். ஒவ்வொரு மாதத்துப் பத்திரிகையிலும் அதுவரை அறியாத அரிய விஷயங்களைக் குறித்துச் சிறந்த கட்டுரைகள் பல

வெளிவந்து கொண்டேயிருந்தன. பத்திரிகையாசிரியர் எழுதியன வெல்லாம் தமிழ் மணமும் ஆராய்ச்சி நலமுஞ் செறிந்து விளங்கின; கற்பாருக்குப் பெரு விருந்தாயமைந்தன. ஒவ்வொரு மாதமும் செந்தமிழ் எப்போது வெளிவருமென்ற பேராவலோடு தமிழன்பர்கள் எதிர்பார்த்த வண்ணமாயிருந்தார்கள். தமிழ்நாட்டுப் பெரும் பேராசிரியனாயமைந்து தமிழ் மக்கள் வீடுதோறுஞ் சென்று தமிழ்க் கல்வி நலத்தை அவர்கள் நுகரும்படி செய்து வந்த பெருமை செந்தமிழ்ப் பத்திரிகைக்கே உரியதாயிருந்தது. இப்பத்திரிகையின் உயிர்நிலையா யிருந்தவர்கள் இவ்வாசிரியரவர்களே (மு. இராகவையங்கார்). பலர் சிறந்த தமிழறிஞர்களாக விளங்குவதற்கும், அறிவுநலமிக்க பலர் தமிழாராய்ச்சியை மேற்கொள்ளுவதற்கும் இவர்களே காரணமா யிருந்தார்கள்."

'மு. இரா.'வின் மொழிப்பற்று, பிறமொழி வெறுப்பிற்கு அழைப்பு விடுக்காதது. ஆய்வுகளில், மொழிப்பற்று ஒருபால் கோடாது இருந்தது. பண்டைய இலக்கியங்களின் கண்டுபிடிப்புகள், மதிப்புகள், வரலாற்றாய்வுகள் தமிழகத்தில் சமய - பண்பாட்டு - மொழித்துறைகளில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்படுத்திய புத்தெழுச்சியும் - மறுமலர்ச்சியும் தொடர்ந்து முன்னேற்றம் கண்டகாலத்தில் 'மு. இரா.'வின் பங்களிப்பும் நிகழ்ந்தது. இந்திய தேசிய அரசியலில் 1905இல் தோன்றிய சுதேசிய இயக்கம் தாய்மொழித் தேசியவுணர்ச்சிக்கு ஆக்கமளித்தது. "மு. இரா"வின் மொழிப்பற்றில் இந்தத் தேசிய வுணர்ச்சியும் பங்காற்றியுள்ளது. உலக வரலாற்றில் மக்கள் மொழிகளின் புத்தெழுச்சியும், அதன் வழிப்பட்ட இலக்கிய எழுச்சியும் பலநாடுகளில் தேசிய எழுச்சியை முன்னெடுத்துச் சென்றுள்ளதை அறிகின்றோம்.

"வாஸ்கோடகாமா இந்தியாவைக் கண்டுபிடித்ததைக் காட்டிலும் இந்தியாவின் இலக்கியத் தத்துவக் கருவூலங்கள் மீண்டும் கண்டுபிடிக்கப் பெற்றதே 'புதிய இந்தியா'வின் தோற்றத்திற்கு மிக முக்கியமானதென்று நான் நம்புகிறேன்." இவ்வாறு இந்தியாவில் பேரறிஞர் மாக்ஸ்முல்லர் (1823 -1909) கூறியது தமிழகத்திற்கும் பொருந்தும்.

'மு. இரா.'வின் தமிழ்ப்பற்று, பாரதியாரின் தமிழ்ப்பற்றோடு ஒத்தவகையானது. மதுரையிலும், திருவல்லிக்கேணியிலும் பாரதியாருடன் 'மு. இரா'விற்கு நெருக்கமான பழக்கமிருந்தது. "தமிழபிமானம்" குறித்துப் பாரதியார் கூறியதாவது:

"தமிழிலிருந்து பூமண்டலத்திலுள்ள பாஷைகளெல்லாம் பிறந்து நிற்பதாகக் கூவின மாத்திரத்திலே ஒருவன் தமிழபிமானியாக

மாட்டான். பள்ளிக்கூடத்து சாஸ்திரங்களெல்லாம் தமிழ்ப் பாஷையில் கற்றுக் கொடுக்கும்படி முயற்சி செய்கிறவன் தமிழபிமானி. தமிழராகப் பிறந்தோர் கூடியிருக்கும் சபைகளிலேயும், தமிழராய்ப் பிறந்தோர் ஒருவருக்கொருவர் பேசும் போதும் இதர பாஷைகள் பேசாமல் தமிழே பேசும்படி முயற்சி செய்கிறவன் தமிழபிமானி. தமிழில் புதிய கலைகள், புதிய காவியங்கள், புதிய உயர்வு தோன்றும்படிச் செய்வோன் தமிழபிமானி . . . தேவாரத்திலும் திருவாசகத்திலும், திருவாய்மொழியிலும், திருக்குறளிலும், கம்பராமாயணத்திலும் அன்பு கொள்ளாதவனுக்குத் தமிழபிமானம் உண்மையிலே பிறக்க நியாயமில்லை.'

'மு. இரா.'வின் மொழிப்பற்று, மொழி வழி மாநில அமைப்பிற்கு ஆதரவளிப்பதில் தயக்கம் காட்டியுள்ளது.

மதுரைச் சங்கத்து 23ஆம் ஆண்டுத் திருவிழாவில், அக்கால நீதிக்கட்சியின் கல்வி அமைச்சர் பி. பாத்ரோ எனும் ஆந்திரர் தலைமையில் 'மு. இரா.', "தமிழரும் ஆந்திரரும்" எனும் தலைப்பில் அற்புதமான வரலாற்றுச் சான்றுகளுடன் ஆய்வுரை நிகழ்த்தி யுள்ளார். இவ்வரிய உரையில் மொழிவழி மாநில அமைப்புத் தொடர்பான கருத்துப் பின்வருமாறு கூறப்பெற்றுள்ளது.

"ஆங்கில ஸாம்ராஜ்யத்தின் மாகாணப் பிரிவுகளில் திராவிட மொழிகள் என்று கூறப்படும் தமிழ் தெலுங்கு மலையாளம் கன்னடம் என்ற பெரும் பாஷைகள் வழங்குந் தேசங்கள் ஒரு தொகுதியாக அமைக்கப்பட்டுள்ளன. இத்தேசப்பிரிவைச் சென்னை மாகாணம் என்ற இடவமைதிப் பற்றிப் பெயர் கூறுவதினும், 'திராவிட மாகாணம்' எனப் பாஷையமைதியைக் கொண்டு வழங்குவது மிகவும் பொருந்துவது எனலாம். பாஷைகள் வழங்கும் முறையாகவே தேசங்கள் பிரித்தாளப்பட வேண்டும் என்ற கிளர்ச்சி சில காலமாக ஆந்திர மக்கட்குள் அதிகமாக உண்டாயினும். இப்போது அமைத்துள்ள மாகாணப்பிரிவு, பூர்வ சரித்திர முறைக்கு ஒத்ததாய் மேற்குறித்த திராவிட மக்களையும் நெடுங்காலம் ஒரு சேரவைத்து ஒற்றுமைப்படுத்தி வந்திருக்கிறதென்பது திண்ணம்."[13]

மேற்காணும் வரிகள், மொழிவழி ஆந்திர மாநிலக் கோரிக்கையைக் குறிப்பிட்ட 'மு. இரா.' அக்கோரிக்கையை ஆதரிக்கத் தயங்கியதையும் அல்லது ஏற்க முன்வராததையும் சுட்டிக் காட்டுகின்றன. நீதிக்கட்சி, மொழிவழி மாநில அமைப்பை ஆதரிக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

''ஒரு தமிழ் வாழ்த்துகை'' எனும் சொற்பொழிவில், "செந்தமிழாகிய தெய்வமகள் பிறந்தது முதல் பேதைப் பருவம் வரை அமைந்துள்ள நிலைகளை அழகாகக்" கூறுகின்ற ஒரு பாடலை மொழிப்பற்றுடன் விளக்கியுள்ளார் 'மு. இரா.' வில்லிபாரதத்தின் பாயிரமான தமிழ்த் தெய்வத்தின் வாழ்த்தாகும் பின்வரும் அப்பாடல்:

*பொருப்பிலே பிறந்துதென்னன் புகழிலே கிடந்து சங்கத்*
*திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்த பேதை*
*நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன*
*மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்றாள்*

இப்பாடலின் சொற்பொருள் விளக்கத்தில் 'மு. இரா.' வின் மொழிப்பற்று வெள்ளிடைமலை என விளங்குகின்றது. இரு சான்றுகளைப் பார்ப்போம்.

1. "பேதை . . . வளருகின்றாள்' என்று பேதைப் பருவத்தோடு நிறுத்தினார். பெதும்பை முதலிய நிலைகள், தமிழ் மகட்கு இல்லை என்பது கருத்து. உண்டாயின், மேற்பட்ட பருவங்களும் முடிவுங் கூறுதல் வேண்டும். அதனால், பேதையேயாயினும் மேதையங் குறுமகளாய், என்றும் தன் எழில் நலங்குன்றாமல் விளங்குகின்றாள் தமிழ்ப்பாவை என்பது போதரும். இது பற்றியன்றோ. 'கன்னித்தமிழ்' என்பர் முன்னோர்."[14]

2. இங்ஙனம் தன் இளமைச் செவ்வி குன்றாமல் தமிழ் வளர்ந்து வருவதற்குக் காரணம் யாது? அதன் கண்ணுள்ள இனிமையே யன்றிப் பிறிதன்று. இது பற்றியே இனிமைப் பொருளில் தமிழ்ச் சொல்லை வழங்கலாயினர் ஆன்றோர். "தமிழ் என்ற பதத்தை இடைவிடாமற் பல தடவை உச்சரித்துப் பாருங்கள், அஃது அமிழ்து மயமாய் இனித்தலைக் காணலாம்" என்று நண்பரொருவர் ஒரு சமயம் கூறிய மொழி இங்கு நினைவுக்கு வருகின்றது. இக்கூற்று, விநோதம் போலத் தோன்றினும் உண்மையுடைய தென்பதில் ஐயமில்லை."[15]

'ஆராய்ச்சித் தொகுதி'யின் கட்டுரைகள் பல 'மு. இரா.'வின் மொழிப்பற்றை மேலும் விளக்கவல்லன.

"தென்றலும் சிறு துளியும் கலந்தாற்போல் அங்கொன்றாய் இங்கு ஒன்றாய்ச் செய்திகளைச் கூறினாலே சாலும்'' என்று வியாக்கியானச் சக்ரவர்த்தி பெரியவாச்சான் பிள்ளை சிறியதிரு மடல் வியாக்கியானத்தில் குறிப்பிட்டதற்கேற்ப 'மு. இரா.' வின்

மொழிப்பற்றுப் பற்றிய செய்திகளை இவ்வளவில் முடித்துக் கொண்டு 'நாட்டுப் பற்று' பற்றிய செய்திகளை அறிவோம்.

### நாட்டுப்பற்று

தமிழ்ப் புலவர்கள் மு. ரா. கந்தசாமிக் கவிராயர், அரசஞ்சண்முகனார் போன்று வந்தே மாதரச் செய்யுள்களைப் புனையவில்லை யென்றாலும், நாட்டுப்பற்றைத் தூண்டும் வண்ணம் பேசியுள்ளார், எழுதியுள்ளார். பாரதியார், வ.உ.சி. ஆகியோர் பாராட்டுதல்களைப் பெற்றுள்ளார். பாரதியாரின் 'ஸ்வதேச கீதங்கள்' நூலிற்குச் 'செந்தமிழ்' இதழில் எழுதிய மதிப்புரை, 'செந்தமிழ்' இதழில் வெளிவந்த 'இரஷிய வதைப்பரணி', செந்தமிழில் வெளிவந்த 'பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள்', 'வீரத்தாய்மார்கள்' எனும் 'மு. இரா.'வின் நான்கு கட்டுரைகளைக் கொண்டு அவருடைய 'நாட்டுப்பற்று'ச் செய்திகள் இங்குக் கூறப்படுகின்றன.

### 'செந்தமிழ்' மதிப்புரை

பரம்பரைத் தமிழ்ப்புலவர்கள் ஆட்சி செய்த 'செந்தமிழ்' இதழில் 1908இல் வெளிவந்த பாரதியாரின் 'ஸ்வதேச கீதங்கள்' எனும் நூலிற்கு மு. இரா. நாட்டுப்பற்றுணர்வு மேலோங்க எழுதிய மதிப்புரையின் சுருக்கம் வருமாறு:

"சுவதேசகீதங்கள்:- இப்பெயர் கொண்ட பாடற்றிரட்டொன்று சென்னையினின்று சிறக்க வெளிவரும் 'இந்தியா' பத்திராதிபர் ஸ்ரீசுப்பிரமணிய பாரதியவர்களால் இயற்றி வெளியிடப்பட்டுள்ளது. இதன் பெயரைக் கேட்கும் போதே இத்திரட்டு நம்மவர்க்கு ஒரு புது வழியைக் கற்பிக்க வந்ததென்பது விளங்கும். நம் தமிழ்மொழியில் ஈசுவர சம்பந்தமான பாடல்களும் காவியங்களும் புராணங்களும் பிறவும் நிரம்பவுண்டாயினும் நம்மவர்க்குத் தற்காலம் இன்றியமையாது வேண்டத்தக்கனவும் தேசாபிமானத்தை உண்டாக்கவல்லவுமான உயர்கவிகள் கிடைத்தில......

இப்போது பாரதியார் தாமியற்றிய தேசகீதங்களைத் திரட்டிச் சிறு புத்தகமாக வெளியிட்டிருப்பது எமக்கும் பெருமகிழ்ச்சி விளைத்தது. செய்யுள்களும் கீதங்களும் சொன்னயம் பொருணயங்களுடைய வாயிருத்தலோடு படிப்போர் மனதில் எழுச்சியை உண்டாக்க வல்லனவாகவும் விளங்குகின்றன.

இயற்கையில் இனிய கவிகள் பாட வல்ல பாரதியார் தம் சத்தியை இத்தகைய புதுவழியில் திருப்பி உபயோகப்படுத்தி யிருப்பது

நம்மவர்க்கு ஒரு நல்வழியைக் கற்பிக்கின்றது. இத்தகைய கீதங்கள் தேசாபிமானிகளான நந்தமிழ் நாட்டாரெல்லாம் படித்து மகிழ்வதுடன் முக்கியமாகத் தம் மக்கட்கு இவற்றை மனப்பாடம் பண்ணும்படி செய்வித்தல் வேண்டப்படுவது என்போம்."[16] பாரதியார், தேசபக்தியைப் 'புதிய சுடர்', 'புதிய நெருப்பு', 'நவீனமார்க்கம்', 'நவீனகிளர்ச்சி', என்றெல்லாம் விதந்தோதிப் புதிய நடையில், புதிய வழியில் தேசபக்திப்பாடல்களை இயற்றியதைப் 'பண்டிதத்தமிழுலகம் வரவேற்காத சூழலில் 'செந்தமிழ்' மதிப்புரை பாரதியுணர்வுடன் வரவேற்றது, மொழிப்பற்று - நாட்டுப்பற்றின் புதிய இணைப்பை உணர்த்தியது.

'மு. இரா.', பாரதியாரின் "ஸ்வதேசகீதங்கள்" தேசாபிமானிகளுக்குப் புது வழியைக் கற்பிக்க வந்ததென்று சுட்டிக் காட்டியது அவருடைய நாட்டுப்பற்றின் அடையாளமாகும்.

பாரதியாரின் 'புதிய நடை'க்கும் 'புதிய வழி'க்கும் தேசபக்தியே மூலமாகும் என்று வ.வே.சு. ஐயர் (1881-1925) "மறுமலர்ச்சி" எனும் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.[17]

சுவை, பொருள், வளம், சொல் அனைத்திலும் புதுமையைப் புகுத்தித் தமிழ்க்கவிதைக்குப் புதிய திருப்பத்தை நாட்டுப் பற்றுணர்வுடன் பாரதியார் வகுத்தளித்ததை 'மு. இரா.' மிகச் சரியாகவே இனங் கண்டுள்ளார்.

பாரதியாருக்கு முன்பு "தேசாபிமானத்தை உண்டாக்க வல்லவுமான உயர்கவிகள் கிடைத்தில" எனும் வரலாற்று உண்மையையும் 'மு. இரா.' சுட்டிக்காட்டியுள்ளார்.

பிப்ரவரி 13, 1906இல் 'சுதேசமித்திரன்' இதழ் வாயிலாகப் பாரதியார் வெளியிட்ட "விண்ணப்பம்" எனும் வேண்டுகோளில் "தமிழ்ப் புலமையிற் சான்று விளங்கும் பெருமக்கள்" புதியனவாகத் 'தேசபத்தி'ப் பாக்களை புனைந்தனுப்புமாறு குறிப்பிட்டார். பாரதியாரின் இந்த விண்ணப்பம் வெளிவந்ததற்கு ஏழு மாதங்களுக்கு முன்பாகப் பாரதியார் ஆசிரியராக விருந்த 'சக்ரவர்த்தினி' மாத இதழில் என். ராகவாச்சாரி பி.ஏ. என்பவர் `எழுதிய கட்டுரையில் தமிழ்க் கவிஞர்கள் நாட்டுப் பற்றுணர்வை வெளிப்படுத்தும் அரசியல் கவிதைகளை எழுத முன்வரவில்லை என்பதைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

"தமிழ்க் கவிஞர், மலை, கடல் முதலியவைகளை வெகு அழகாகப் பாடினரராயினும் சுயேச்சை, குடியரசு முதலியவைகளைப்

பற்றிப் பாடினாரில்லை. இவையே தற்கால எண்ணங்களெனத் தோன்றுகின்றன. ஆதலின் இவையே தங்கி நிற்கத் தகுவன. இவைகளைப் புகட்ட நம்மிடத்துக் கவிஞரும் எழுவரோ? எழுந்த கவிகளை நமது தேசம் போற்றுமோ"[18]

இந்தக் கட்டுரையில் தேசபக்திப் பாடல்களை இயற்றிட "கவிஞரும் எழுவரோ? எழுந்த கவிகளை நமது தேசம் போற்றுமோ?" என எழுப்பப் பெற்ற வினாக்களுக்குப் பாரதியாரின் "ஸ்வதேசகீதங்கள்" தகுந்த விடையளித்தது. எழுந்த கவிஞரை, 'செந்தமிழ்' தேசத்தின் சார்பில் மு. இரா. வாயிலாகப் போற்றியது.

'மு. இரா.'வின் 'செந்தமிழ்' ஆய்வுக்கட்டுரைகளைப் பாரதியார் படித்து வந்தார் என்பதற்கு, அவருடைய 'சுதேசமித்திரன்' கட்டுரையொன்று (19-11-1916) சான்றளித்துள்ளது. இளங்கோ அடிகள் பிறந்த வஞ்சி நகரம், தற்காலக் கரூர் நகரமாகும் என்று ஆராய்ச்சிப் பெருந்தகை எழுதியுள்ளதைப் பாரதியார் சுதேசமித்திரன் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

## இரஷியவதைப்பரணி

1904-1905இல் நிகழ்ந்த ருஷ்ய-ஜப்பான் யுத்தத்தில், ஜப்பான் இரஷ்யாவை வென்றது, இந்திய தேசிய இயக்கத்தில் புத்துணர்ச்சியைப் பாய்ச்சியது. ஐரோப்பிய அரசை, ஆசிய அரசு ஒன்று யுத்தத்தில் தோற்கடிக்க முடியும் என்பதை ஜப்பான் வென்று எடுத்துக்காட்டியது.

இந்திய தேசிய இதழ்கள் ஜப்பான் வெற்றியைப் பாராட்டின. இரஷ்ய - ஜப்பான் யுத்தம் முடிவதற்கு முன்பாகவே கல்கத்தா 'அமிர்தபஜார் பத்திரிகை' 1905 ஜனவரி 14இல் பின்வருமாறு எழுதியது.

"யுத்தத்தில் ஜப்பான் முழுமையான வெற்றி பெற்று விட்டால், கீழை நாட்டைச் சுரண்டும் மேலை நாட்டின் போக்கிற்கு முற்றுப்புள்ளி வைக்கப்படும்."[19]

இரஷ்ய ஜார் சக்கரவத்தியின் ஆட்சி ஏற்கெனவே உள்நாட்டு எதிர்ப்பால் தத்தளித்த பொழுது, ஜப்பானிடம் தோல்வியுற்றது. ருஷ்யப் புரட்சி மாவீரர் தோழர் லெனின் அவர்களாலும் ஜப்பான் வெற்றி ஜனவரி 14, 1905இல் 'பார்வேர்ட்' எனும் இதழில் பின்வருமாறு பாராட்டப்பெற்றது.

"முன்னேறிவரும் முற்போக்கான ஆசியா பின் தங்கிய பிற்போக்கான ஐரோப்பாவிற்குச் சீர் செய்ய வியலாத வன்மையான தாக்குதலைத் தொடுத்தது"[20]

ஜப்பானைப் பின்பற்றி பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத் தூக்கி யெறியப் போராடுமாறு இந்தியத் தேசியத்தலைவர்களும் இதழ்களும் பிரச்சாரம் செய்தனர். மேலைநாட்டு ஏகாதிபத்தியம் வெல்வதற் கரியதன்று எனும் ஊக்கம் வலிமைபெற்றது. ஆசிய தேசியத்தின் எழுச்சியாகவும் ஜப்பான் வெற்றி கொண்டாடப் பெற்றது.

பாரதியார், 'இந்தியா' இதழில் (செப்டம்பர் 8, 1906) Asia's Re-Awakening And India's Duty - ரஷியாவின் விழிப்பும் இந்தியாவின் கடமையும்" எனும் தலைப்பில் ஜப்பானைப் பாராட்டி எழுதியதாவது:

"ஜப்பான் முதலிலே கண் விழித்து எழுந்து நின்று கொண்டு 'ஹ ஹ ஹ' என்று வீரச் சிரிப்பு சிரிக்கத் தொடங்கிற்று. அது எப்போதும் உறங்கிக் கிடக்கு மென்று எண்ணியே மேல் திசையோரெல்லாம் மூக்கின் மேல் கைவைத்து நின்று கொண்டிருக்கிறார்கள்."

சென்னையில் பிப்ரவரி 1905இல் போரில் ரஷ்யாவை வதைத்த ஜப்பான் வெற்றியைக் கொண்டாடப் பொதுக்கூட்டம் நிகழ்ந்தது. இக்கூட்டத்தில் பேச்சாளர்கள் கூறியதாவது:

"பண்டைய ஜப்பான் போர்ப்படையினரான சாமுராய்கள் நிகழ்த்திய போர்த்திறத்திற்கு எவ்வகையாலும் பண்டைய இந்தியாவின் வீர மரபும், போர்த்திற மரபும் தாழ்ந்ததில்லை என்று வரலாற்று ஆவணங்கள் கூறுகின்றன. இவ்வளவிலான மகத்தான பண்டைப் பெருமை வாய்ந்த ஆதாயங்களைக் கொண்ட இந்தியா, சிறந்த ஐரோப்பியத் தாக்கத்தால் நீண்ட காலமாக ஜப்பானைக் காட்டிலும் நன்மைகளைப் பெற்றது. இவ்விரு நாடுகளும் எப்படி இருக்கின்றன என்பதை அறியவேண்டும்."

இந்திய தேசிய - ஆசிய தேசிய எழுச்சிக்குத் தூண்டிய ஜப்பான் வெற்றியை மு. இரா. "இரஷ்யா - ஜப்பானீஸ் வார்" எனும் நூலில் படித்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

தேசியக் கவிஞர் ஒருவர் "இரஷியவதை"யைக் கடும் பொருளாகக் கொண்டு பரணி இலக்கியம் படைக்க முன் வராத காலச்

சூழலில் 'ஒரு தமிழ்ப் பண்டிதர்', 'பரணி' பாடமுற்பட்டது வியந்து - நயந்து பாராட்டுதலுக்குரியது. ஆம்; 'மு. இரா.' தான் "ஒரு பண்டிதர்" எனும் புனைபெயரில், 'இரஷிய வதைப் பரணி'யை எழுதத் தொடங்கினார்.

'கலிங்கத்துப்பரணியாராய்ச்சி' எனும் தலைப்பில் 'செந்தமிழ்' இதழில் இரு கட்டுரைகளையும், 'தமிழ்ப்பொழில்' இதழில் ஒரு கட்டுரையையும் எழுதியுள்ளார், 'மு. இரா.' கலிங்கத்துப்பரணியின் திருத்தமான பதிப்பில் மிக்க நாட்டம் கொண்டு பல திருத்தங்களைச் செய்தவர் 'மு. இரா.' கலிங்கத்துப்பரணியாராய்ச்சியைத் தனிநூலாகவும் அவர் வெளியிட்டுள்ளார்.

பரணி இலக்கிய வகையில் ஜப்பான் வெற்றியைப்பற்றி எழுதத் தொடங்கியதில் இலக்கியப் படைப்பு என்பதோடு மறைமுகமாகக் கீழை நாட்டின் எழுச்சியும் அந்நிய ஆதிக்க எதிர்ப்புணர்வும் இடம் பெறும் வகையில் அமைத்துள்ளார் 'மு. இரா.'

முற்றுப் பெறாத 'இரஷிய வதைப் பரணி'யில் சுமார் 35 பாடல்கள் உள்ளன. காப்பு, அவையடக்கம், நூல் செய்ததற்குக் காரணம் முதலான தலைப்புகளில் 15 பாடல்களும், பரணியின் கடை திறப்புப் பாடல்கள் இருபதும் உள்ளன.

"தேவேந் திரனேபோற் றேயங் கிழக்குடைய கோவேந்தன் போர்ப் பரணி" கூறும் நூல் செய்ததற்குரிய காரணம் பின்வருமாறு இசைக்கப் பெற்றுள்ளது.

கண்டமொன்றில் வாழ்கின்ற காரணமும் நம்பெரியோர்
உண்டு பண்ணும் நல்லறமே ஓம்புதலும் – அண்டுநம்
கெய்ப்பதனில் வைப்பாகும் ஏற்றமும் யப்பானுக்கு
இப்பரணி செப்பற் கியைபு.

ஜப்பான் சக்கரவர்த்தியின் பெயர் மிக்காவோ என்று கூறப் பெற்றுள்ளது. மிக்காவோ என்பது ஜப்பானியச் சக்ரவர்த்திகளுக்குரிய பொதுப்பெயராகும். தெய்வீகப் பிரதிநிதி என்று அரசர் கருதப்பட்டார். ருஷ்ய - ஜப்பானிய யுத்த காலத்தில் சக்ரவர்த்தியாக இருந்தவர் பெயர் முட்சுஹிட்டோ (1867 - 1912) என்பதாகும். இப்பெயர் இரஷிய வதைப்பரணியில் கூறப்படவில்லை. இவர் காலத்தில் ஜப்பான் முன்னேற்றம் கண்டது. நிலப்பிரபுத்துவம் ஒழிக்கப்பட்டது. மேலை நாட்டுக் கருத்துகள், கலைகள், சட்டங்கள்,

பள்ளிகள், வர்த்தக முறைகள், பழக்க வழக்கங்கள் ஜப்பானில் அறிமுகப்படுத்தப்பட்டன.

'கணக்கின்றி வஞ்சனையே, கற்ற அடல் இரஷியராம்', 'மறந்தங்கு கொடுங்கோன்மை, குடக்குவரும் இரஷியர்கள், கொண்ட பெருஞ்செருக்கெல்லாம்' என்று இரஷ்ய எதிர்ப்பு இரஷியவதைப் பரணி' யில் வெளிப்படுத்தப் பட்டுள்ளது.

'கடைதிறப்பு' பாடல்கள் குறித்த ஒரு விளக்கம் அடிக்குறிப்பில் "மஞ்சூரியாவில் இரஷியருடன் அமர்புரியும் தம் கணவர் அடையும் பெரு வெற்றிகளைக் கேட்டுத் தோக்கியோவில் உள்ள அவர் மனைவியர் இரவில் எழுந்து, தம்மைப் போலக் கணவரைப் பிரிந்த மாதர்களுக்குச் சொல்லி மகிழ வேண்டி, அவர் வீட்டு வாசல்களினின்று துயிலெழுப்புகின்றனர்" என்று கூறப்பெற்றுள்ளது.

பாடல்களில் சில வருமாறு:

'நாட்டின் பொருட்டு நுங்கொழுநர்
நயந்த போரில் இரஷியர்தங்
கோட்டை யிடிந்து முழுங்கினரே
குளிக்கபாற் கபாடந் திறமினோ"

"குணதிசை உயர்தரல் கருதியே
குடவர்த முடனமர் புரிதருங்
கணவர்கள் அம்முறு செயலையே
களைவிர் நும்கடை திறமினோ."

"திருந்தப் பின்னுங் குழன்மடவீர்
சேர்ந்த வீரர் சேராரை
வருந்தப் பொருத பெருவெற்றி
வந்து கேட்பத் திறமினோ".

"வீரக் கொழுநர் வென்ற புகழ்
விண்ணும் மண்ணும் பரவுதலைப்
பாரக் குழலீர் காணீமரா
பைம்பொற் கபாடந் திறமினோ".

"வெற்றிச் சின்ன முழங்குவதும்
வெடித்த பெருங்குண் டடித்ததுவும்
கற்றைக் குழலீர் கேளீமரா
கனகக் கதவந் திறமினோ."

கடற்போரில் ஜப்பான் வீரர்கள் நிகழ்த்திய சாகசங்களைக் கூறும் 'கடைதிறப்பு' பாடல்கள் வருமாறு

"அலர்முற்றவும் அணிமற்றவும்
அழகிற்றரு குழலீர்
நலமுற்றிய கடல் வெற்றியும்
நணுக்குற்றது திறமின்"

"கடறார்விய கணவன் பொரு
கடல் வெற்றியும் நாளை
விடலால்பரு கடிதஞ் சொலும்
விரைவிற் கடை திறமின்"

"தலமேவிய பலமாநகர்
தனி டுயநகர் வனபோல்
அலைமேவிய அடையார்கலம்
அழிவுற்றன திறமின்"

எதிரியை வெற்றிக் கொண்டச் செய்தியால் ஊர் பெற்ற எழுச்சியைக் குறிக்கும் பாடல், பின்வருவது:

"வீரர் குதித்தனர் விழிமினோ
வீதி களிப்பன எழுமினோ
ஊரின் எழுச்சியை உணரவே
ஓடி முகக்கடை திறமினோ".

'இரஷியவதைப்பரணி'யின் பாடல்கள் 'இன்னும் வரும்' என்று குறிப்பிடப்பட்டாலும் முற்கூறிய பாடலுக்குப் பிறகு தொடரவில்லை. தொடராததற்கான குறிப்பும் கூறப்படவில்லை. ஏகாதிபத்ய எதிர்ப்புணர்வை இரஷியவதைப் பரணி தூண்டவல்லது என்றும், அதுவே அச்சுறுத்தலுக்கும் காரணமாகியிருக்கலாம் என்றும் உய்த்துணர இயலும். மகாவித்துவான் ரா. இராகவையங்கார் இத்தொடர் படைப்பு நிறுத்தப்பட்டு விட்டதே என்று இளைய இராகவையங்காரிடம் வருத்தப்பட்டுக் கொண்டதாகவும் கூறப்படுகின்றது.

இவருக்குப் பிறகு வேறெந்தக் கவிஞரும் இரஷிய வதைப் பரணி இலக்கியத்தைத் தொடர்ந்து படைக்க முன் வரவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

### பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள்

பொருளாதாரத் தேசியச் சிந்தனைக் கண்ணோட்டத்தில் 'மு. இரா.'வின் பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள் எனும்

கட்டுரை நோக்கத்தக்கது. 1907இல் 'செந்தமிழ்' இதழில் தொகுதி-7இல் வெளிவந்தது.

அரசியல் தேசியச் சிந்தனைகள் ஒரு புறம் வளர்ந்து வந்த நிலையில் பொருளாதாரத் தேசியச் சிந்தனைகளும் வளர்த்தெடுக்கப் பட்டு வந்தன. பிரிட்டிஷ் காலனியாதிக்கம் நிகழ்த்தி வந்த இந்தியப் பொருளாதாரச் சுரண்டலைப் புரிந்து கொண்டு போராடப் பொருளாதாரத் தேசியச் சிந்தனைகள் தெளிவுபெற வைத்தன. 'பொழுதெல்லாம் எங்கள் செல்வம் கொள்ளை கொண்டுபோகவோ?' என்று பாரதியார் குறிப்பிட்டதற்கேற்பப் பிரிட்டிஷ் காலனியாதிக்கம் பொருளாதாரத் துறையிலும் இந்தியாவின் செல்வத்தை 'வற்றடிக்கும் கொள்கை'யைப் பற்றிப் (Drain Theory) பிரிட்டிஷ் நாட்டறிஞர்கள் சிலரும், இந்திய தேசாபிமானிகள் சிலரும் விளக்கி நூல்கள் வெளியிட்டுள்ளனர். பம்பாய் மாநிலத்தில் மகாகோவிந்த ரானடே, ஜோஷி, கோகலே, பஞ்சாப்பில் லாலா லஜ்பத்ராய், வங்கத்தில் தாதாபாய் நவ்ரோஜி, ரமேஷ் சந்திரதத் ஆகியோர் பொருளாதாரத் தேசியம் தொடர்பான நூல்களை வெளியிட்டது போலச் சென்னை மாநிலத்தில் ஜி. சுப்பிரமணிய ஐயர் 1903இல் "SOME ECONOMIC ASPECTS OF BRITISH RULE IN INDIA" எனும் பெரிய நூலை (400 பக்கங்கள்) வெளியிட்டார். பாரதியார், வ.உ.சி., சுப்பிரமணிய சிவா ஆகியோர் பொருளாதாரத் தேசியம் குறித்துப் பேசியும் எழுதியும் வந்தனர். பொருளாதாரத் தேசிய உரிமையை நிலைநாட்டக் கப்பலோட்டிய தமிழர் 'வ.உ.சி' 1906இல் 'சுதேசிஸ் டீம் நாவிகேஷன் கம்பெனி' மூலம் புதிய போர்க்களமுனையை உருவாக்கினார்.

'மு. இரா.' வற்றடிக்கும் கொள்கையை விளக்குவதற்கு முன்பாக அறியப்படவேண்டிய பண்டைய கைத்தொழில் வியாபாரங்கள் எவ்வாறு தமிழகத்தில் மேன்மையுற்று இருந்தன என்பதை விளக்க ஏராளமான இலக்கிய வரலாற்றுச் சான்றுகளுடன் முதன் முதலில் தமிழில் மிக நீண்ட ஆய்வுக்கட்டுரையை (24 பக்கங்கள்) எழுதினார். குறிப்பாகச் சங்க இலக்கியச் சான்றுகள் குவிக்கப்பட்டுள்ளன. சுதேசிய நாட்டுப்பற்று உணர்வுகளுடன் இக்கட்டுரை எழுதப்பெற்றது என்பதற்கு அகச்சான்றுகள் பலவுள. சிலவற்றைப் பின்வருமாறு அறிவோம்.

1. "இப்போது நம் தேசத்தார் மனத்தில் வரும் தேசிய உணர்ச்சியானது, முக்கியமாகக் கைத்தொழில்களாலும் வியாபாரத்தாலும் இந்தியாவின் பொருளாதார நிலையை விருத்தி செய்தலைப் பற்றியதாகவே உள்ளது. இவ்வுணர்ச்சி தேசாபிமானமும் ஊக்கமுமுடைய அறிவாளர் சிந்தையிற் பல்லாண்டுகளாக உதித்து

வந்திருப்பினும் ஜனசமூக முழுதும் அதனில் தம் விருப்பத்தைக் காட்டத் தொடங்கியது சமீப காலத்திலேதான் என்பது நாம் அறியாத தன்று".

2. "இக்காலத்துச் சீர்கேடான நிலையை மாற்றுவதற்குத் தேசிய முயற்சி தக்க கருவியாதலால் அது பெரிதும் வேண்டப்படுவதேயாம்."

3. "நம் நாட்டுத் தொழில் வியாபாரங்கள் நசித்துப் போனதற்குப் பல காரணங்களுண்டாயினும், முக்கியமான தொன்றாவது தேசாபிவிர்த்திக்கு இன்றியமையாத தொழிற்றுறைகளை, அவ்வளவு கூரிய அறிவும் ஆற்றலு மில்லா சில வகுப்பினர்க்குரியவாக ஒழித்தமையால் அப்பழைய தொழிற்றுறைகள் காலத்துக் கேற்ற திருத்தங்களும் பெருமையும் பெறவியலாது."

4. "அந்நிய நாட்டுக் கடைத்தொழில் வியாபாரிகட்கு நாம் அடிமைப்பட்டிருப்பதை நிவர்த்தித்து உலகத்து நாகரிக மக்கள் முன்பு நம்மைக் காட்டிக்கொள்ள வேண்டுமாயின் எல்லா மேல்வகுப்பாரும் நல்லறிஞரும் நாகரிகம் படைத்த செல்வர்களும் தேசவிருத்திக்கு இன்றியமையாத தொழிற்றுறைகளிற் புகுவது அவசியமாகும். இத்தேசத்துள்ள எல்லா மக்களும் தமக்குள்ள அற்ப வேற்றுமைகளை அறவே யொழித்து "தேசநன்மை" என்னும் பொதுநோக்கத்துக்காகத் தம் சக்திகளையெல்லாம் ஒருங்கு திரட்டி ஒற்றுமையுடன் உழைத்து வந்தால், நினைத்த எண்ணங்கள் யாவும் எளிதின் முற்றுப் பெறுதல் திண்ணம். உண்மையான சுதேசிய உணர்ச்சி நம் நாட்டிலுண்டான சில விஷயங்களுள் நம் தேசத்தால் அடைந்திருக்கும் எண்ணிறந்த நன்மைகள் தக்க சான்றாகும்.

'மு. இரா.'வின் இந்தக் கட்டுரை, தேசபக்தச் செம்மல் வ.உ.சியைப் பெரிதும் கவர்ந்தது. 26-10-1907இல் தூத்துக்குடியில் இருந்து 'மு. இரா.'வை இந்தக் கட்டுரைக்காகப் பாராட்டி நாற்பது வரிகளில் ஒரு கவிதையாத்து வாழ்த்தியுள்ளார் வ.உ.சி.

இக்கவிதையில் இராகவையங்கார் எனும் பெயர்க் காரணங்களில் ஒன்றாகப் பின்வரும் கருத்தைக் குறிப்பிட்டுள்ளார் வ.உ.சி.

"இந்தியர் தம்முடை யெளிமையை யுணர்ந்து
சிந்தைநொந் தவர்தஞ் சிறப்பினை யுன்னி
இராகமுற் றிருப்பதை யியம்புத லொத்தும்
இராகவை யங்கா ரெனும் பெயர் பூண்டுளோய்!"

கட்டுரையின் சிறப்புகளை,

"பாரத வருடத்தின் பழைய கைத்தொழில்
வியாபா ரங்களை விரித்து வரைந்ததின்
வியாச மதனை விருப்பொடு படித்தேன்
முற்றெழில் நிலைமையை முற்றுற மொழிந்த
கற்றநின் வாசகங் கண்டுளங் களித்தேன்
செற்றுநற் தொழில்களை சிறுமை யுற்றுநாம்
மற்றவர் சகிக்கா வறுமையின் மூழ்கி
வருந்தன வியல்பினை வரைந்தன வுணர்ந்து
பெருந்துய ருழந்து பெருக்கினேன் கண்ணீர்
தற்கால நிலையினைச் சாற்றிய படித்து
நற்காலம் பிறப்பினை நன்கறிந் தாறினேன்"[24]

எனப் பாராட்டியுள்ளார். அரசியல் தேசியத்துடன் பொருளாதாரத் தேசியத்தையும் இணைத்துப் போராடிய வ.உ.சியின் பாராட்டுதல் களை 'மு. இரா.' பெற்றது, அவருடைய நாட்டுப்பற்றுக்குக் கிடைத்த அரிய அங்கீகாரமாகும். 'கப்பலோட்டிய தமிழர்' சிதம்பரச் செம்மலின் சுதேசிய நாவாய்ச் சங்க முயற்சிக்கு உதவ நூறுரூபாய் பங்கும் எடுத்தவர் 'மு. இரா.' என்பதும் கருத்தில் நிறுத்த வேண்டிய நாட்டுப்பற்றுச் செய்தியாகும்.

## வீரத்தாய்மார்

'மு. இரா.'வின் நெஞ்சில் குடிகொண்டிருந்த 'தேசபக்தி'க்கு நற்சான்றளித்துள்ளார் பாரதியார்.

பிலவங்க வருடம் ஆவணி மாதச் 'செந்தமிழ்' இதழில் தலையங்கமாக 'மு. இரா.' வின் 'வீரத்தாய்மார்' கட்டுரை வெளிவந்தது.

'இரஷ்யோ - ஜப்பானிஸ் வார்' எனும் நூலில், இரஷ்ய - ஜப்பான் போரில் ஜப்பானிய வீரர்கள் வெற்றிக்கு அவர்களுடைய வீரத்தாய்மாரும் காரணமாவர் எனும் செய்தியைப் படித்தார் மு. இரா.' இதன் தாக்கத்தைப் பற்றிப் பின்வருமாறு நாட்டுப்பற்றுணர்வுடன் விளக்கியுள்ளார் 'மு. இரா.'

"முலைப்பாலோடு தீரமோ வீரமோ தியாகமோ கலந்து ஊட்டப்படுமாயின் அவை என்றும் அழியாது உயர்வு முறுதியும் பெறுமென்பது திண்ணம். "இளமையிற் கல்வி சிலையிலெழுத்து, தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்பவை முதுமொழிகளன்றோ. அத்தகைய தாய்மார்களையுடைய தேசங்களே உலகத்தார் கண்முன்னே உயர்ந்து தோன்றுவன. உதாரணமாக - ஜப்பான் தேசத்தை எடுத்துக்

கொள்வோம். சமீபத்தில் நடந்த 'இரஷ்ய ஜப்பானியப் பெரும் போரிலே ஜப்பானியர் உலகம் வியந்து புகழத்தக்க வெற்றியை அடைந்த செய்தி நாம் அறியாததன்று. தேசவளவிலும் ஜனத்தொகையிலும் தம்மினும் மிகப் பெரிய இரஷியருடன் எதிர்த்து ஜப்பானியர் வெற்றி பெற்றதற்கு, வேறு காரணங்களுமுண்டேனும், முக்கியமானது, அவர்கள் தாய் தந்தையரால் குழவிப் பருவ முதலே பெற்று வந்த வீரப் பயிற்சி யென்றே தெரிகின்றது. ஜப்பானியச் சிறுவன் கொஞ்சிப் பேசும்படி பெற்றவர்களால் முதலிற் கற்பிக்கப்படும் வார்த்தைகள் - தேசாபிமானமும் தியாகமுமாகும். அத்தாயர் தம் மக்களை ஒருங்கு கூட்டித் தைரியங் கூறிப் போர்க்கனுப்பி வந்ததும், யுத்த களத்தில் சிறிதுந் தளர்வின்றிப் போர் புரியவும், சமயம் நேரும் போது நாட்டின் பொருட்டு மகிழ்ச்சியுடன் உயிரைப் பரித்தியாகம் செய்யவும் கடித மூலம் எழுதித் தம் மக்களை ஊக்கப்படுத்தி வந்ததும் நாம் படித்துங் கேட்டு முள்ளனவேயாகும்."

ஜப்பானிய வீரத்தாய்மார் பற்றிய செய்திகளை யறிந்த 'மு. இரா.' "புறநானூற்று வீரத்தாய்மார்" வீரப்பண்புகளை "நம்மவர்" அறிய வேண்டும் என அவாவினார்.

'வீரத்தாய்மார்' கட்டுரையில் பொன்முடியார், பூங்கணுத்திரை, ஒக்கூர் மாசாத்தியார், காக்கைபாடினியார் நச்செள்ளையார், ஔவையார், காவற்பெண்டு முதலான சங்ககாலப் பெண்பாற் புலவர்கள் வீரத்தாய்மார் குறித்துப் பாடிய பாடல்களுடன், தகடூர் யாத்திரை, வெண்பாமாலையுடையார், தொல்காப்பியம், மணிமேகலை முதலான நூல்களில் இருந்து பல மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார்.

"அக்காலத்தே தாய்மார்களாற் சிறந்த வீரர்கள் எவ்வாறு சிருட்டிக்கப்பட்டார்கள் என்பது மட்டில் கவனிக்கத்தக்கது. இவ்வீரத்தாயர்க்கு இருந்தனவாக நூல்களிற் காணப்படும் குண விசேடங்களை நோக்கும் போது உலக சரித்திரத்திலேயே இத்தகைப் பெருமை காண்டற் கரியது என்று தோன்றுமென்பதில் ஐயமில்லை." இவ்வாறு புறநானூற்று வீரத்தாய்மார் வீரப் பண்புகளைப் போற்றிப் புகழ்ந்தார் 'மு. இரா.'

இலக்கியச் செய்திகளாக மட்டும் கூறாமல், 'வீரத்தாய்மார்' மரபு வீழ்ச்சி பெற்றதால் "ஆண்மையும் தியாகமுமாகிய பயிற்சிகள் குறையத் தமிழர் வீரம் முற்றும் தலைகவிழ்ந்தது" என்று வருத்தமுற்றார் 'மு. இரா.'

இக்கட்டுரையைச் 'செந்தமிழ்' இதழ் வாயிலாகப் படித்த நவீனப் புறநானூற்றுப் புலவர் அக்டோபர் 1907இல் சென்னை 'இந்தியா' அலுவலக முகவரியில் இருந்து 'மு. இரா.' விற்குக் கட்டுரையைப் பாராட்டி அற்புதமான ஒரு கடிதம் எழுதினார். இக்கடிதத்தில் பாரதியார் குறிப்பிட்டுள்ள பின்வரும் கருத்து 'மு. இரா.' வின் நாட்டுப்பற்றுக்குச் சூட்டப்பெற்ற ஒப்பற்ற மணிமகுடமாகும்.

"தங்கள் பாண்டித்தியத்தை நான் புகழ வரவில்லை. அதனை உலகமறியும். தங்களுடைய பரிசுத்த நெஞ்சிலே எழுந்திருக்கும் 'ஸ்வதேச பக்தி' என்ற புது நெருப்பிற்குத் தான் நான் வணக்கம் செய்கிறேன்".

'மு. இரா.' கட்டுரையை "மேலே கூறி வந்த அற்புதவீரச் செயல்களெல்லாம் வெறுங் கற்பனைக் கதைகளாகவே தோற்றும் என்பது திண்ணம். ஏனெனில் நம்மவரது மனநிலை அவ்வளவு குன்றியொழிந்தது. காலச் சக்கரத்தின் சுழற்சியால் உலகத்தில் ஓரிடத்திற்குள்ளே உண்டாம் அற்புத மாறுதல்கள் இவை" என முடித்துள்ளார்.

பாரதியார் மேற்கண்டதின் இறுதி வரியின் மீதான தம் விமர்சனத்தைப் பின்வருமாறு தமது கடிதத்தில் எழுதியுள்ளார்.

"காலச்சக்கரம் சுழல்கிறது" என்று அவ்வுபந்நியாசத்தின் இறுதியிலே குறிப்பிட்டிருக்கிறீர்கள். ஆம்! காலச்சக்கரம் சுழலவே செய்கின்றது. அச்சுழற்சியிலே, சிறுமைச் சேற்றிலே ஆழ்ந்து கிடந்த 'நீசபாரதம்' போய் 'மஹாபாரதம்' பிறக்கும் தறுவாய் வந்து விட்டது.

"தாழ்நிலை" என்ற இருளிலே மூழ்கிக் கிடக்குங் பாரதவாசிகளுக்கு மஹாபாரதம் காட்டத் தோன்றியிருக்கும் சோதிகளிலே நமது நெஞ்சிற் பிறந்திருக்கும் நெருப்பொன்றாகும். அதற்கு வணக்கம் செய்கிறேன். அது வளர்க. ஓம்!"

'செந்தமிழ்' இதழில் வெளிவந்த 'மு. இரா.' வின் 'வீரத்தாய்மார்' கட்டுரையைப் பாராட்டி அதே தலைப்பில் பாரதியார் 'இந்தியா'வில் ஒரு தலையங்கம் எழுதினார். கட்டுரையை இந்தியா இதழ்களில் வெளியிட்டார். தலையங்கத்தின் சில பகுதிகள் வருமாறு:

"....... நமது தமிழ் நாட்டிலேயும் அத்தகைய பெருங்குடி (மூதில்) மாதர்கள் இருந்திருக்கிறார்களென்பதைச் 'செந்தமிழ்'ப் பத்திராசிரியர் இம்மாதம் எழுதியிருக்கும் ஓர் திவ்யமான உபந்நியாசத்திலே பல அரிய திருஷ்டாந்தங்களுடன் விளக்கியிருக்கிறார்....... தமிழ்நாட்டுத்

தாய்மாரைப் பற்றிச் 'செந்தமிழ்' ஆசிரியர் எழுதியிருக்கும் உபந்நியாசத்தைப் படித்த போது, எமக்குண்டான மகிழ்ச்சிக்கும் பெருந்துயரத்திற்கும் அளவேயில்லை.

அந்நாட்களிலேயே மாதர்கள் காட்டிய வீரத்தன்மையையும், இந்நாளிலே ஆண் மக்கள் காட்டும் பேடித்தன்மையையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, "ஆ! நமது உயர்வு கொண்ட பாரதம் இத்தகைய தாழ்ந்த நிலைக்கு வருவதைக் காட்டிலும் ஒரேயடியாக அழிந்து போயிருந்தாலும் சிறப்பாயிருக்குமே" என்று மனம் குமுறுகின்றது.

நமது பத்திரிகை படிக்கும் நேயர்களனைவரும் நாம் 'செந்தமிழ்'ப் பத்திரிகையிலிருந்து பெயர்த்துப்பதிப்பிட்டிருக்கும் உபந்யாசத்தைத் தாம் பலமுறை படிப்பது மட்டுமேயன்றித் தமது சுற்றத்தாருக்கும் மித்திரர்களுக்கும் தமது வீட்டு மாதர்களுக்கும் திரும்பத் திரும்பப் படித்துக் காட்டுதல் நலமென்று கருதுகின்றோம்."[25]

தலையங்கத்தில் பொன்முடியார், ஒக்கூர் மாசாத்தியார், பூங்கண் உத்திரையார், காக்கைபாடினியார் நச்செள்ளையார் ஆகியோர் பாடல்களின் திரண்ட கருத்துகளைக் கொடுத்துள்ளார் பாரதியார்.

'மு. இரா.' கட்டுரை உண்மையிலேயே நாட்டுப்பற்று எனும் தீச்சுடராம், புதிய நெருப்பாய் ஒளிர்ந்தது என்பதற்கு அது, பாரதியார் மீது ஆழ்ந்த தாக்கத்தை ஏற்படுத்தியது சான்றாகும்.

புறநானூற்று வீரத்தாய் ஒருவரைப் பற்றிப் பாரதியார் 'இந்தியா' 1906 செப்டம்பர் 8ஆம் தேதி இதழில் "அழியாப் புகழ் கொண்ட பழங்காலத் தமிழ் மாது" எனும் தலைப்பில் எழுதியுள்ளார். இதற்கானத் தூண்டுதல் தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையரின் சொற்பொழிவொன்று அளித்தது. மதுரைத் தமிழ்ச் சங்க வருடாந்திரக் கூட்டத்தில் புறநானூற்றின் 278ஆம் பாடலுக்கு விளக்கவுரை கூறினார் உவே.சா. காக்கைபாடினியார் நச்செள்ளையார் வீரத்தாயொருத்தியின் வீரப்பண்பை வியந்து பாடியது அப்பாடல். இந்த வீரத்தாயைத்தான் பாரதியார் 'அழியாப் புகழ்கொண்ட பழங்காலத் தமிழ்மாது' என்று போற்றிப் புகழ்ந்துரைக்கிறார். "இவளைப்போன்ற தாய்மார்கள் பாரத கண்டத்திலே இக்காலத்தில் அநேகர் பிறக்குமாறு ஈசன் அருள் புரிந்தாலல்லவோ நமது குறைகளுக்கெல்லாம் முடிவு ஏற்படும்'' என்று விடுதலைப் போராட்டவுணர்வுடன் சாற்றியுள்ளார்.

புறநானூற்று வீரயுகப் பண்புகளை விடுதலைப் போராட்ட எழுச்சிக்குப் பயன்படுத்திய முதல் தேசியக் கவிஞராகப் பாரதியாரே

விளங்கினார். பாரதியாரை அவருடைய அரசியல் தோழர் வி. சக்கரை செட்டியார் "Like The Bards Of Purananuru" (புறநானூற்றுப் பாணர் போன்று) என்று குறிப்பிட்டதும் இங்கு நினைவுகூரத்தக்கது.[26]

இந்தக் கட்டுரையில் பாரதியார் "A Parallel - ஓர் ஒப்பு" என்னும் இறுதிப் பகுதியில் ஜப்பானிய வீரத்தாய்மார் குறித்துப் பின்வருமாறு எழுதியதும் 'மு. இரா.' வின் கட்டுரையை நினைவூட்டுகின்றது.

"மேலே கூறப்பட்ட தமிழ் மாதைப் பற்றிப் பேசுமிடத்துச் சென்ற ருஷ்ய - ஜப்பானிய யுத்தத்தின் போது நிகழ்ந்த ஒரு செய்தி ஞாபகத்திற்கு வருகிறது. ஒரு ஜப்பானியத் தாய் தனது பல குமாரர்களைப் போர்க்களத்தில் இறக்கக் கொடுத்து விட்டுப் பிறகு ஒரு நாள் அழுது கொண்டிருந்தாள். அவளிடம் சென்று ஒருவர் "அம்மா, ஏன் அழுகிறீர்கள்? உமது பிள்ளைகள் மஹாகீர்த்திகரமான மரணத்தையல்லவோ அடைந்திருக்கிறார்கள்?" என்று ஆறுதல் கூறினார். அதற்கு அத்தாய் "ஐயா, நான் இறந்து போன மக்களின் பொருட்டாக அழவில்லையே. எனது தாய்நாட்டிற்குக் கீர்த்தி வரும் பொருட்டாகப் பலியிடுவதற்கு இன்னும் பிள்ளைகள் இல்லாமல் போய்விட்டதென்று வருத்தமடைகிறேன்" என மறுமொழி தந்தாளாம்.

பேராசிரியர் மு. இராகவையங்காரின் பல ஆளுமைகளில் அவருடைய மொழிப்பற்று, நாட்டுப்பற்று இணைந்த ஆளுமை ஒன்று என்பது நிறுவப்பெற்ற வரலாற்றுண்மையாகும்.

### குறிப்புகள்

1. கலித்தொகை, பதிப்புரை, 1887, ப. 34.
2. தமிழ் மொழியின் வரலாறு, எட்டாம் பதிப்பு, 1953, ப. 120.
3. விவேகபாநு, திங்கள் இதழ், செப்டம்பர், 1905, ப. 392.
4. 'இந்தியா', நவம்பர் 24, 1906.
5. செய்யுள்கள் முழுவதையும், அவற்றின் மீதான பாரதியார் கருத்துகளையும் அறியப்பார்க்கவும்: பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும், 1981, பெ.சு. மணி, பூங்கொடி பதிப்பகம், சென்னை-4.
6. ஒப்பியல் இலக்கியம், க. கைலாசபதி, ப. 276.
7. இந்து தேசாபிமானிகள் சரித்திரம், முதற் பாகம், 1916, கணேஷ் அண்ட் கோ, சென்னை, ப. 2.
8. "மு. இராகவையங்கார்" - ஜே. பார்த்தசாரதி, நூலகம், புத்தகப்பணி மாத ஏடு, சென்னை, மார்ச், 1975, ப. 25.

9. "Tamil Academics" தமிழ்ச் சங்கங்கள், இந்தியா 29-9-1906.

10. பேரறிஞர் 'சேக்கிழார் அடிப்பொடி' டி.என். இராமச்சந்திரன் இக்கட்டுரையாளரிடம் கூறியது.

11. இந்திய தேசியத் தோற்றமும் வளர்ச்சியும், 2002, பெ.சு. மணி, மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பம், ப. 88.

12. சுதேசமித்திரன், 9-6-1917

பாரதி தமிழ், தொகுப்பு, பெ. தூரன், இரண்டாவது பதிப்பு, 1972, இன்பநிலையம், சென்னை, ப. 272.

13. ஆராய்ச்சித் தொகுதி, 1984, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ப. 338.

14. இலக்கியக் கட்டுரைகள், 1950, பேராசிரியர் ராவ் ஸாகிப் மு. இராகவையங்கார், ப. 5.

15. மேற்காணும் நூல், ப. 6.

16. செந்தமிழ், தொகுதி 6, பகுதி 3, பக். 105-106.

17. வ.வே.சு. ஐயர் கட்டுரைகள், 1981, தொகுப்பாசிரியர், பெ.சு. மணி, வெளியீடு, தியாகி எஸ்.என். சோமயாஜுலு.

18. 'சக்ரவர்த்தினி', சென்னை, ஆகஸ்ட், 1905, ப. 9.

19. Indian National Liberation Movement and Russia (1905-1917), 1975, P.B. Sinha. Sterling Publishers PVT LTD, New Delhi, p. 173.

20. மேற்படி நூல் ப. 173.

21. 'மெட்ராஸ் மெயில்' பிப்ரவரி 3, 1905, மேற்கோள்: Tamil Renaissance and Dravidian Nationalism, 1980, K. Nambi Arooran, Koodal Publishers, p. 10.

22. 'மு. இரா.' வின் பேரன் ஜே. பார்த்தசாரதி இக்கட்டுரையாளரிடம் நேரில் கூறியது.

23. நேர்காணல் - ஜே. பார்த்தசாரதி 24-5-2003.

24. "தமிழறிஞர் கடிதப் பகுதிகள்" - ஆராய்ச்சித் தொகுதி, 1984, பேராசிரியர் மு. இராகவைங்கார் ப. XL

25. பாரதியார் நூல்கள் (கட்டுரைகள்) பாரதி பிரசுராலயம், பக். 694-696.

26. "The Political life of Sri Subramanya Bharathi", கட்டுரை சுதேச கீதங்கள் இரண்டாம் பாகம், பாரதி ஆச்ரமம், திருவல்லிக்கேணி ப xi.

# பதிப்புப்பணி

**நா. ஜானகிராமன்**

பாரிகாதை எழுதிப் புகழ் பெற்றவர் ரா. ராகவையங்கார் என்றால் "தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி" எழுதிப் புகழ் வாய்க்கப்பெற்றவர் மு. இராகவையங்கார் எனலாம். பதிப்புப்பணியில் உவே.சா. போன்று இவரின் பதிப்பில் உள்ள தனிச்சிறப்பும் இனிதே புலனாகின்றது. தமிழ்நூல்களின் பதிப்புலகில் இவரின் தடமும் பதிக்கப்பட்டுவிட்டது. ஆய்வுரை ஒப்புமைகளைப் பார்த்துத் தரம் பிரிப்பது போன்று, பதிப்பு முறைகளைக் கண்டு தரம்பிரித்தலும் உண்டு. அவ்வகையில் இராகவையங்காரின் தரம் முதலானதும், முதன்மையானதும் ஆகும். மு. இரா. இளமை முதலே நல்ல கல்விப் புலமை, படைப்பாற்றல் வாய்க்கப் பெற்றிருந்தார். பின் அவரின் ஆய்வுக்கண்ணோட்டம் அகல அகலத் தமிழின் பாதையும் அகன்று விரிந்தது. அத்தகைய விரிவினுக்கு இவரின் இலக்கியப்பணி, இலக்கணப்பணி ஆராய்ச்சிப்பணி என்பனதைக் காட்டிலும் 'பதிப்புப் பணியே' மேலோங்கி நிற்கின்றதென்றால் அது மிகையாகாது.

தமிழில் எண்ணற்ற இலக்கண இலக்கிய நூல்கள் பெருகி வந்த சூழலில் மு. இரா. வரலாற்று அணுகுமுறையைச் (Historical Approach) செலுத்தினார். அதன் பயனாய் இவரின் முதல் ஆய்வு 'செந்தமிழ்' இதழில் வெளிவந்தது. அதன்பிறகு சில நாட்கள் கழித்து, அந்தப் பத்திரிகையின் ஆசிரியருமானார். இவர் பதிப்பித்த அனைத்து நூல்களிலும் பெரும்பான்மையும் வரலாற்றுக் குறிப்பு இடம் பெற்றே இருக்கும்.

மு. இரா. அவர்கள் பதிப்பித்த நூல்கள் பல. தனிப்பட்ட ஆராய்ச்சி பல. பதிப்பிக்க உதவி செய்ததும் பலவாகும்.

**'ஏடுதேடி அலைந்த ஊர் எத்தனை**
**எழுதி ஆய்ந்த குறிப்புரை எத்தனை'**

என்று உவே. சா.வைப் புகழ்வர். இவருக்கும் இது சாலப் பொருந்தும். ஆனால் இவர் ஆய்ந்து எழுதிய குறிப்புரையே இவரின் பதிப்பில் மேலோங்கி உள்ளன. இவரின் பதிப்பு நூல்களை ஐவகையாகப் பிரிக்கலாம்.

1. வரலாற்று முறையினது
2. சிற்றிலக்கிய வகையினது
3. இலக்கண வகையினது
4. தொகுப்பு முறையினது
5. திருத்தும் வகையினது

(i) நூல் தொகுப்பு (ii) நூலாசிரியர் தொகுப்பு (iii) புலவர்களின் தொகுப்பு எனும் மூன்று முறையிலும் இவரின் பதிப்பு நூல்கள் அடக்கம் பெறுகின்றன.

## தமிழ் நாவலர் சரிதை

இந்நூல் வரலாற்று அடிப்படையிலான புலவர்களின் தொகுப்பாகும். அதனைப்போன்று, அப்புலவர்களின் பாடல் தொகுப்பும் இதில் அடங்கியுள்ளன. ஏறத்தாழ ஐம்பத்தொரு (51) புலவர்களின் பாடல் தொகுப்புகள் இந்தச் சரிதையில் உள்ளன. இருநூற்று எழுபது (270) பாடல்களை இதில் காணலாம். முதற்சங்கத்தில் வீற்றிருந்த இறையனார் தொடங்கி, "அந்தகக் கவிவீரராகவ முதலியார்" வரை இந்தச் சரிதையில் உள்ளனர். கவிச்சக்கரவர்த்தி கம்பர், உலா, அந்தாதி பாடிய ஒட்டக்கூத்தர், வெண்பாப்பாடிய புகழேந்தி, வசைபாடியக் காளமேகம் என இவர்களின் பாடல்களும் இதில் காணப்படுகின்றன. கபிலர், கோவூர் கிழார், சாத்தந்தையார் பாடல்கள் அங்கங்கே தென்படுகின்றன.

பெயர் தெரியாத புலவர்கள் எழுதிய பாடல்களும் காணப்படுகின்றன. இதனைத் தொகுப்பித்தவர் யாரென்று விளங்கவில்லை. இறையனார், முருகேசன் முதலானோர் தொகுத்திருப்பதால் இதனைச் சைவச் சார்பு கொண்டதாகக் கொள்ளலாம். இது 16ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட தொகுப்பாகும். இராகவையங்கார் இந்நூலைப் பதிப்பித்த ஆண்டு தெரிந்திலது. ஆனால், 1949ஆம் ஆண்டில் ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை வழிச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் செம்பதிப்பாக வெளியிட்டது.

## சிதம்பரப் பாட்டியல்

இதன் காலம் கி.பி. 16ஆம் நூற்றாண்டாகும். 1932ஆம் ஆண்டில் மு. இரா. அவர்களால் பதிக்கப்பட்டுத் தமிழ்ச்சங்க வெளியீடாக இந்நூல் வந்தது. பரஞ்சோதி முனிவரால் இயற்றப்பட்ட இந்நூல் சைவ சமயத்தைச் சார்ந்தது. இதன் ஆசிரியர் புராணத் திருமலை நாதரின் புதல்வர் ஆவார். இவரின் ஆசிரியர்

ஞானப்பிரகாசரின் விருப்பிற் கிணங்க இப்பாட்டியல் நூலினை யாத்தார் என்பர்.

நூலாசிரியர் தம் தந்தையோடு சிதம்பரத்தில் இருந்த போது "தேமேவுகுழல் உமையாள் கண்டுவப்ப மன்றில் திருநடஞ்செய் பேரொளியாக" விளங்கும் சிவபெருமானை வலம் கொண்டு இதனைச் செய்துள்ளார் என்று ந.வீ. செயராமன் குறிப்பிடுவார்.

இந்நூலின் பாயிரப் பகுதி,

"தத்துவ ஞானப்பிரகாசமாய் வந்து பாமன்ன உரையென்ன
அவனருளால் அவன் தன் பதம் பரவிச்
சிதம்பரப் பாட்டியல் எனப்பேர் வகுத்தான்"

என்கிறது.

"பொதியைக் குறுமுனிவன் கூறும் பாட்டியலைச்
சுருக்கமாய்ப் பகர்ந்திடுவேன் யானே"

என்று இதற்கு முன்னூல் இருந்திருப்பதாக உள்ள செய்தியையும். குறிப்பிடுகின்றார்.

## அமைப்பு

இந்நூல் நாற்பத்தியேழு (47) எண்சீர் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தினைக் கொண்டு இலங்குகின்றது.

உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல், பொருத்தவியல், மரபியல் என ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. பிரபந்தம் தொண்ணூற்றாறு (96) என்பது பொதுவான மரபு. ஆனால், பிரபந்தம் ஐம்பத்தேழு (57) என்றே இந்நூலில் கூறப்பட்டுள்ளது.

இந்நூலின் விருத்தங்களில் யாப்பருங்கலக்காரிகையில் வருவது போன்று மகடூஉ முன்னிலை அமைந்தனவும் உண்டு. 'அமைந்தனவும்' என்ற சிறப்பும்மையால் பெரும்பான்மை அவ்வாறு இல்லாத இடங்களே உள்ளன என்பதையும் உணரமுடிகிறது.

பிரபந்த மரபியலுக்கும் இந்நூலுக்கும் ஒற்றுமை இருப்பதாகத் தெரிகின்றது. பிள்ளைத்தமிழில் தொடங்கிப் புராண இலக்கியத்தோடு பிரபந்தத்தின் இலக்கண அமைப்பு முற்றுப் பெற்றுள்ளது. பின்னர், மரபியலில், நூற்பெயர், கையறம், வாழ்த்து, கவிஞன் இலக்கணம், கவிதை கேட்டல் சிறப்பு, பரிசில் வழங்காதவனுடைய அழிவு, குற்றமுடைய பாட்டு குற்றமில்லாத பொருள் போன்றவற்றை இயம்புகின்றது.

"புலவன் பரிசில் பெறாமல் உள்ளம் நொந்தால்,
ஈராறு திங்கள்தனில் இறுதியாவன் தொடர்ந்து செயாதுளம்
நொந்தால் சுற்றத்தோடும் தொலைவன் இஃதுண்மை
அகத்தியன் சொல்லே"

என்று இந்நூல் குறிப்பிடுகின்றது. புரவலர்களுக்குப் புலவர்கள் இடும் கடுமையான சாபத்தை இவ்வடி காட்டுகின்றது.

உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியல் போன்ற மூன்றிற்கு மட்டும் சிறப்பான உரை உண்டு. இதனை நூலாசிரியர் செய்தாரா இல்லை? அவரின் மாணவர் எழுதியிருப்பாரா என்ற ஐயம் உள்ளது. திருவருக்கக்குறள், ஈரடிமுக்கால்எனும் சம்பந்தர் தேவாரப் பாடல்களையும், திருவெம்பாவைப் பாடல்களையும் குறிப்பிடுவதால் இவரைச் சைவர் என்பர்.

## சந்திரா லோகம்

இது ஓர் அணி இலக்கண நூலாகும். மு. இராகவையங்கார் இதனை மிகத் தெளிவான ஆய்வுக் குறிப்புகளுடன் பதிப்பித்து வெளியிட்டார். இந்நூலின் கால வரையறை தெரிந்திலது. ஜெயதேவர் என்பார் இதனை எழுதியவர் ஆவார். இவரது தந்தை மகாதேவன். தாய் சுமித்திரை. 'கொண்டிண்ய கோத்திரத்தினர்' வம்சத்தினைச் சார்ந்தவர் ஜெயதேவர். இவரின் மற்றொரு பெயர் 'பியூட வருடர்' ஆகும். இவர்கள் வாழ்ந்தநாடு விதர்ப்ப நாடு. நியாய சாத்திரத்தில் புலமை பெற்று விளங்கினார் ஜெயதேவர். வடமொழியில் ஜெயதேவர் கீதகோவிந்தம்' இயற்றியுள்ளார். இருவரும் ஒருவரா என்பது ஐயத்திற்கு இடமானது.

இவர் அலங்கார சாத்திரத்தில் இலக்கணம் எழுதியதால் 'அலங்காரிகள்' என்ற புலவர்களிடையே புகழ்பெற்றவரானார். இவரியற்றிய இன்னொரு நூல் 'பிரசன்னராகவம்' என்பதாகும். இது அளவில் சிறியது. ஏறத்தாழ 350 சுலோகங்கள் உள்ளன. 'மயூகம்' என்ற பிரிவும் இதில் உள்ளது. நூலாசிரியர் இதனைப் பத்து (10) மயூகங்களாகப் பிரித்துள்ளார்.

ஒவ்வொரு அணியும் எடுத்துக்காட்டுகளுடன் எளிமையான நடையில் உள்ளன. பாமகர், தண்டி போன்றவர்கள் தம் பாடல்களில், இவரின் சுலோகத்தை மேற்கோளாக எடுத்தாண்டுள்ளனர். மம்மடர் எழுதிய காவியப் பிரகாரத்தைப் பின்பற்றித் தம் நூலை 'மயூகங்களாகப்' பிரித்துள்ளார்.

பரதமுனியின் 'நாட்டிய சாஸ்திரம்' தொடங்கிப் பல புலவர்களின் நூல்களை நன்கு ஆராய்ந்து, அதன் சாரமாகச்

சந்திராலோகத்தை இயற்றியுள்ளார். இந்நூல் புகழ்பெறுவதற்குக் காரணம் அப்பையதீட்சிதரின் 'குவலயானந்தம்' ஆகும்.

குவலயானந்தத்தைச் ச.வே.சு. பதிப்பித்துள்ளார். சந்திராலோகத்தின் அலங்காரப் பிரகாரத்தை ஆதாரமாகக் கொண்டு குவலயானந்தம் என்னும் தனி நூலை ஜெயதேவர் எழுதியுள்ளார்.

இதற்கு ஏழு பழைய உரைகள் உள்ளன. அதைப் பிரத்யோத்ம பட்டாச்சாரிய இயற்றிய சாரதாகமம்; பாலபட்டர் இயற்றிய 'இரமா'; காகபட்டரியற்றிய இராசாகம; விரூபாகறர் எழுதிய சாரதாவரி; மற்றும் சந்திராலோக தீபிகா; கூடார்த்த தீபிகா முதலியனவாகும். பிற்காலத்தில் சங்கரராமசாஸ்திரி எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பு, உரையுடன் வெளியாகியுள்ளது. நந்திகேசஹசர்மா, கொரீநாத சர்மா, குருபிரசாத் சாஸ்திரி ஆகியோரின் இந்தி உரைகளும் வந்துள்ளன.

## பெருந்தொகை

இதன் முதல் தொகுதியை மு. இரா. பதிப்பித்து வெளியிட்டார். இவரின் தனிப்பட்ட ஆராய்ச்சி நூல்களில் இதுவும் ஒன்றாகும். அளவில் பெரிதாய் இருப்பதால் பெருந்தொகை எனப்பட்டது. 224-பாடல்களைக் கொண்டுள்ளது. "இடைக்காலம் பிற்காலங்களுக்கு உரியதாய் பழமையான குறிப்புகளுடன் பாடங்களுடன் இயல்பெற அமைக்கப்பட்ட தனிச் செய்யுட்கோவை தக்கதாக இதுவரை கிடைக்காமையால் அக்குறையை நீக்குவதற்கு எழுந்தது இப்பெருந்தொகை" என்கிறார்.

அதிகார அடைவினைப் பெற்று இலங்குகின்றது. அனைத்து மேற்கோள் பாடல்களும் இதில் இடம் பெறவில்லை. நூல்வடிவில் வெளிவந்தவற்றிலிருந்து ஆளப்பட்ட மேற்கோள் பாடல்களை வகுத்து இன்ன நூலென்று தெரியாத எடுத்துகாட்டுச் செய்யுட்களும், உரையாளர்களால் பெயர் சொல்லி ஆளப்பட்டு இப்பொழுது கிடைத்தற்கரிதாயுள்ள நூற்செய்யுள்களும் இத்தொகையில் உள்ளடக்கப்பெற்றுள்ளன. மேலும் சுவடிகள், இதழ்கள் ஆகியவற்றில் கிடைத்த பாடல்களும், வழிவழிப் புலவர்கள் வழியாகவும், பிறர் வழியாகவும் கிடைத்த தனிப்பாடல்களும், செப்புப்பட்டயங்கள், கல்வெட்டுகள் ஆகியவற்றில் கிடைக்கப் பெற்ற பாடல்களும் இத்தொகை நூலில் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

3500 பாடல்கள் இதில் உள்ளன. கடவுள் வாழ்த்துத் தொடங்கி, அறிவியல், பொருளியல், இன்பவியல், ஒழிபியல் என ஐந்து இயல்கள் இதன் மொத்த அமைப்பாகும். 2214 பாடல்களைக் கொண்ட மூன்று இயல்களை 1935ஆம் ஆண்டில் 'செந்தமிழ்' வெளியிட்டது.

இராகவையங்காரின் பதிப்பில் எங்கெங்கும் வரலாற்றுக் குறிப்புகளே முதன்மையாக இடம் பெறும். விசேடக் குறிப்பு, செய்யுள் முதற்குறிப்பகராதி, பொருட்குறிப்பகராதி, எடுத்தாண்ட நூல் அட்டவணை, முதலியவற்றையுடையது. ஒவ்வொரு பக்கத்தின் அடிக்குறிப்பிலும் (Foot Note) பாடல் கிடைத்த இடம், பாடவேறுபாடு காட்டப்படுகின்றது. பொருட்குறிப்பு அகராதியானது விரிவானது. விசேடக்குறிப்பு என்பதில் சிறப்பு நிலை உணர்த்த வரலாற்றுப் பின்புலம் (Historical Background) உள்ளது.

இன்பவியல், ஒழிபியல் என இரண்டும் சேர்ந்து 1500 பாடல்கள் வரை இருக்கலாம் என்கிறார் பதிப்பாசிரியர் மு. இரா. தொகுத்து வைக்கப்பட்ட பெருந்தொகை இரண்டாம் தொகுதியும் பராமரிப்பின்றி மறைந்து போனது வருந்தற் பாலதாகும்.

கடவுள் வாழ்த்தியல் 220, அறிவியல் 126, பொருளியல் 1868 என்ற பகுப்பு முறை இத்தொகை நூலில் உள்ளது. இன்ன வகையான பாடல், இன்ன பொருள் பற்றியது, இச்சூழலின் பின்னணி என இவ்வாறு குறிப்பிடப் பெற்றுள்ளது இப்பதிப்பின் சிறப்பம்சமாகும்.

[பண்டைய நூலுரைகள், சுவடிகள், சாசனங்கள், கர்ண பரம்பரை முதலிய பல வழியாகவும் கிடைத்த தனிப்பாகங்களையெல்லாம், கடவுள் வாழ்த்தியல், அறவியல், பொருளியல் என முப்பெரும் பகுதிகளாக அமைத்து முறைப்படத் தொகுக்கப் பெற்றது. இதுவரை தெரிந்திராத தனிப்பாசுரங்கள் பல சரித்திரக் குறிப்புகளுடன் இதன் வாயிலாக அறியலாகும். 2200க்கு மேற்பட்ட செய்யுட்களும், அவற்றிற்கு ஆராய்ச்சிகாட்டி எழுதிய குறிப்புரையும், விரிந்த விஷய சூசிகையகராதியையும் உடையது. இந்நூல் அரிய பல செய்திகளை அறிவிப்பதாதலின் ஆராய்ச்சியாளர் பலராலும் புகழப்பட்டது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் பதிப்பித்து வெளியிடப்பெற்றது. இன்பவியல் ஒழிபியல் இரண்டும் அடங்கிய அதன் இரண்டாம் பாகம் அச்சிடப்பட்டிலது.]

– ஆராய்ச்சித் தொகுதி – முன்னுரை

நரிவிருத்தம்

'சீவக சிந்தாமணி' எனும் நூலினை இயற்றிய திருத்தக்கத் தேவர் இதனை இயற்றியுள்ளார். இவர் நரி விருத்தம் இயற்றிய பின்னரே சீவகசிந்தாமணிக் காப்பியம் இயற்ற ஆசிரியரால் உந்தப்பட்டார் என்ற வரலாற்றுக் குறிப்பு உளது.

நரி விருத்தத்தில் வெவ்வேறு விதமான கதைகள் ஒரே கோணத்தில் புனையப்படுகின்றன. திருத்தக்கத்தேவர் சீவகன்

வரலாற்றினைப் பெருங்காப்பியமாகப் பாடத்துணிந்து தம்மெண்ணத்தை ஆசிரியற்பாற் சென்று விண்ணப்பிக்க ஆசிரியரும் அவ்வாறு பாடுவதில் தம் மாணாக்கர் வல்லவர் என்பதை நன்குணர்ந்த போதிலும், அதனைப் பற்றி ஆலோசனையில் இருக்கும் பொழுது, அவ்விருவருக்கும் இடையே நரியொன்று ஓடியது. ஆசிரியர் மாணவரை நோக்கி இந்நரி சாதித் தன்மையை ஆதாரமாகக் கொண்டு உமக்குத் தோற்றியவாறே ஒரு சிறிய நூல் முதலில் இயற்றுதீர் என்று கூற, தேவரும் யாக்கை, செல்வம் நிலையாமையை ஆதாரமாகக் கொண்டு நரி விருத்தம் பாடினார் என்பது உண்டு. ஜைன சமயத்தின் தத்துவத்தினை விளக்குவதாய் உள்ள நூல் நரிவிருத்தமாகும்.

## இப்பதிப்புத் தொடர்பாக மு. இரா. கூற்று

இந்நரிவிருத்தப் பிரதியொன்று தம்மிடமிருந்ததை எனக்கு அன்புடன் அனுப்பிச் செந்தமிழில் வெளியிட்டுக் கொள்ளும் படி உபசரித்தவர் பண்டிதர் ஸ்ரீ பி.ஆர். கிருஷ்ணமாச்சாரியர் அவர்கள். இவர்களால் கிடைத்த இந்நூலை வேறு பிரதிகளுடன் வைத்து ஆராய்தல் வேண்டி என் நண்பர்களாகிய மன்னார்குடி மிஷன் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத் சர்க்கரை இராமசாமிப் புலவரவர்களையும் ஆரணி ஸ்ரீமத் சந்திநாத நயினார் அவர்களையும் உசாவினேன். இவர்கள் பெரிதும் சிரமமெடுத்து அப்பக்கத்துக் கிருகங்களிலிருந்த நரிவிருத்த ஏடுகளினின்று பிரதிகள் எழுதியனுப்பினார்கள். இன்னோர்களுடைய காலத்தினாற்செய்த நன்றிகட்கு யான் என்ன கைம்மாறு செய்யவல்லேன். இந்நரிவிருத்தத்து வரும் ஜைன கதைகள் பெரும்பாலும் இச்சங்கத்துள்ள மணிப்பிரவாள நடையினதாகிய ஸ்ரீபுராணம், உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகிய ஜீவசம்போதனை, மேருமந்தர புராணம், அருங்கலச் செப்புரை என்னும் ஜைன கிரந்தங்களால் நன்கு விளங்கின. சில கதைகள், அவற்றிற்குரிய நூல்கள் இங்கின்மையால் விளங்கக் கூடவில்லை. அது பற்றித் தமது மதவராய்ச்சியிற் தேர்ந்தவர்களான வீடூர். ஸ்ரீமத் அப்பாசாமி நயினார் அவர்கட்கு எழுதிக்கேட்டேன். அவர்கள் என் வேண்டுகோட் படியே விளங்காத கதைகள் சிலவற்றைச் சுருக்கமாக எழுதி அன்புடன் அனுப்பினார்கள். இவர்கள் உபகாரம் என்றும் என்னால் மறக்கத்தக்கதன்று. இவ்வாறு கதைகள் முழுதும் ஒரு படியாக விளங்கினமையால், அரும்பதவுரையொன்றெழுதிச் செந்தமிழ்ப் பிரசுரங்களுள் 20ஆவதாக இந்நூல் என்னால் வெளிப்படலாயிற்று (ஆராய்ச்சித் தொகுதி - 450).

பதிப்புத் தொடர்பாகப் பலரிடம் ஏடுகளைத்தேடி அலைந்து அதனைப் பெற்றுக் கொண்டதன் நன்றிக் கடனை மேற்கண்ட செய்தி

உணர்த்துகின்றது. நரிவிருத்தத்தின் கதையினை உணர்த்த விவேக சிந்தாமணி பலரும் அறியும் வண்ணம் எளிமையான பாடலாய் வெளியிட்டது. அது. பின் வருமாறு:

"கரியொரு திங்களாறு கானவன் மூன்று நாளாம்
இருதலைப் புற்றினாக மின்றுணு மிரையாமென்று
விரிதலை வேடன் கையில் விற்குதை நரம்பைக் கவ்வி
நரியனார் பட்டபாடு நாளை நாம் படுவோமன்றே"

நீதியினை, வாழ்க்கையுண்மையினை இப்பாடல் இயம்புகின்றது. இந் 'நரிவிருத்தப்பதிப்பு' முதலாவது பதிப்பு ஆகும். விருத்தம் என்னும் வகையும், நரி என்னும் விலங்கினப் பெயரும் இணைந்து 'நரி விருத்தம்' ஆயிற்று.

நரிவிருத்த நூலினைப் பாராட்டி, உ.வே. சாமிநாதையர் இராகவையங்காருக்குப் பாராட்டு மடல் ஒன்று அனுப்பி உள்ளார்.

"16-2-07 செந்தமிழில் தாங்கள் எழுதிவருவது நாளுக்கு நாள் மிகுந்த திருப்தியை அளிக்கின்றது. உழைப்பை வெளிப்படுத்து கின்றது. நரிவிருத்தம் பார்த்து மிகுந்த சந்தோஷமடைந்தேன். உங்களுடைய பலநூற்பயிற்சியையும் ஆழ்ந்த ஆராய்ச்சியின் ஒழுங்கையும் தெரிவிக்கின்றது இப்புத்தகம். நடை மிகவும் விளக்கமாகவும் திருத்தமாகவும் விளங்குகின்றது. தங்கள் போன்றவர்களுக்கு இது போன்ற காரியங்களைச் செய்தல் இயல்பாக இருந்தாலும், இக்காலத்தை உத்தேசிக்கும்போது இது மிகவும் அருமையானதென்று சொல்லாமல் இருக்க முடியவில்லை. ஈண்டுள்ள நண்பர்களும் இதனை நோக்கி இன்புற்றார்கள்"

என்கிறது அக்கடிதச் செய்தி. இதிலிருந்து மு. இராவின் புலமை, ஆய்வு, உழைப்பு போன்றவை புரியவருகின்றன.

பெருந்தொகை நூலினைப்பற்றி 22.4.1936இல் டி.கே. சிதம்பரநாத முதலியார் எழுதிய பாராட்டு மடல்.

"தாங்கள் எவ்வளவோ சிரமப்பட்டு அவைகளைத் திரட்டித் தமிழுலகுக்கு உதவியிருக்கிறீர்கள். தமிழ் பயின்றவர்கள் அதில் வருஷம் வருஷமாக உழைத்துக் கொண்டேயிருக்கலாம். அவ்வளவு அரிய மணிகள் ஆங்காங்குக் கிடைக்கின்றன. அனுபந்தப் பகுதிகள் செவ்வையாய்ச் செய்து அமைக்கப் பட்டிருக்கின்றன. முக்கியமாக விசேடக் குறிப்பும், பொருட் குறிப்பகராதியும் எவ்வளவோ பயன்படத்தக்கன.

இவ்வளவு துணைக்கருவிகளையும் செய்து முடிக்கத் தங்களுக்கு எவ்வளவோ சிரமம் ஏற்பட்டிருக்கும். புத்தகத்தை உபயோகிப் பவர்கள் தக்கபடி தங்களுக்கு நன்றி பாராட்டுவார்கள் என்று நம்புகிறேன். தாங்கள் தமிழுக்குச் செய்துள்ள இந்தத் தொண்டிற்கு என் மனப் பூர்வமான நன்றி".

– என்று அக்கடிதம் குறிப்பிடுகின்றது.

## மு. இராகவையங்காரின் பதிப்பும் பட்டியலும்

இவர் சிறந்த ஆராய்ச்சியாளர், சிறந்த நூலாசிரியர், சிறந்த பதிப்பாசிரியர். பல நூல்களை எழுதி 'மதுரைத் தமிழச்சங்கம்' மற்றும் 'செந்தமிழ்' வாயிலாக வெளியிட்டுள்ளார். மேலும் இவரின் தனிப்பட்ட ஆய்வுநூல்களும் இவரது பதிப்பில் வந்துள்ளன. பதிப்பிக்கப்பட்ட ஆண்டு சிலவற்றிற்குக் கிடைக்கப்பெற்றுள்ளது.

1. தமிழ்நாவலர் சரிதை (இந்நூல் முற்றுப் பெறாமல் போனது தமிழுக்குப் பெரும் இழப்பு). 2. நரி விருத்தம் 3. திரு வைகுந்தன் பிள்ளைத்தமிழ் 4. திருச்சிராமலை அந்தாதி 5. திருக்கலம்பகம் 6. விக்கிரம சோழனுலா 7. கேசவப் பெருமாள் இரட்டை மணிமாலை 8. சந்திராலோகம் 9. சிதம்பரப்பாட்டியல் 10. அரிச்சந்திர வெண்பா 11. அளவை வெண்பா 12. அறநெறி வெண்பா 13. அனுபோக வெண்பா

## நூற்பொருட்குறிப்பு

கி.பி. எட்டாம் நூற்றாண்டில் எழுந்த இறையனார் களவியலுரை, எட்டுத்தொகை நூலான குறுந்தொகை, ஐந்திலக்கண நூலான வீரசோழியம், பக்தி இலக்கிய நூலான திருக்கோவையார், தேவாரம் , நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் இவைகளில், நூல் ஆய்வாளர்களுக்கும், வரலாற்று ஆய்வாளர்களுக்கும் பயன்படும் வண்ணம் விஷய சூசிகை என்னும் குறிப்புகளை இணைத்துப் பதிப்பித்தார். இலக்கிய வரலாற்றில் அன்று வெளியிட்ட பொருட்குறிப்புத் தொகைநூல் இது மட்டும் ஆகும்.

இதனைப் பின்பற்றியே தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தில் சங்கஇலக்கியப் பொருட்களஞ்சியம், வாழ்வியற் களஞ்சியம், அறிவியல் களஞ்சியம் போன்றவை ஆக்கப்பட்டன.

## நிகண்டகராதியும் தமிழ்ப்பேரகராதியும்

வையாபுரிப்பிள்ளை தலைமையில் தொகுக்கப்பெற்ற தமிழ்ப்பேரகராதி (Tamil Lexicon) ஆறு தொகுதிகளை உடையது. ஒரு லட்சத்து நாலாயிரத்து நானூற்றைந்து சொற்கள் இதில் உள்ளன.

மு. இராகவையங்கார் தமிழ்ப்பேரகராதிப் பணியில் ஈடுபட்டிருந்த பொழுது நிகண்டுகளை வரிசைப்படுத்தி அகராதி போன்று அமைத்தால் பயன்படும் எனும் நிலையினை உணர்ந்தார். தமிழ்ப்பேரகராதிப் பணிக்கு நிகண்டகராதி மிகவும் உதவி புரிந்தது. ஆனால், அப்பொழுது அதை அச்சில் ஏற்றவில்லை. அச்சூழலில் திவாகர நிகண்டினையும் திருத்தம் செய்து அச்சுக்குத் தயாராக வைத்தார் இராகவையங்கார். தமிழ்ப் பேரகராதிப் பணிக்காக இவருக்கு 1939இல் 'ராவ் சாகிப்' என்னும் பட்டத்தினைச் சென்னை அரசாங்கம் வழங்கியது. நிகண்டகராதியை இறுதியில் செப்பம் செய்தவர் இவரின் மகன் ஆவார்.

## நிறைவுரை

பல்வேறு ஆய்வுகள், பதிப்புகள், பதிப்பிற்குதவி என்று பல நிலைகளிலும் இவரின் பணி மகத்தானது. சிற்றிலக்கியம், வெண்பாப் பாட்டியல், அணி, சரித்திரம் என அனைத்து வகையான நூல்களையும் பதிப்பித்துப் புகழ் பெற்றவர் மு. இராகவையங்கார். இவரால் தலபுராண நூல்களும் பதிப்பிக்கப்பட்டன.

இலக்கண, இலக்கிய, ஆராய்ச்சி, பதிப்பு தொடர்பாக இவரின் தொண்டு சீரியதாகும். மற்ற பதிப்புகளை விட இவரின் பதிப்பு ஆய்வாளர்களுக்கும் வரலாற்றுப் பின்புலங்களைத் தெரிந்து கொள்ள விரும்புவோருக்கும் அரிய பொருளாகும்.

எழுதியும், பதிப்பித்தும் வெளியிட்ட இவரின் நூல்கள் தமிழுலகில் என்றென்றும் நிலைத்து நிற்பனவாகும். இவர் எழுதிப் பதிப்பிக்க உதவிய 'கூத்தர் வரலாறும்' வி.ராமச்சந்திர தீட்சதர் எழுதிய, மூன்றாம் குலோத்துங்க சோழனும், சிறந்த வரலாற்று நூல்களாகும். பல நூல்களைத் தனியாக நின்று பதிப்பித்த உவே.சாமிநாதையரும், எண்ணற்ற நூல்களை எழுதிப் பதிப்பித்த வையாபுரிப்பிள்ளையும் இவரை மனம் நெகிழும் வண்ணம் பாராட்டியுள்ளனர். 'பணவிடுதூது' நூலைப் பதிப்பிக்க வையாபுரிப்பிள்ளையவர்களுக்கு இவர் உதவினார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## துணை நூல்கள்


1. மா.சு. சம்பந்தன் (1969), அச்சுக்கலை
2. மா.சு. சம்பந்தன் (1980), அச்சும் பதிப்பும்
3. மது.ச. விமலானந்தம், தமிழிலக்கிய வரலாறு
4. ஆராய்ச்சித் தொகுதி (1969), மு. இராகவையங்கார்
5. வாழ்வியற்களஞ்சியம் (1981), தொகுதி மூன்று
6. வாழ்வியற்களஞ்சியம் (1986), தொகுதி ஏழு

# இதிகாச, புராண ஆய்வுகள்

சிலம்பு நா. செல்வராசு

நூறு ஆண்டுகளுக்கு முன்னால் அமைந்த தமிழ் ஆராய்ச்சியின் போக்கினை மதிப்பீடு செய்வதற்கு மு. இராகவையங்காரின் கட்டுரைகள் பெரிதும் துணை செய்கின்றன. ஆங்கிலேயரின் வருகைக்குப் பின்னரும் அச்சு இயந்திரங்களின் வருகைக்குப் பின்னரும் தமிழ் இலக்கியங்கள் பெரும் அளவில் பொதுமக்களைச் சென்றடைந்தன. இத்தகு சூழலில் தொடக்க கால ஆய்வு என்பது அதாவது 19ஆம் நூற்றாண்டின் பின்பகுதிக் கால ஆய்வு என்பது தமிழ் இலக்கியத்தை மக்களிடையே அறிமுகப்படுத்துவதாகவே அமைந்தது. சங்க இலக்கியம் தொடங்கிப் பல்வேறு இலக்கியங்களின் பாடுபொருண்மை முதலியன வெளிப்படுத்தப்பட்டன.

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தமிழில் வெளிவந்த இதழ்கள் இருவித சித்தாந்தங்களைத் தாங்கி வந்தன. ஒன்று கிறித்துவ மதப் போதனைகளையும், தத்துவங்களையும் பாடல்களையும், நடப்பியல்களையும் தாங்கி வெளிவந்தவை. மற்றது இந்துமதச் சார்பாக வெளிவந்தவை. இந்த இதழ்களில் இந்துமதச் சித்தாந்தம், விரத மகிமைகள், புராணங்கள், சங்க இலக்கிய வரலாறுகள், புலவர்கள், வான, வைத்திய சாத்திரங்கள் முதலியன இடம் பெற்றன.

இலக்கிய அறிமுகம் என்ற நிலையைத்தாண்டி, தர்க்கவியல் அடிப்படையிலும் விவாதப் போக்கின் அடிப்படையிலும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பெற்றன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளிவந்த 'செந்தமிழ்' இதழ் முழுக்க முழுக்க ஆராய்ச்சி இதழாக வெளிவரத் தொடங்கியது. இவ்விதழுக்கு ரா. ராகவையங்காரை அடுத்து மு. இராகவையங்கார் ஆசிரியராகப் பொறுப்பேற்றுக் கொண்டார். இந்த இதழில் இவர் எழுதிய கட்டுரைகள் பெரிய அளவில் வரவேற்கப் பெற்றுள்ளமை அக்காலத்து அறிஞர்கள் இவர்க்கு எழுதிய கடிதங்கள் வாயிலாகத் தெரிய வருகின்றது. இக் கட்டுரைகளில் இடம் பெற்றுள்ள ஆய்வுநெறிமுறைகள் இன்றும் கடைப்பிடிக்கத் தக்க சிறப்பை உடையன. இவர்தம் ஆய்வு பற்றி வையாபுரிப்பிள்ளை எழுதுவது வருமாறு:

இலக்கியம், இலக்கணம், மொழிநூல், எழுத்து வரலாறு, நூற்பதிப்புமுறை, நூலாராய்ச்சி, தேசசரித்திரம், சமயம், பண்டைய ஆசிரியர்கள், பண்டைய தமிழ் மக்களின் ஒழுக்கநெறி, சிலாசாசனங்கள், இடப்பெயர்கள், பண்டைக் காலத்துச் சான்றோர் முதலிய பலபொருள்கள் இக்கட்டுரைத் தொகுதியிலே (ஆராய்ச்சித் தொகுதி நூலில்) அடங்கியுள்ளன... ஆசிரியர் விவாத விஷயத்தில் மட்டும் கண்ணும் கருத்துமாய் இருக்கிறார். இக்காலத்துச் சிலர் செய்வது போல வாசிப்பாருக்கு அருசி தோன்றும்வண்ணம் எதிர் கூறுவாரை இழித்துரை யாடுதல் ஓரிடத்தும் காணுதல் இல்லை... விவாத விஷயங்களின் முடிபுகளைக் குறித்து யாதொன்றும் இங்குக் கூறுதல் தக்கது அன்று. எனினும் ஒன்று மட்டும் துணிந்து கூறலாம். பெரும்பாலும் ஆசிரியரது முடிந்த கருத்துகள் கொள்ளத் தக்கனவாகவே உள்ளன... இப்பதிப்பில் தொகுக்கப் பெற்றுள்ள கட்டுரைகள் அனைத்திலும் ஆராய்ச்சி நயம் சிறந்து விளங்குதல் காணலாம். ஒவ்வொன்றிலும் இதுவரை பிறரால் அறியப்படாத ஒரு புதிய முடிவு ஆராய்ந்து நிறுவப்பட்டுள்ளது. முடிவு நிறுவுகிற முறையும் பெரிதும் போற்றத்தக்கது. ஆசிரியர் அறிவினின்றும் காரணங்கள் சுரந்தெழுந்த வண்ணமாயுள்ளன. இக்காரணங்கள் ஒன்றன் மேல் ஒன்றாய்ச் சூழ்ந்து கற்பார் மனத்தை முற்றுகை இட்டுக் கைப்பற்றித் தமதாக்கிக் கொள்ளுகின்றன. சாதாரணமாகக் கருதும் ஆராய்ச்சிப் பொருளும் கூட இவ்வாசிரியரது எழுதுகோலால் அழகிய உருவமெடுத்து வந்து நம் அறிவை வசீகரித்து விடுகிறது.

வையாபுரிப் பிள்ளையின் இக்கூற்று மு.இராகவையங்காரின் ஆய்வுத்திறனை முழுமையாக அளவிட்டுள்ளது என்றே கூறுதல் வேண்டும்.

மு. இராகவையங்கார் கட்டுரைகளை எவ்வாறு அமைத்துள்ளார் என்பதற்கு "அருச்சுனனும் பாண்டிய மரபும்" என்ற கட்டுரையை எடுத்துக் காட்ட இயலும். இக்கட்டுரையில் அருச்சுனன் பாண்டியன் மகளை மணந்தான் என்ற ஒரு புராணச் செய்தியை முன் வைக்கின்றார். இச்செய்தி இடைச் செருகலே அன்றி வேறில்லை என்ற ஆய்வாளர் சிலரின் முடிவுகளையும் தொகுத்துத் தந்துள்ளார். இதன் பின்னர் இடைச் செருகல் என்பாரின் கூற்றினை மறுத்து அருச்சுனன் மணந்தது பாண்டியன் மகளையே என்ற கருத்தை வலுப்படுத்தும் காரணங்களை ஒன்றன் பின்னர் ஒன்றாக வரிசைப்படுத்தி எடுத்துக் கூறியுள்ளார். இவ்வரிசைப் படுத்தலில் பின்வரும் தரவுகள் ஆராயப்பட்டுள்ளன.

1. செப்பேட்டுச் செய்திகள்
2. வடமொழித் தரவுகள்
3. இலக்கண மேற்கோள் செய்திகள்
4. நாட்டுப்புறவியல் சான்றுகள்
5. வெளிநாட்டார் குறிப்புகள்
6. அகராதி இயல் தரவுகள்

மு. இராகவையங்கார் ஓர் ஆய்வு முடிவினை நிறுவுவதற்குப் பல்வேறு துறைசார்ந்த தரவுகளைப் பயன்படுத்தியுள்ளார் என்பதை உணரமுடிகின்றது. இதன்வழி இவரது பரந்துபட்ட ஆழ்கல்வியின் தன்மையையும் உணர முடிகின்றது.

"ஆராய்ச்சித் தொகுதி" எனும் நூல் மு. இராகவையங்காரின் மணிவிழாச் சிறப்பு நூலாக 1938இல் வெளியிடப் பெற்றுள்ளது. மு. இராகவையங்கார் நாற்பது ஆண்டுகளில் நிகழ்த்திய ஆய்வுகளுள் குறிக்கத்தக்க முப்பத்தைந்து கட்டுரைகள் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் இதிகாசங்களையும் புராணங்களையும் ஆராயும் நான்கு கட்டுரைகள் இந்த மதிப்பீட்டு ஆய்விற்கு முதன்மைத் தரவுகளாக அமைகின்றன. அவை வருமாறு:

1. ஸ்ரீவான்மீகி முனிவரும் தென்னாடும்
2. இராமாயணமும் தமிழ் வழக்கும்
3. கண்ணபிரானைப் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள்
4. அருச்சுனனும் பாண்டியமரபும்

இக்கட்டுரைகள் நுவலும் பொருண்மை பற்றிய குறிப்புகள் வருமாறு:

## ஸ்ரீவான்மீகிமுனிவரும் தென்னாடும்

வான்மீகி முனிவர் தென்னாட்டைப் பற்றி அறிந்திருந்த செய்திகளையும் அவற்றை இராமாயணத்துள் குறிப்பிட்ட தன்மைபற்றியும் விரிவாக இக்கட்டுரை ஆராய்ந்துள்ளது. மறுதலையாக இராமாயண இதிகாசத்தில் தமிழகத்தின் பங்கினையும் அதன் வழியாகத் தமிழகத்தின் தொன்மையையும் இக்கட்டுரை பதிவு செய்துள்ளது. கிட்கிந்தையில் சுக்கிரீவன் சீதையைத் தேடிக் கண்டுபிடித்து வரும்படி வானரவீரர்களை ஏவும்போது தென்பக்கமாகச் செல்லுதற்குரியாரை நோக்கிச் சொல்லுவதாக இராமாயணத்துள் ஒரு பகுதி அமைந்துள்ளது. இப்பகுதியில் தென்னிந்தியா, குறிப்பாகத் தமிழகம் பற்றிய நிலவியல் வரலாற்றியல் செய்திகள் பதிவாகி உள்ளமையை அறியமுடிகின்றது. வானர வீரர்கள் தென்திசை நோக்கிச் செல்லும்போது எவ்வெவ்

இடங்களைக் காணலாம் என்பது பற்றிய பட்டியலாக அப்பதிவு நீண்டுள்ளது.

> மலைகளும் நதிகளும் குகைகளும் உடைய தண்டகாரணியம்;
>
> ஆந்திரம் புண்டரம் சோழம் கேரளத்தொடுகூடிய பாண்டிய நாடுகள்;
>
> பெரிய அயோமுகமலை (குடகுமலை);
>
> தேவரம்பையர் வந்து நீராடுகின்ற காவேரி நதி;
>
> மிகுந்த ஒளி உடைய முனிசிரேட்டர் அகத்திய முனிவர்;
>
> முதலைகள் நிரம்பிய தாமிரபர்ணி நதி;
>
> பொன் நிறைந்ததாயும், அழகுடையதாயும், முத்து மயமான மணிகளால் அலங்கரிக்கப் பெற்றதாயும் பாண்டியர்க்கு யோக்கியமாயுள்ள கவாடம்

முதலிய பகுதிகள் குறிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் தண்டகாரணியம் பற்றிய விவரங்கள் மிகுதியாக அறியப்படுகின்றன.

அகத்தியமுனிவர் இராமனிடம் கூறுவதாகத் தண்டகாரணியம் பற்றிய செய்திகள் அமைந்துள்ளன. விந்திய மலையின் தெற்கே ஆயிரம் யோசனை தூரம் இப்பகுதி விரிந்து கிடந்தது. பார்க்கவ முனிவரின் சாபத்தால் பாலைவனமாகக் கிடந்தது. மழையும் நல்ல காற்றும் இல்லாமல் நச்சுச் செடிகளும் வெம்மையும் மிக்கு அச்சம் தரத்தக்கதாகிய அனற்புகை சூழ்ந்து கிடந்தது. பின்பு இமயத்திலிருந்து வந்த அகத்தியர் இப்பகுதியை நாடாக்கினார். நல்லமழையும், தாமரை ஓடைகளும் குளங்களும் அமைக்கப்பட்டன. இருடிகள் குடிகொண்டனர். பலவகைத் தானியங்கள் விளைவிக்கப்பட்டன. இவற்றை அகத்தியரே செய்து முடித்தார் என்று இராமாயணம் விவரிக்கிறது.

இந்தத் தண்டகாரணியம் சேர, சோழ, பாண்டிய நாடுகளை அடுத்து வடபால் ஆயிரம் யோசனை தூரம் பரவிக்கிடந்தது என்பதைக் கட்டுரை ஆசிரியர் விளக்கி உள்ளார்.

இதனை அடுத்துத் தமிழ்நாட்டின் நிலவியலும், அரசு பற்றிய குறிப்புகளும், சில பண்பாட்டு வழக்காறுகளும் வான்மீகி எவ்வாறு இராமாயணத்துள் குறிப்பிட்டுள்ளார் என்பதைக் கட்டுரையாசிரியர் விரிவாகக் கூறியுள்ளார். "சோளாந் பாண்டியாந் சகேரளாந்" என்று சோழ நாட்டையும் கேரளத்தோடு கூடிய பாண்டிய நாட்டையும் வான்மீகி குறிப்பிட்டுப் பாண்டியரின் கவாடத்தையும் வருணித்துள்ள விதம் விளக்கப்பட்டுள்ளது. கவாடம் என்பதன் பொருள் என்ன

என்பது பற்றி விரிவாக ஆராயப்பட்டுள்ளது. முசிறிப் பட்டணம், காவிரிப்பூம் பட்டினத்தை உள்ளடக்கிய சுவேதாரண்யம் ஆகியனவும் கூறப்பட்டுள்ளன. தென்னாட்டவர் போரின் போது பூவணியும் மரபும் இறந்தவரைப் புதைக்கும் வழக்கமும், இலக்கணக் கூறாகிய காரச்சாரியை ஆகியனவும் வான்மீகி முனிவர் இராமாயணத்துள் கூறிய விதம் விவரிக்கப்பட்டுள்ளது.

## இராமாயணமும் தமிழ் வழக்குகளும்

வடநூல்களில் இல்லாத கதைப்பகுதிகள் தமிழில் வழங்குவன உண்டு என்றும் அவ்வாறு வழங்குவனவற்றுள் இராமாயணக் கதைப் பகுதிகள் மிகுதி என்றும் மு.இராகவையங்கார் குறிப்பிடுகின்றார். சங்க காலம் தொடங்கித் தமிழில் வழங்கும் இராமாயண வழக்காறுகளைத் தொகுத்து அவை மூல நூலொடு ஒத்தும் உறழ்ந்தும் அமைந்த விதத்தை விளக்கித் தொல் தமிழரின் இதிகாச உறவை விவரித்து உள்ளார். சீதை மதியுடம்பாடு, அகல்யா சாபம், பிராட்டி கழற்றியிட்ட அணிகளும் குரக்கினமும், ஆலின் கீழ் இராமபிரான் புரிந்த மந்திராலோசனை, குரங்கு செய்த குமரியம் பெருந்துறை, அணிலும் சேதுபந்தனமும், இராமாயணப்போர் நடந்தேறிய காலம் முதலான பல்வேறு தலைப்புகளில் செய்திகள் ஆராயப்பட்டுள்ளன.

## கண்ணபிரானைப் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள்

திருமாலைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டு வந்த முறை, தமிழ்மக்களது புராதன சமயங்களுள் ஒன்றாகும் என்று கூறும் மு. இராகவையங்கார் முல்லை நிலம் பற்றியும் முல்லை நிலக் கடவுள் திருமால் பற்றியும் திருமாலை வழிபட்டு வந்த வேளிர், ஆயர் ஆகியோர் பற்றியும் விவரித்துத் தமிழ்நாட்டிற்கேயுரிய கண்ணன் கதைகளை விளக்கி இவற்றிற்கான மூல ஆதாரத்தை வடமொழியிலும் தேடி இருப்பதை இக்கட்டுரை மையப்பொருளாகக் கொண்டுள்ளது. நப்பின்னைப் பிராட்டியார், குருந்தொசித்தது, குடக்கூத்து முதலிய ஆடல்கள், ததிபாண்டனுக்கும் தாழிக்கும் வீடளித்தது, சீமாலிகன் தலை அறுப்புண்டது முதலிய புராணக் கதைகளை இக்கட்டுரை விளக்கிச் செல்கின்றது.

## அருச்சுனனும் பாண்டியமரபும்

தீர்த்த யாத்திரை மேற்கொண்டு தென்திசை செல்லும் அருச்சுனன், பாண்டியன் மகளை மணந்து பப்ருவாகனன் எனும் மகனைப் பெற்றெடுத்த நிகழ்ச்சி தென்னாட்டில் வழங்கும் பாரதப் பிரதிகளில் காணப்படுகின்றது. இந்நிகழ்ச்சி இடைச்செருகலாகச் சேர்க்கப்பட்டது என்பாரின் கூற்றை மறுத்து மூல பாரதத்திலேயே

இதற்குச் சான்று உண்டு என்று நிறுவுகின்றார் மு. இராகவையங்கார். பாண்டியரின் தொல் வரலாறு பாண்டவர் மரபிலிருந்து தோற்றம் கொள்கின்றது என்பதையும் கட்டுரை ஆசிரியர் விரிவுபட விளக்கியுள்ளார்.

## மு. இராகவையங்காரின் இதிகாச, புராண ஆய்வுமுடிவுகள்

இந்த நான்கு கட்டுரைகளில் ஏராளமான தரவுகளின் அடிப்படையிலும் விவாதத்தின் அடிப்படையிலும் மு.இராகவையங்கார் ஆங்காங்கே சில முடிவுகளைத் தந்து சென்றுள்ளார். அத்தகு முடிவுகளுள் சில வருமாறு:

1. விந்தியத்தின் தென்பாலுள்ள நாடுகளைக் குறிக்கும் வான்மீகியார், "சோளாந் பாண்டியாந் ஸகேரளாந்" என்று கூறியுள்ளார். 'சோழதேசம் கேரளத்தொடு கூடிய பாண்டிய தேசம்'- என்பது இதன் பொருள். இந்த வாக்கிய அமைப்பை இலக்கண ஆய்விற்கு உட்படுத்தி மு. இராகவையங்கார் ஆராய்ந்துள்ளார். "கேரளத்தொடு கூடிய பாண்டிய தேசம்" எனும் தொடர்,

"ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே" என்ற தொல்காப்பிய நூற்பா வழியே ஆராயப்பெற்றுள்ளது. இந்நூற்பாவின் படி கேரளதேசம் உயர்ந்தது என்பது புலனாகின்றது. ஆனால் வடமொழி இலக்கண மரபு இதற்கு நேர் மாறானது என்பதை மு. இராகவையங்கார் விளக்கியுள்ளார்.

'ஸஹயுக்தே அப்ரதானே'

என்பது அவ்விலக்கண மரபு. இதன்படி "ஒரு வினை ஒடுச்சொல் இழிபின் வழித்தே" என்பது பொருளாகின்றது. எனவேதான் உயர்ந்த பாண்டிய நாட்டைக் கேரள நாட்டோடு இணைத்து வான்மீகியார் கூறியுள்ளார் என்பது அவர் கருத்து. 'கேரளத்துக்கு ஒடுக் கொடுத்திருப்பதால் வான்மீகி காலத்தில் பாண்டிய நாட்டுக்குள் அடங்கிச் சேரநாடு இருந்தது போலும்' எனவும் முடிவு உரைத்துள்ளார்.

2. தென்திசை நோக்கிச் சீதையைத் தேடிச் செல்லும் வானர வீரர்களிடம் சுக்கிரவன் கூறுவதாக அமைந்த பகுதியில், "பொன்னிறைந்ததாயும் அழகு உடையதாயும் முத்துமயமான மணிகளால் அலங்கரிக்கப்பட்டதாயும் பாண்டியர்க்கு யோக்கியமானதாயும் உள்ள கவாடத்தை வானர வீரர்களே பார்க்கக் கடவீர்" என்று பாண்டியரின் கபாட புரம் குறிக்கப் பெற்றுள்ளது. இப்பகுதியை ஆராயும் மு.இராகவையங்கார் 'கவாடம்' என்பதற்கு "வாயிற்கதவு" என்று உரைவிளக்கம் தரும் திலகர், தீர்த்தர் முதலியோர்

வாதங்களை மறுத்துரைத்து உள்ளார். இவ்வுரையாசிரியர்கள் மேல் பகுதிக்குப் 'பாண்டியரது நகரவாயிற் கதவு' என்றே பொருள் கொண்டனர். மு. இராகவையங்கார் இதனை மறுத்துக் கோவிந்தராஜர் முதலியோர் உரைகளின் வழியும், முச்சங்கம் பற்றிய தரவுகளின் வழியும், பாண்டியரின் இரண்டாம் தலைநகராகிய கபாடபுரம் பற்றியும் அந்நகரம் கடல்கோளால் அழிந்தது பற்றியும் பல்வேறு தரவுகளின் வழியே விவாதித்து இறுதியில் 'கவாடம்' என்பது பாண்டியரின் தலைநகராகிய கபாடபுரமே என்று நிறுவியுள்ளார்.

3. வான்மீகியார் பாண்டிய நாட்டைக் குறிப்பிட்ட அளவு சோழநாட்டைக் குறிப்பிடவில்லை என்ற கருத்து மு.இராகவையங்காருக்கு உண்டு. சோழநாட்டின் தலைநகரான காவிரிப்பூம்பட்டினத்தை வான்மீகி சுட்டவில்லை என்றாலும் அதன் பக்கத்திலுள்ள ஒரு தலத்தைச் சுட்டி உள்ளார் என்பர். "சுவேதாரண்யத்தில் உருத்திரனால் தகிக்கப்பட்டு அந்தகன் மாய்ந்ததுபோல இராமனுடைய சராக்கினியால் தகிக்கப்பட்டுக் கரன் பூமியில் வீழ்ந்தான்' என்ற வான்மீகியின் கூற்றில் சுவேதாரண்யம் எனும் பகுதி சுட்டப்பட்டுள்ளது. இப்பகுதி பற்றி மு.இராகவையங்கார் விரிவாக ஆராய்ந்து சுவேதாரண்யம் சீர்காழி வட்டத்தில் காவிரிப்பூம்பட்டினத்திற்கு அருகில் உள்ள திருவெண்காடு எனும் தலமே என்று முடிவு கூறியுள்ளார்.

4. வான்மீகியார் தமிழ் இலக்கண மரபு ஒன்றை ஏற்றுத் தம் இதிகாசத்தில் குறித்துள்ளதும் ஆராயப்பட்டுள்ளது. ஆரணியகாண்டத்தில் மாரீசன், இராவணனிடம் இராமனது பெருமையைக் கூறுமாறு ஒருபகுதி அமைந்துள்ளது. "இராமனுக்கு நான் மிகவும் பயந்திருக்கிறேன். ஆதலால் (இராமன் என்ற சொல்லில் உள்ள) ரகாரத்தில் தொடங்கும் 'ரத்னம்' 'ரதம்' என்ற பெயர்கள் கூட எனக்குப் பெரும் பயத்தை உண்டாக்குகின்றன" என்பது அப்பகுதி. இவ்விடத்தில் ரகாரம் என்பது 'இப' சாரியை பெற்று ரேபாதிநீ என வழங்கப் பெற்றிருக்கவேண்டும். ஆனால் வான்மீகி அவ்வாறு செய்யாது மாரீசனின் மொழியாக, தமிழ் வழக்கை மேற்கொண்டு 'ரகாராதிநீ' என்று கூறியுள்ளார். 'ரகாராதிநீ' என்பதில் உள்ள ரகாரத்தின் 'காரச் சாரியை' தமிழ் இலக்கண மரபுவழிப்பட்டது. தமிழர் 'ரகாரம்' எனக் 'காரச்' சாரியை இட்டே வழங்குவர்.

5. மிதிலை நகரக் கன்னிமாடத்தில் சீதாப்பிராட்டி நின்றபோது முனிவருடன் அந்நகருக்குள் நுழைந்த இராமன் சீதையைத் தற்செயலாகக் காண அவளும் அவனைக் கண்டு இருவரும் நோக்கெதிர் நோக்கி உள்ளம் கலந்து ஒருயிர் ஆயினர். இந்நிலையைக் கம்பர் பின்வருமாறு பாடுவர்:

*எண்ணரு நலத்தினா ளினைய நின்றுழிக்*
*கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்று*
*உண்ணவும் நிலைபெறாது உணர்வு மொன்றிட*
*அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்*

*பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்து*
*ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்*
*வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்*
*இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினார்.*

இராமனும் சீதையும் திருமணத்திற்கு முன்பாகவே ஒருவரை ஒருவர் நோக்கினர் என்பதும் காதல் கொண்டனர் என்பதும் தம் உள்ளத்தை இழந்தனர் என்பதும் தமிழர் அக இலக்கிய மரபு வழிக் கம்பர் புனைந்துரைப்பதாகும்.

ஆனால் இந்நிகழ்வு மூல இராமாயணத்துள் இடம் பெறவில்லை. வில்முறிவு நிகழ்ந்த பின்னரே இராமன் சீதையைக் கண்டான் என்று வான்மீகி கூறுவர். இவ்வாறு கம்பர் காப்பியத் தலைமக்களின் உள்ளக்கலப்பைத் தமிழ் இலக்கிய மரபிற்கு ஏற்பக் கற்பனையாகவே புனைந்துள்ளார் என்பது பலரும் உணரத்தக்கது என விவரிக்கும் மு. இராகவையங்கார் இந்நிகழ்ச்சி கம்பர்க்கும் முற்பட்ட தமிழ் இலக்கிய மரபில் இடம் பெற்ற ஒன்றே என்பதை விரிவுபட ஆராய்ந்துள்ளார். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில்

*ஆள்வினை முடித்த அருந்தவ முனிவன்*
*வேள்வி போற்றிய விராமன் அவனொடு*
*மிதிலை மூதூர் எய்திய ஞான்றே*
*மதியுடம் பட்ட மாக்கண் சீதை*
*கடுவிசை வின்ஞாண் இடியொலி கேளாக்*
*கேட்ட பாம்பின் வாட்டம் எய்தித்*
*துயிலெழுந்து மயங்கினள் அதான்று*
(தொல்.பொருள்.54.உரை)

என்ற பழைய செய்யுட் பகுதியை - சுட்டி ஒருவர் பெயர் கொண்ட கைக்கிளைக்கு - நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டுவர். இதனுள் "இராமன் மிதிலை மூதூர் எய்திய ஞான்றே மதியுடம்பட்ட சீதை" என்பதனால் இராமன் மிதிலைக்குள் நுழைந்தபோதே உள்ளப்புணர்ச்சியாகிய மதியுடம்பாடு அவர்க்கும் சீதைக்கும் நிகழ்ந்தது என்பது தெரிய வருகின்றது. இப்பாட்டு கம்பருக்கும் முன்பு பழைய இராமாயணத்தைச் சேர்ந்ததாகவோ அல்லது வேறு நூலுக்கு உரியதாகவோ இருத்தல் வேண்டும் என்பர் மு. இராகவையங்கார்.

இதனால் கம்பர், சீதா இராமரின் மதியுடம் பாட்டைத் தாமே கற்பித்துக் கூறிடவில்லை என்பதும் முன்னோர் அகத்துறையை நயம்படக் கூறியதையே தாமும் தம் காப்பியத்துள் நயம்பட அமைத்துள்ளார் என்பதும் மு. இராகவையங்காரின் முடிவுகள் ஆகும்.

6. அகலிகை இந்திரனுடன் கூடிய செய்கையின் பொருட்டுக் கௌதம முனிவரால் சாபம் எய்திக் கல்லுரு ஆனாள்.

> எல்லையின் நாணம் எய்தி யாவர்க்கும் நகைவந்தெய்தப்
> புல்லிய பழியினோடும் புரந்தரன் போய பின்றை
> மெல்லியலாளை நோக்கி விலைமகள் அனையநீயும்
> கல்லியல் ஆதி யென்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள்

என்று கல்லுருவாக அகலிகை சபிக்கப்பெற்ற நிலையைக் கம்பர் கூறுகின்றார். அகலிகையைக் கலந்த பின்பு அங்குக் கௌதம முனிவர் வருதலை அறிந்து, "புரந்தரன் நடுங்கி ஆங்கோர் பூசையாய்ப் போகலுற்றான்" என்று பூனை வடிவாகச் செல்வதைக் கம்பர் கூறுவர். ஆனால் வான்மீகி இந்திரனை அவனது இயற்கை உருவத்துடன் முனிவர் கண்டனர் என்று கூறுவர். மேலும் "அநேக ஆண்டுகள்வரை உணவின்றிக் காற்றையுண்டு சாம்பரில் வீழ்ந்து தவித்துக் கொண்டிருப்பாய் என்றும் எல்லாப் பிராணிகளுக்கும் கண்ணுக்குப் புலப்படாமலே இவ்வாச்சிரமத்தில் வாழ்வாயாக என்றும் அருந்திறல் படைத்த இராமன் இந்த வனத்துக்கு எப்பொழுது வருவாரோ அப்போது நீ புனிதம் அடைவாய் என்றும்" வான்மீகி அகலிகை சாபம் பெற்ற நிகழ்ச்சியை விவரிப்பர். இவ்வாறு முதல் நூலோடு மாறுபடக் கம்பர் பாடியதும் பழைய தமிழ் வழக்குப் பற்றியதே ஆகும். இப்பழைய தமிழ் வழக்குப் பரிபாடலில் இடம் பெற்றுள்ளது.

> இந்திரன் பூசை, இவள் அகலிகை இவள்
> சென்ற கவுதமன் சினன்உறக் கல்லுரு
> ஒன்றிய படியிது என்றுரை செய்வோரும்
> (பரி. 19:50–52)

இதுவே பழைய தமிழ் இராமாயண வழக்கு என்றும் இதனைத் தழுவியே கம்பரும் தம் காப்பியத்துள் அமைத்தார் என்றும் மு. இராகவையங்கார் விரித்துரைப்பர்.

7. கண்ணபிரான் மணந்த தேவியருள் தமிழ் நூல்களில் மிகுதியும் சிறப்பித்துக் கூறப்படுபவர் நப்பின்னை ஆவார். சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி முதலான பல்வேறு

நூல்களில் நப்பின்னை பற்றிய வரலாறு உண்டு. ஆழ்வார்களும் நப்பின்னை பெருமையையே பெரிதும் பேசுவர். நப்பின்னை ஆயர் குலமகள் எனவும் இவரைக் கண்ணன் மணந்து கொள்வதற்காக ஏழுகாளைகளை அடக்கினார் எனவும் தமிழ்நூல்கள் கூறும்.

ஆயர்பாடியில் எருமன்றத்து
மாயவனுடன் தம்முனாடிய
வால சரிதை நாடகங்களில்
வேனெடுங்கட் பிஞ்ஞையொடாடிய
குரவை யாடுதும் யாமென்றால்

என்ற சிலப்பதிகார அடிகள் ஆயர்பாடியில் தெரு மன்றத்தில் யசோதையும் பிறரும் காணும்படி கண்ணனும் பலராமனும் பின்னையை நடுவிற் கொண்டு ஆடிய குரவைக் கூத்தினைக் குறிப்பிடுகின்றன. இவ்வாறு கண்ணன் நிகழ்த்திய செயல்களைப் பண்டைத் தமிழ் மக்கள் நாடகமாக நடித்து வந்தமை தெரிய வருகின்றது.

வடநூல்களை ஆராயுமிடத்துக் கண்ணன் மணந்த தேவியர் பல்லாயிரவர் ஆவர். அவருள் தலைசிறந்தார் ருக்மணியும் சத்தியபாமையும் ஆவர். இதனைப் பாகவதத்தாலும் விஷ்ணு புராணத்தாலும் அறிஞர் விளக்குவர். இவருள் நப்பின்னை இடம்பெறாதது குறிப்பிடத்தக்கது. என்றாலும் நப்பின்னை வரலாற்றை ஆராயும் மு. இராகவையங்கார் பாகவதத்தில் கும்பாண்டன் என்பவனின் ஏழு காளைகளை அடக்கிச் சத்தியை என்பவளைக் கண்ணன் மணந்த வரலாறு நப்பின்னை வரலாற்றொடு தொடர்புடையது என்பதை ஆராய்ந்துள்ளார். இதே போல் நெல்லிநகர் வரதராசர் இயற்றிய பாகவதத்திலும் நப்பின்னை வரலாறு இடம்பெற்றுள்ளது என்று விளக்கி உள்ளார்.

மிதிலை தேசத்து நந்தகோபன் மைத்துனனும் மிகுந்த ஆநிரை உடையவனும் யசோதையின் தம்பியுமான கும்பகன் என்பவனின் மகள் நீளை என்பவளே நப்பின்னை என்று ஹரிவம்சத்தின் பழைய சுலோகங்களை மேற்கோள் காட்டி மு. இராகவையங்கார் நிறுவுவர். இவ்வாறாகத் தமிழ்நாட்டில் சிறப்புற்றிருந்த நப்பின்னை வரலாற்றை வடமொழி நூல்களில் இடம் பெற்றுள்ள சான்றுகளை மேற்கோள் காட்டி விளக்கி உள்ளதை அறியமுடிகின்றது.

8. அருச்சுனனுக்கும் பாண்டிய மரபுக்கும்உள்ள தொடர்பு விரிவான முறையில் ஆராயப்பட்டுள்ளது. வியாச பாரதம் ஆதி

பர்வத்தில் தீர்த்த யாத்திரையின் பொருட்டு யாத்திரை மேற்கொண்ட அருச்சுனன் வரலாறு கூறப்பட்டுள்ளது. யாத்திரை செல்லும் அருச்சுனன் நாகக் கன்னியாகிய உலூபியை மணந்த பின்பு கலிங்கம் முதலிய நாடுகளைக் கடந்து பாண்டிய நாடு சென்று நிகழ்த்திய வரலாறு தென்னாட்டுப் பிரதிகளில் காணப்படுகிறது.

இவ்வரலாற்றால் சித்திரவாகனன் என்னும் மணலூர் புரத்து அரசன் மகளை அருச்சுனன் மணந்து பப்ருவாகனன் என்னும் மகனைப் பெற்றான் என்பது விளங்கும். இக்கதை நிகழ்ச்சி ஆதிபர்வம் அம்சாவதாணபர்வத்தில், "அவன் ஒரு வருஷம் முழுவதும் மேலே ஒரு மாசமும் வனத்தில் வசித்துத் தீர்த்த யாத்திரையும் செய்து நாகக் கன்னியையும் பாண்டியன் பெண்ணையும் அடைந்து அங்கே வாசம் செய்தான்" (அத்.64) என்று குறிக்கப் பெறுகின்றது.

இவ்வரலாறே விஷ்ணுபுராணம் நான்காம் அம்சத்திலும் பாகவதம் பத்தாம் ஸ்கந்தத்திலும் பாரத சம்புவிலும் கூறப்பட்டுள்ளது. ஆயின் வடநாடுகளில் வழங்கும் பாரதப் பிரதிகளில் மணிபுரத்து அரசனாகிய சித்திரவாகனன் மகளையே விஜயன் மணம் புரிந்தான் என்றும் இவர்க்குப் பிறந்தவனே பப்ருவாகனன் என்றும் கூறப்பட்டுள்ளன. இவ்வேறுபாடு பற்றிய விவாதத்தின் போக்கினை மு. இராகவையங்கார் பின்வருமாறு கூறுவர் :

> வடநாட்டுப் பாடமே உண்மையுடையதாக வேண்டும் என்றும் பாண்டியன் மகள் எனும் வழக்குப் பிற்காலத்து இடைச் செருகலாகக் கொள்ளத்தக்கது என்றும் விதேச அறிஞர் எல்லாரும் கருதியதோடு சுதேச நிபுணர் சிலரும் அங்ஙனமே எழுதிச் சென்றனர். இவ்வாறு எழுதியதற்குக் காரணம் வடநாட்டுப் பிரதிகளில் அதிக மதிப்பு வைத்ததே அன்றிப் பிறிதன்றாம்

என்று கூறும் மு. இராகவையங்கார் அருச்சுனன் மணந்தது பாண்டியன் மகளையே என்பதைப் பல்வேறு சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.

மணற்புரம் அல்லது மணிபுரம் என்று கூறப் பெறும் நகரங்கள் நிலவியல் அடிப்படையிலும் கதைப்போக்கின் அடிப்படையிலும் பாண்டிய நாட்டில் அமைந்துள்ள தன்மை முதற்கண் விளக்கப்பெறுகின்றது.

10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் சின்னமனூர்ச் செப்பேட்டில் அருச்சுனன், பாண்டியன் மகள் உறவு

கதையாக விவரிக்கப்பட்டுள்ளது. இதுவன்றித் தொல்காப்பியப் பொருளதிகார 54ஆம் சூத்திரத்தை விவரிக்கும் நச்சினார்க்கினியர்

*பூண்டாழ் மார்பிற் பொருப்பிற் கோமான்*
*பாண்டியன் மடமகள் பணைமுலைச் சாந்தம்*
*வேறு தொடங்கிய விசயன் எஞ்சத்*
*தாரழல் ஆற்றா தைஇ யோகியிற்*
*பொதியிற் சாந்தம் எல்லாம் பொருதிரை*
*முத்தினு முழங்கற் செந்தீப்*
*பொத்துவது போலும் புலம்புமுந் துறுத்தே*

என்று அருச்சுனன் பாண்டியன் மகள் உறவு அமைந்த பாடல் ஒன்றை எடுத்துக்காட்டியுள்ளார். மேலும் அல்லியரசாணிமாலை என்னும் நாட்டுப்புறக் கதைப்பாடல் வழியும் வெளிநாட்டுப் பயணி மெகஸ்தனிஸ் எழுதிய குறிப்புகள் வழியும் இவ்வரலாறு உறுதி செய்யப்பட்டுள்ளது.

மணலூர்புரம் என்பது மதுரை உண்டாவதற்கு முன்பே பாண்டியரின் தலைநகராக இருந்தது என்றும் திருவிளையாடற் புராணத்தில் இவ்வூர் மணவூர், மணலூர், மணற்புரம் என்று குறிக்கப்பட்டுள்ளது என்றும்

*மணலூர்புரம் என்னும் தமிழ்*
*வியாசபாரதத்திற் சென்றது தேசிகம்*

எனப் பிரயோகவிவேக நூலார் கூறியுள்ளார் என்றும் இதனால் மணலூர்புரம் என்பது பாரத காலத்து வழக்கு என்றும் மு. இராகவையங்கார் விரிவுபட ஆராய்ந்துள்ளார்.

இவ்வாறாக விரிவாக ஆராய்ந்த இவர் இறுதியில் "பாரதம் முதலாய நூல்களாலும் பழைய வழக்குகளாலும் சித்திராங்கதை என்பாள் பாண்டியன் மகளே என்பதும் அவளையே அருச்சுனன் மணந்து பப்ருவாகனன் என்னும் மகனைப் பெற்றான் என்பதும் தெளியப்படுவதால் தென்னாட்டுப் பிரதிகளில் கண்ட செய்திகள் இடைச் செருகல் என்று சிலரால் கூறப்படுவது எவ்வாற்றானும் பொருந்தாமை கண்டு கொள்க" என்று முடிவு கூறியுள்ளார்.

## மு. இராகவையங்காரின் இதிகாச–புராண ஆய்வுகளும் இலக்கிய அரசியலும்

மு. இராகவையங்காரின் ஆராய்ச்சித் தொகுதி எனும் நூல் வெளிவந்த ஆண்டு 1938 ஆகும். ஆயின், இந் நூலிலிருந்து இந்த

ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பெற்ற கட்டுரைகள் எழுதப் பெற்ற காலம் வேறு.

> வான்மீகி முனிவரும் தென்னாடும் எனும் கட்டுரை 1910இல் வெளிவந்துள்ளது.
>
> கண்ணபிரானைப் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள் எனும் கட்டுரையும் 1910இல் வெளிவந்துள்ளது.
>
> அருச்சுனனும் பாண்டிய மரபும் எனும் கட்டுரையும் 1910இல் தான் வெளிவந்துள்ளது.
>
> இராமாயணமும் தமிழ் வழக்குகளும் எனும் கட்டுரை மட்டும் 1935இல் வெளிவந்துள்ளது.

இந்த நான்கு கட்டுரைகளுள் மூன்று கட்டுரைகள் 1909-1910இல் வெளிவந்த செந்தமிழ் இதழில் எழுதப்பெற்றுள்ளன. இக்கட்டுரைகள் எழுதப்பெறுவதற்கான நோக்கங்கள் யாவை? அவற்றுக்கான தேவை எது? என்ற வினாக்கள் சமூகவியல் அடிப்படையில் விரிவாக ஆராயத்தக்கவை. இந்த நான்கு கட்டுரைகளின் கருத்துப் பிழிவைப் பின்வருமாறு வரிசைப்படுத்த முடியும். அவைவருமாறு:

1. இதிகாசங்களுள் ஒன்றான இராமாயணத்தை இயற்றிய வான்மீகி முனிவர் தென்னாட்டைப் பற்றியும் குறிப்பாகத் தமிழ்நாட்டைப் பற்றியும் தமிழ் மன்னர்களைப் பற்றியும் தமிழ்மக்கள், தமிழ்ப்பண்பாடு பற்றியும் அறிந்திருந்தார். அறிந்ததோடு மட்டுமன்றி அச்செய்திகள் இராமாயணத்தில் இடம்பெறவும் செய்துள்ளார்.

2. மகாபாரத கதாநாயகர்களுள் ஒருவரான அருச்சுனன் வரலாறு பாண்டியர் வரலாற்றோடு இணைக்கப் பெற்றுள்ளது. இதன் வழி மகாபாரதக் கதையின் நிகழ்களம் ஒன்று, தமிழ் நாட்டிற்குரியதாகவும், தலைமை மாந்தர்கள் தமிழர்களாகவும் இருந்தமையை வெளிப்படுத்துவதாகவும் செய்தி அமைக்கப் பெற்றுள்ளது.

3. தமிழ்நாட்டிற்கே உரிய இதிகாசச் செய்திகள் பலவும் விரிவாக விளக்கப் பட்டுள்ளன. இச் செய்திகளில் சிலவற்றிற்கு வடமொழி மூலச் சான்றுகள் இருந்துள்ளமையும் ஆராயப்பட்டுள்ளது.

4. ஆக, இந்தியாவின் இருபெரும் இதிகாசங்களோடு தமிழ்நாடு, நிலவியல் அடிப்படையிலும் அரசியல், பண்பாட்டியல் அடிப்படையிலும் இலக்கியவியல் அடிப்படையிலும்

இணைக்கப் பெற்ற அல்லது இணைந்திருந்த நிலை வெளிக்கொணரப்பெற்றுள்ளது.

5. மேல் வரிசை எண்:4-இல் கூறப்பெற்ற கருத்து நிலையை மறுப்போரின் கூற்றுகள் தக்க ஆதாரங்கள் வழியே மறுக்கப் பெற்றுள்ளன.

மேலே கூறப்பெற்ற கட்டுரைகளின் பிழிவுகளில் இருந்து மு. இராகவையங்காரின் இதிகாச, புராண ஆய்வுகளின் நோக்கத்தை ஒருவாறு மீட்டுருவாக்கம்செய்ய முடிகின்றது. அந்நோக்கம் வருமாறு:

1. தமிழ் நாட்டிற்கும், தமிழர்க்கும், தமிழ்மொழி, பண்பாட்டிற்கும் வடமொழி இதிகாசங்களுக்கும் உள்ள உறவை வெளிப்படுத்துதலும் அதனை நியாயப் படுத்துதலும்

2. வடமொழி இதிகாச, புராணங்களில் உள்ள தமிழரின் பங்கினை உறுதி செய்தல்

3. வடமொழி, புராண இதிகாசங்களை இமயம் முதல் குமரிவரை யுள்ள மக்களின் இலக்கியங்களாக இந்திய இலக்கியங்களாக உருவாக்கம் செய்தல்.

மேலே கூறப்பெற்ற கட்டுரைகளின் நோக்கத்திற்குத் தக்க தேவைகள் அதாவது சமூக, அரசியல், பண்பாட்டியல் தேவைகள் எவை என்பதும் ஆராயத்தக்கவை.

இந்தத் தேவைகளை இக்கட்டுரைகள் எழுதப் பெற்ற 1910ஆம் ஆண்டின் முன்னும் பின்னுமான இந்தியக் காலச் சூழலிலும் அரசியல் பண்பாட்டுச் சூழலிலும்தாம் தேட வேண்டி உள்ளது. இது பற்றிச் சற்று விரிவாகவே ஆராயலாம்.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் இந்திய விடுதலை இயக்கம் ஒரு புதிய பரிமாணத்தைப் பெற்றது. உலகெங்கும் விடுதலை விழிப்புணர்வு ஏற்பட்டிருந்த அந்தக் காலக்கட்டத்தில் இந்துக்கள் மிகுதியாக வாழும் பகுதியையும் முசுலீம்கள் மிகுதியாக வாழும் பகுதியையும் பிரிக்க எண்ணிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் வங்கப் பிரிவினையைக் கொண்டு வந்தது. இதனால் இந்திய விடுதலை இயக்கம் தீவிரத் தேசிய வாத இயக்கமாகவும் மித தேசிய வாத இயக்கமாகவும் பிளவுண்டது. தீவிரத் தேசிய வாத இயக்கத்தார் ஆயுதப்புரட்சி மூலமும் வெடிகுண்டு, ரகசிய சங்கங்கள் மூலமும் விடுதலை வேண்டி நின்றனர். லாலா லஜபதிராய், திலகர், விபின்சந்திரபாலர் முதலியோர் தீவிரத் தேசிய வாத இயக்கத்தை முன்னின்று நடத்தினர். இவர்தம் கொள்கைக்கு எதிரான மிதவாத

இயக்கத்தில் கோகலே முதலியோர் பங்கேற்று இருந்தனர். தீவிரத் தேசிய வாத இயக்கத்தாராகத் தமிழ் நாட்டில் இருந்து செயல்பட்டவர்களுள் வ.உ. சிதம்பரம்பிள்ளை, சுப்பிரமணிய சிவா, மகாகவி சுப்பிரமணிய பாரதியார் முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள். இவர்களுள் சி. சுப்பிரமணிய பாரதியார், 18.10.1907ஆம் நாளிட்ட கடிதம் ஒன்றை மு. இராகவையங்கார் அவர்களுக்கு எழுதியுள்ளார்.

அக்கடிதம் போன்றே வ.உ.சிதம்பரம் பிள்ளை அவர்களும் ஒரு கவிதையை எழுதி உள்ளார்கள். 26.10.1907இல் எழுதப் பெற்றது அக்கவிதை. தீவிரத் தேசியவாதிகளில் ஒருவரும் சுதேசியத் தொழில் மேன்மை அடைய வேண்டிக் கப்பல் ஓட்டியவருமான வ.உ.சி., மு. இராகவையங்கார் எழுதிய "பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள்" எனும் கட்டுரையைப் பாராட்டிக் கவிதை வரைந்தனர். ஆகத் தமிழ்நாட்டில் தேசிய விடுதலை இயக்கத்தில் தீவிரவாதிகளாகச் செயற்பட்ட இருவருமே மு. இராகவையங்காரின் ஆராய்ச்சியைப் பாராட்டியுள்ளார்கள் என்பது தெரிகின்றது. மறுதலையாகத் தேசியவாத இயக்கத் தத்துவத்தை நியாயப் படுத்தும் வகையில் மு. இராகவையங்காரின் ஆய்வுகள் அமைந்துள்ளதை உணர வேண்டும். இதே காலக்கட்டத்தில் இந்தியத் தேசிய விடுதலைச் சிந்தனையாளர்கள் விடுதலையை முன்வைத்து இந்திய மக்களை ஓரணியில் திரளச் செய்யும் பணியில் ஈடுபட்டனர். குமரி முதல் இமயம் வரை ஒரே மக்கள் என்னும் ஒற்றைப் பண்பாட்டைக் கட்டமைக்கும் முயற்சியும் வேரூன்றத் தொடங்கியது. மொழியாலும் பண்பாட்டாலும் வேறுபட்டு நின்ற இந்திய மக்களை ஒன்றிணைக்கும் ஒரு பெரிய சக்தியாக விளங்கியவை இதிகாசங்கள்தாம்.

இந்தியத் தேசிய விடுதலை என்பது இந்து மதத்தோடு சேர்த்தே பார்க்கப் பெற்றது. பாரததேவி, சுதந்திர தேவி, தீபாவளி தேவி, தொழில் தேவி என்று தேசிய விடுதலை இயக்கமே கடவுள் இயக்கமாகக் கருத வைக்கப் பெற்றதைப் பாரதியின் "இந்தியா" இதழ்கள் வெளிப்படுத்தியுள்ளன. தீவிரத் தேசிய வாத இயக்கத்தின் தோற்றத்தையும் கண்ணன் அவதாரத்தையும் இணைத்து வரையப்பட்ட கருத்துப்படம் ஒன்று 10.09.1909 நாளைய "இந்தியா" இதழில் வெளியிடப்பட்டது. சிறைச் சாலையில் வாசுதேவரும் தேவகியும் காலில் விலங்குபூட்டி அடைத்து வைக்கப்பட்டுள்ளனர். அப்போது கிருஷ்ணன் பிறக்கிறார். யாருக்கும் கட்டுப்படாத அதிகார கம்சன் குறட்டைவிட்டுத் தூங்கிக் கொண்டிருக்கிறான். பகவான் பிறந்ததும் துட்டர்கள் மனம் பதைபதைத்து வீழ்ந்தனர்; பக்தர்கள் ஆடிப்பாடி மகிழ்ந்தனர்; ஆர்த்தனர். சிறைக் கதவுகள் உடைந்தன. இவ்வாறு இந்நிகழ்ச்சியை விவரிக்கும் பாரதியார் "நமது இந்திய

நவீன கிளர்ச்சி (தீவிரத் தேசிய வாதம்) இதன் அம்ச அவதாரம்" என்று எழுதியுள்ளார்.

இந்தியத் தேசிய விடுதலையை உள்ளுறையாகக் கொண்டு பாரதியாரால் பாடப்பெற்ற பாஞ்சாலி சபதத்தையும் இங்குக் கவனத்தில் கொள்ளுதல் வேண்டும்.

இந்தியத் தேசிய விடுதலை என்பது இந்து மதத்தோடு சேர்த்தே பார்க்கப் பெற்றது என்பது முன்பு கூறப்பெற்றது. விடுதலையை முன் வைத்த இயக்கங்கள் இத்தகு இதிகாச, புராணங்கள் வழியேதான் இந்திய மக்களை ஒன்றிணைத்தன. இருபதாம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் வெளிவந்த இதழ்களில் இதனைத் தெளிவாகக் காணலாம். குறிப்பாகப் பாரதியின் "இந்தியா" இதழ் இதனைப் பெரிதும் வெளிப்படுத்தியுள்ளதை அடிக் கோடிட்டுக் கூறுதல் வேண்டும்.

இத்தகு சூழலில்தான் மு.இராகவையங்கார் இதிகாச, புராண ஆய்வுகளை நிகழ்த்தி உள்ளார். இந்திய வரலாற்றை, தமிழர் வரலாறு உட்பட அனைத்தையும் மகாபாரதம், இராமாயணம் வழியே கட்டமைக்கும் ஒரு முயற்சியை உய்த்துணர வேண்டும். தமிழர்களின் வரலாற்றுத் தொடக்கம் என்பது கூட மகாபாரத, இராமாயணம், வழியேதாம் கட்டமைக்கப் பெற்றுள்ளதோ என்று எண்ணும் அளவிற்கு இத்தொடர்புகள் பற்றி விரிவான ஆய்வுகள் நிகழ்த்தப்பட்டன.

இத்தகு சமூக அரசியல் தேவைகள் தாம், இதிகாசங்களுக்கும் தமிழர்களுக்கும் உள்ள உறவை நியாயப்படுத்தி எழுத மு. இராகவையங்காரைத் தூண்டி இருக்க வேண்டும். இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தேசிய உணர்வைத் தூண்டும் கருவியாக இந்தியா முழுவதும் இதிகாசங்களை மக்களிடையே கொண்டு சென்றபோது தமிழ் நாட்டிலும் அத்தகு பெருமுயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளமையை மு.இராகவையங்கார் ஆய்வு மூலமாகவும் அறிய முடிகின்றது.

### நிறைவுரை

மு. இராகவையங்காரின் "ஆராய்ச்சித் தொகுதி" என்ற நூலில் இடம் பெற்றுள்ள இதிகாச, புராணக் கட்டுரைகள் நான்கு மட்டுமே ஆராயப் பெற்றுள்ளன. இந்நான்கு கட்டுரைகளில் அவர் கூறிய ஆய்வு முடிவுகள் சில தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இம்முடிவுகளுக்கான காரணங்கள் இலக்கிய அரசியல் சமூகவியல் அணுகுமுறையில்

ஆராயப்பட்டுள்ளன. நிறைவாக அவரது ஆய்வுநெறி பற்றிய ஒரு சில செய்திகளும் எடுத்துக் கூறப்பெற்றுள்ளன. இந்நூலினை விரிவாக ஆராய்ந்திடவும் ஏராளமான ஆய்வுக்களங்கள் அமைந்துள்ளதைச் சுட்டுதல் வேண்டும்.

## துணை நூல்கள்

*இராகவையங்கார், மு. 1938. ஆராய்ச்சித்தொகுதி. வெளியீடு : சேசாத்தி ஐயங்கார் & நாராயண ஐயங்கார்.*

*செல்வராசு, சிலம்பு. நா. 2003. பாரதி இந்தியா. சென்னை: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.*

### குறிப்பு

இக்கட்டுரையில் எடுத்தாளப்பெற்றுள்ள கடிதங்கள், வையாபுரிப்பிள்ளை அவர்களின் கூற்றுகள் ஆகியன ஆராய்ச்சித் தொகுதி நூலிலிருந்து பெறப்பட்டவை.

# பண்டைத் தமிழர் பற்றிய ஆய்வுகள்

க. ஜெயந்தி

மு. இராகவையங்கார் பல காலங்களில், பல பத்திரிகைகளில் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே "ஆராய்ச்சித் தொகுதி" என்ற நூல் வடிவாகும். இதனுள் பல்வேறு பொருள்கள் குறித்து மு. இராகவையங்கார் எழுதிய முப்பத்தைந்து கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் பண்டைத் தமிழ் மக்கள் பற்றிய செய்திகள் குறித்து அவர் ஆய்வு செய்துள்ள பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள், வீரத்தாய்மார், மார்கழி நோன்பாகிய தைந்நீராடல், பத்தினிதேவியைப் பற்றிய சில குறிப்புகள், விலங்குப்போர் விளையாட்டு, சேரவேந்தர் தாய வழக்கு ஆகிய ஆறு கட்டுரைகளில் அவர் பின்பற்றியுள்ள ஆய்வு நெறிமுறைகளை வெளிப்படுத்துவது இக்கட்டுரையின் நோக்கமாகும். ஆய்வுப்பொருள் தேர்வும் நோக்கமும், கருத்தை வெளிப்படுத்தியுள்ள முறைகள், முடிவுகளைக் கூறும் முறைகள் மற்றும் இவற்றின் வழி அவர் பின்பற்றியுள்ள ஆய்வியல் நெறிமுறைகள் என்ற நான்கு பிரிவுகளைக் கொண்டதாக இந்தக் கட்டுரை அமைந்துள்ளது.

## I ஆய்வுப்பொருள் தேர்வும் நோக்கமும்

1. கைத்தொழில்களாலும் வியாபாரத்தாலும் இந்தியாவின் பொருளாதார நிலையை ஏற்றமுறச் செய்ய இயலும் என்று மக்களிடையே தோன்றிய தேசிய உணர்வு "பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள்" என்ற தலைப்பின் கீழ் ஆசிரியர் சிந்திக்க அடித்தளம் இட்டுள்ளது.

பழங்கால மக்களிடையே இயல்பாகவே இந்த உணர்வு காணப்பட்டது என்பதைச் சுட்டி, அதன்வழிச் சமகால மக்களின் இழிநிலையையும் அதற்கான காரணங்களையும் எடுத்துக் கூறுவது ஆசிரியரின் நோக்கமாக உள்ளது.

2. நாட்டின் முன்னேற்றத்திற்குத் தடையாக உள்ள சுயநலம், கோழைத்தனம் போன்ற பண்புகள் ஆசிரியரை "வீரத்தாய்மார்" என்ற தலைப்பின் கீழ்ச் சிந்திக்கத் தூண்டியுள்ளது.

'தாய்மார் மட்டும் அறிவும் ஆற்றலுமுடையராய்த்
தம்மக்களை நல்வழிகளிற் கவலையோடு பழக்கி
வருவராயின் அம் மக்கட்கூட்டம் உலகத்தே
பெருமையும் புகழும் பெற்று விளங்கத் தடையென்னே?
(ப. 167-168)

என்பது ஆசிரியர் கூற்றாகும். பழங்கால வீரத்தாய்மார் மற்றும் அவர்தம் வீரமக்கள், அவரது வீரச்செயல்கள் ஆகியவற்றைச் சுட்டி அதன்வழி இக்காலநிலை குறித்துச் சுட்டுவது ஆசிரியரது நோக்கமாக உள்ளது.

3. மார்கழி நோன்பு பற்றி வழங்கிய பல்வேறு காரணங்கள் 'மார்கழி நோன்பாகிய தைந்நீராடல்' என்ற தலைப்பின் கீழ் ஆசிரியர் சிந்திக்கக் காரணமாக இருக்கிறது. இந்நோன்பு மேற்கொள்வது பற்றி பல்வேறு காரணங்கள் கூறப்பட்டாலும், மூலவரலாறு ஒன்று அதற்கு இருக்கும் என்பதை மனத்திற்கொண்டு அவ்வரலாற்றை வெளிக் கொணர்வதை நோக்கமாகக் கொண்டு ஆசிரியர் இக்கட்டுரையை இயற்றியுள்ளார்.

'சிஷ்டாசாரமே பற்றி இந்நோன்பு வழங்கியதாகக்
கூறப்பட்டிருப்பினும், அவ்வாசாரத்துக்கும்
மூலவரலாறொன்று இருந்ததாகல் வேண்டுமென்பது
நிச்சயம். அவ்வரலாறு யாது - என்பதனை
அறியமுயல்வதே இவ்வியாசத்தின் நோக்கமாகும் (ப. 186)

என்பது ஆசிரியர் கூற்றாகும்.

4. 'சேரன்-செங்குட்டுவன்' என்ற நூலில் பத்தினி தேவி பற்றிக் கூறியவை தவிர்த்து எஞ்சிய சில கருத்துகளைத் தொகுத்துத் தரவேண்டும் என்ற சிந்தனை ஆசிரியர் "பத்தினிதேவியைப் பற்றிய சில குறிப்புகள்" என்ற தலைப்பில் கட்டுரை எழுதக் காரணமாக இருந்தது. பழங்காலத்தில் பத்தினி வணக்கம் நாடெங்கும் இருந்தது என்பதைத் தக்க சான்றுகள் வழி காட்டுவதே ஆசிரியரின் நோக்கமாகும்.

5. மக்களின் சோர்வை நீக்கி இன்பத்தைத் தரவல்ல விளையாட்டுகளைப் பற்றி ஆசிரியர் கொண்ட சிந்தனை 'விலங்குப் போர் விளையாட்டு' என்ற தலைப்பில் அவர் கட்டுரை எழுதுவதற்குத் தூண்டுதலாக இருந்தது. பழந்தமிழரிடை காணப்பட்ட விலங்கு, பறவைப்போர் விளையாட்டுகள், அவற்றை மக்கள் விளையாடிய சூழ்நிலைகள் மற்றும் அவர்கள் விளையாடிய முறைகள் ஆகியவற்றை

வெளிக்கொணர்ந்து, அவ்விளையாட்டுகளின் சிறப்பை மக்களுக்கு எடுத்துக்கூறுவது ஆசிரியரது நோக்கமாக இருக்கிறது.

6. எஸ். சோமசுந்தரபாரதி தாம் எழுதிய "சேரர் தாயமுறை" என்ற கட்டுரையில் "மருமக்கட்டாயமே சேரர்க்குப் பழைமையாக உரியது'' என்று கூறியுள்ளார். ஆசிரியர் தமது ''சேரன் - செங்குட்டுவன்" சரிதத்தில் 'மருமக்கட்டாயக் கொள்கை பண்டைச் சேரர்க்கு ஏற்புடையதன்று', என்று ஆய்வின் வழிக் குறிப்பிட்டுள்ளார். அக்குறிப்பினைப் பாரதி மறுத்தெழுதினார். அதன் விளைவாகவே இக்கட்டுரையை ஆசிரியர் இயற்றியுள்ளார்.

> *''இவர்களது வாதமுறைகளையும் சோதித்து ஒரு முடிவுபெறவைப்பது இப்போது இன்றியமையாததாக உள்ளது. 'சேரர் மக்கட்டாயிகளா, மருமக்கட்டாயிகளா?' என்ற ஐயம் பாரதியவர்கள் கட்டுரையாற் பலர்க்கும் நிகழக்கூடியதாதலின், அவ்வையம் நீங்கப் பெற்றுத் தமிழ்ச் சரிதத்துறையொன்று தெளிவடைதற்கும் இத்தகைய ஆராய்ச்சி வேண்டப் படுவதேயாம். அதனால், சேரர் முன்னோர் தாயவழக்குப் பற்றிய இவ்வாராய்ச்சித் துறையுள் இறங்கி உண்மைச் செய்திகளாயுள்ள வற்றை வெளிக்கொணர விரும்பி இவ்வழக்கினுட் புகுகின்றேன்". (ப. 339)*

என்பது ஆசிரியர் கூற்றாகும்.

## II கருத்துகளை வெளிப்படுத்தியுள்ள முறைகள்

1. சமகால மக்களிடையே ஏற்பட்டுள்ள பொருளாதார நிலை குறித்த விழிப்புணர்வு குறித்துத் தமது மகிழ்ச்சியை வெளிப்படுத்தி விட்டு, முன்னாளில் மக்கள் எவ்விதம் பொருளாதார நிலையில் சிறந்து விளங்கினர் என்பதை நினைவுகூரத் தொடங்குகிறார். முதலில் இந்தியாவிற்கு வந்து சென்ற அந்நியர்களின் சரித்திரக் குறிப்புகளால் தெரியவரும் செய்திகளைத் தொகுத்துக் கூறுகிறார். பிளைநி, டாலமி, பெரிப்ளூஸ், மெகாஸ்தனிஸ் ஸ்ட்ராபோ முதலிய யவனாசிரியர் களின் கருத்துகளை மேற்கோளிட்டுக் காட்டியுள்ளார். அதன்வழிப் பழங்காலத்தில் வழங்கிய உயர்ந்த நிலையையும், சமகாலத்தில் காணப்படும் தாழ்ந்த நிலையையும் சுட்டுகிறார்.

> *"இற்றைக்கு 2300 ஆண்டுகட்கு முன் விளங்கிய மெகாஸ்தனிஸ் என்னும் யவனர், தாம் நேரிற் கண்டு களித்த இந்திய வளத்தையும் ஏனைப் பெருமைகளையுங் குறித்தெழுதி –*

> 'இவற்றால், இந்தியாவுக்குப் பஞ்ச மென்பது வந்ததேயில்லை யென்றும் உணவு முதலியவற்றுக்கு வேண்டும் பண்டங்களில் யாதொரு குறைபாடும் இருந்ததில்லையென்றும் சொல்லப் படுகின்றன" என்று எழுதிப் போந்தனர் என்றால், இக்கால நிலைக்கும் முற்கால நிலைக்கும் எத்தனை பெரிய வித்தியாசம் உள்ளது! (ப. 339)

என்பது ஆசிரியர் கூற்றாகும். அடுத்து 'கர்ம பூமி' எனப் பாரதம் அழைக்கப்படுவதற்கான காரணத்தை அறிய, அது குறித்த பலரது விளக்கங்களை முதலில் கூறிப் பிறகு "உயர்ந்த தொழில்களையே செய்தற்குரிய பூமி' என்பதே முன்னோர் அப்பெயரிடக் காரணம் என்பதை நிறுவுகிறார். தொழில்களில் தலையாயது உழவும் வாணிபமும் என்பதைச் சுட்டி,

> "உழவின் பெருமை வேண்டியவளவு தமிழ்நூல்களிற் காணலாமாதலால், எடுத்துக்கொண்ட பழைய கைத்தொழில் வியாபாரச் சிறப்புகளை மட்டும் இங்கே கூறுவேன்' (ப. 147)

என்று கைத்தொழில் பற்றிய விரிவாகக் கூறத் தொடங்குகிறார். அதிலும் குறிப்பாகத் துணி நெய்தற்றொழில் குறித்து விரித்துக் கூறியுள்ளார். "காருகவினை" என்ற சொல்லால் இத்தொழில் குறிக்கப்பட்டதற்குத் திவாகரம் மற்றும் முன்னூல்தொடர்கள் வழிச் சான்று காட்டுகிறார்.

> தத்தம் கிருகங்களில் இருந்துகொண்டே செய்து வந்த தொழிலாதலின் அப்பெயர் பெற்றது (ப. 148)

என்று பெயர்க்காரணம் கூறியுள்ளார். மேலும் இந்தத் தொழிலிற்குத் தேவையான நுண்ணிய நூலிழைகள் பெரும்பான்மை பெண்களால் - அதிலும் குறிப்பாகக் கைம்பெண்களால் நூற்கப்பட்டு வந்தன என்பதைப் புறநானூறு, நற்றிணை, இறையனார் களவியலுரை முதலிய நூல்களிலிருந்து சான்று காட்டி விளக்குகிறார். இந்த இடத்தில் கைம்பெண்கள் குறித்து,

> நம் தேசத்தில், கைம்பெண்களின்தொகை மிகுதிப்பட்டு வருதலால், அவர்கள் வருத்தமின்றிச் சீவிப்பதற்கு இராட்டினமாகிய 'சக்ரா' வேலை இன்றியமையாதது (ப. 149)

என்ற சமகாலத் தலைவர்கள் கூறியுள்ள கருத்தும் ஒத்துள்ள தன்மையைச் சுட்டிக்காட்டியுள்ளார். மதுரையில் நெய்யப்பட்ட நூலிழைகள், ஆடைகள், ரத்னக் கம்பளங்கள் சிறந்து விளங்கிய

தன்மையையும் அதன் பொருட்டு அதற்கிருந்த மதிப்பையும் கூறியுள்ளார். ஒருவகை எலியின் உரோமம் கொண்டு குளிருக்கான ஆடை தயாரிக்கப்பட்டது என்ற செய்தியைச் சீவகசிந்தாமணி, பெருங்கதையிலிருந்து சான்றுகாட்டிக் கூறியுள்ளார். அந்த எலியினம் செம்மை நிறமும் பூனையினும் பெரிய உருவமும் உடையது; மலையிடங்களில் வாழும் என்ற செய்தியைச் சீவக சிந்தாமணி யிலிருந்து சான்று காட்டிக் கூறியுள்ளார். அமெரிக்காவில் அது கஸ்தூரி எலி (Musk-Rat) என்று வழங்கும் என்ற துணைச் செய்தியையும் கூறியுள்ளார். சிலப்பதிகார அடியார்க்கு நல்லார் உரையைச் சான்றுகாட்டிப் பழங்காலத்தில் கோசிகம், பீதகம், பச்சிலை, அரத்தம், நுண்டுகில், சுண்ணம் முதலிய எண்ணற்ற ஆடை வகைகள் இருந்தன என்பதைச் சுட்டியுள்ளார். இத்தகைய ஆடைகளிலே சிறந்தவை சில சங்க இலக்கியங்களிற் புகழப்பட்டுள்ளதையும் பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, மணிமேகலை, பெரும்பாணாற்றுப்படை முதலிய நூல்களிலிருந்து சான்று காட்டிக் கூறியுள்ளார். பழங்காலத்தே சிறந்த பெண்கள் செய்து வந்த நூல்நூற்றல், நெசவு முதலிய தொழில்களை, அரசாங்கத்தார் தனியதிகாரிகளைக் கொண்டு மேற்பார்க்கும்படி செய்து வந்தனர். மற்றும் அவ்வதிகாரிகளுக்கும், நூற்கும் மகளிருக்கும் சில விதிமுறைகளும் வகுக்கப்பட்டிருந்தன என்ற செய்தியை அர்த்த சாஸ்திரத்தை மேற்கோள் காட்டிக் கூறியுள்ளார். மேலும் ஆடையாபரண செய்முறைக்கு நூல்களும் இருந்தன என்பதை யாப்பருங்கல விருத்தி, புறநானூறு, திவாகரம் முதலிய இலக்கியங்கள் சுட்டியுள்ளதைக் குறிப்பிட்டு, அந்த நூல்களனைத்தும் என்னவாயின என்று தமது கவலையையும் வெளிப்படுத்தியுள்ளார். மேலும் ஏற்றுமதி இறக்குமதியில் தமிழர் சிறந்து விளங்கியத் தன்மையைச் சிலப்பதிகாரம், மணிமேகலை, பட்டினப்பாலை ஆகியவற்றிலிருந்து சான்று காட்டி விளக்கியுள்ளார்.

இவ்விதம் முன்னோர் காட்டியுள்ள சிறந்த வழிகளில் செல்லாததால் இன்று ஆடைகளையும் பிறபொருட்களையும் மற்ற நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டிய இழிநிலை ஏற்பட்டுள்ளதை ஆசிரியர் இக்கட்டுரை வாயிலாகச் சுட்டிக் காட்டியுள்ளார்.

2. முதலில் தாய்மார்களின் பொதுவான சிறப்புகளைக் கூறிக் கட்டுரையைத் தொடங்குகிறார். சிறந்த தாய்மார்கள் வாழும் நாடுகளே உலகத்தார் முன் உயர்ந்து விளங்கும் என்பதை மெய்ப்பிக்க முதலில் ஜப்பான் தாய்மார் குறித்த செய்திகளைக் கூறியுள்ளார்.

அவன் சிறுவயதிற் கற்றுக்கொண்டவை, தன்னாட்டின் க்ஷேமத்தின் பொருட்டு ஆன்மபரித்தியாகஞ் செய்வதே பெருங்கீர்த்தி யென்பதும், மானங்கெடவரின் மரணம் உத்தமமென்பதுமே. இத்தகைய பயிற்சி சிறுபருவ முதலே நிகழ்ந்து வருமாயின், அந்த ஜனசமூகத்தை வெல்லவல்லவர் உலகில் யாவர்? ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாதன்றோ? இவ்வுண்மையை அறிந்து நடத்தி ஜப்பானாட்டின் சரித்திரத்தை உயர்வு பெற வைத்தவர், முக்கியமாக, அந்நாட்டுத் தாய்மார்களென்றே சொல்ல வேண்டும். அத்தாயர் தம்மக்களை ஒருங்கு கூட்டித் தைரியங்கூறிப் போர்க்கனுப்பி வந்ததும், யுத்த களத்தில் சிறிதுந்தளர்வின்றிப் போர்புரியவும், சமயம் நேரும்போது நாட்டின் பொருட்டு மகிழ்ச்சியுடன் உயிரைப் பரித்தியாகம் செய்யவும் கடிதமூலம் எழுதித் தம்மக்களை ஊக்கப்படுத்தி வந்ததும் நாம் படித்தும் கேட்டு முள்ளனவேயாம் (ப. 168).

என்று ஜப்பான் தாய்மாரின் சிறப்புப் பற்றிக் கூறிய பிறகு, நமது பழந்தமிழ் நூல்களின் வழி இத்தகைய வீரத்தாய்மார் நம் நாட்டிலும் மிகுதியாக இருந்தனர் என்பதைக் கூறத் தொடங்குகிறார். பழங்காலத்தில் வீரத்தாய்மார்கள் புதல்வர்களை எவ்விதம் சிறந்த வீரர்களாக உருவாக்கினார்கள் என்பதைச் சான்றுகள் காட்டி விளக்குகிறார்.

பழங்காலத்தில் இவ்வீரத்தாய்மார்களைப் புகழும் வழக்கம் இருந்தது என்பதை "மூதின் முல்லை" மூலம் சுட்டுகிறார். மேலும் வீரத்தாய்மார் பற்றிப் பெண்பாற்புலவர்கள் பாடிய பாடல்கள் வழி கருத்துகளைக் கூறத் தொடங்குகிறார். தாயொருத்தி தன் மகன் யுத்தகளத்தே சாகப்பெற்றால், அதுவே தர்மமும் தானமும் கர்மமுமாகும் (புறத்திரட்டு) என்று கருதியிருந்த தன்மையையும் தாயர் தம் மகனது வீரச்சாவில் மனமகிழ்வுற்றனரேயன்றித் துன்பமடைய வில்லை (புறம் - பூங்கணுத்திரை), தன் ஒரே மகனைப் போருக்கனுப்பிய தாய் (புறம் - ஒக்கூர்மாசாத்தியார்), போரில் புறங்கொடுத்தோடியவன் என்ற அவப்பெயரைத் தாங்கவொண்ணாத் தாய் (புறம் - காக்கை பாடினியார்) எனப் பல சான்றுகளைப் பழந்தமிழ் நூல்களிலிருந்து காட்டிப் பழங்காலத்தில் வாழ்ந்து வந்த வீரத்தாய்மார்கள் - அவர்தம் மனநிலை குறித்து ஆசிரியர் கூறியுள்ளார்.

இவ்வாறு தமிழ்நாட்டு வீரப்பெண்டிர் செயல் பழங்காலத்தே புகழ்ச்சிக்குரியதாக இருந்ததாலன்றோ, அவர்களைப் பற்றிய

> *பழைய இலக்கண நூல்களும் விதிகூறுமுகத்தாற் பெருமை கூறத் தலைப்பட்டன (ப. 176).*

என்று பழங்கால வீரத்தாய்மார் பெற்றிருந்த சிறப்பைக் கூறி, அடுத்து வந்த காலங்களில் வீரத்தாய்மார்களும் வீரர்களும் குறைந்த காரணத்தால், தமிழகம் மீது பல்வேறு வேற்று நாட்டரசர்கள் ஆதிக்கம் செலுத்தி வந்தனர் என்பதைக் கூறியுள்ளார்.

3. பழங்காலம் முதல் இந்திய மக்களிடையே வழங்கி வரும் மார்கழி நோன்பு பற்றிய செய்திகளைத் தமிழ் மற்றும் வடநூல்களின் வாயிலாக "மார்கழி நோன்பாகிய தைந்நீராடல்" என்ற கட்டுரையாக அமைத்துள்ளார். திருப்பாவை, திருவெம்பாவை ஆகிய நூல்கள் தரும் செய்திகளின் துணையுடன், மக்கள் நோன்பு மேற்கொள்ளும் முறையையும் நோன்பின் சிறப்பையும் சுட்டி, இந்த நோன்பு பற்றிக் கூறும் பிற இந்தியமொழி நூல்களின் கருத்துகளோடு ஒப்பிட்டு மார்கழி நோன்பின் மூல வரலாற்றை அறியும் முயற்சியை மேற்கொள்கிறார்.

அடுத்து, ஸ்ரீமத் பாகவதம் மற்றும் திருப்பாவைக்குப் பெரியவாச்சான்பிள்ளை எழுதியுள்ள உரை ஆகிய இரண்டையும் ஒப்பிடுகிறார். ஸ்ரீமத் பாகவதத்தில் மார்கழி நோன்பு காத்யாயனி தொடர்புடையது என்று கூறப்பட்டுள்ளது. திருப்பாவையில் இடம்பெற்றுள்ள "எம்பாவாய்" இதற்கு இணையானது என்று ஆசிரியர் கூறுகிறார். இதன் மூலம் திருப்பாவைக்கு மூலநூல் ஸ்ரீமத் பாகவதம் என்று கூறுகிறார். அடுத்து, திருவெம்பாவையில் உள்ள "சத்தியை வியந்தது" என்பதும் மேற்கூறிய "காத்யாயனீ", "எம்பாவாய்" என்பதற்கு இணையானது என்று கூறி அதன்வழி,

> *இத்திருவெம்பாவைக்கு அங்ஙனம் அமைந்த தலைக்குறிப்பு 'சத்தியை வியந்தது' என்பதாம். (சத்தி – உமாதேவி) இதனால் தேவியின் புகழ்ச்சியே திருவெம்பாவையின் கருத்தென்பது மிகத் தெளிவாகும். இக்கருத்தமைந்த தலைக்குறிப்பையும், மார்கழி நீராட்ட நோன்பிற் காத்யாயனி வணங்கப் படுதவாகக் கூறும் பாகவத உபாக்யானத்தையும், அவ்வுபாக்யானமே ஆண்டாள் திருப்பாவைக்கு மூலமா யிருந்தலையுஞ் சேர்த்து ஆராயுமிடத்து, திருவாதவூரரது திருவெம்பாவையும் தேவியின் விரதத்தை மகளிர் கொண்டாடிய முறையைக் குறிப்பதேயென்று கொள்ளத் தகும் என்க (ப. 191).*

என்ற முடிவிற்கு வருகிறார். அடுத்து, சங்க இலக்கியங்களின் வழி மார்கழி நோன்பு பற்றி அறியவரும் புதிய செய்திகளைச் சுட்டுகிறார். சங்க நூல்களில் இந்த மார்கழி நீராடல் "தைந்நீராடல்" என்ற பெயரால் வழங்கியுள்ளமையைக் கலித்தொகை, ஐங்குறுநூறு, நற்றிணை முதலியவற்றிலிருந்து சான்று காட்டிச் சுட்டியுள்ளார். மேலும் மார்கழி நீராடுவோர்ப் பற்றி பல்வேறு காலக்கட்டங்களில் வழங்கிய கருத்துகளைத் தொகுத்துத் தந்துள்ளார்.

> பிங்கலந்தைக் கூற்றால், ஐந்து முதல் ஒன்பது வயது வரையுள்ள சிறுகன்னியரே தைந்நீராடி நோற்றற்குரியர் என்பது பழைய விதியாதல் பெறப்படும். நல்லந்துவனாரது பரிபாட்டிலும், காமக்குறிப்பில்லாத கன்னியர் நடத்தும் விரதமாகவே கூறப்பட்டிருத்தல் கண்டு கொள்க. எவ்வாறாயினும் சங்கத்துக்குப் பிற்பட்ட காலத்தே கன்னியரெல்லாராலும் இந்நோன்பு கைக்கொள்ளப்பெற்று வழங்கியதென்பது திருப்பாவை திருவெம்பாவைகளினின்று தெரிகின்றது (ப. 197).

என்பது ஆசிரியர் கூற்றாகும். அடுத்து, நோன்பு பற்றிய செய்திகளைத் தொகுத்துத் தருகிறார். நோன்பு காலத்தில் கன்னியர் பின்பற்றிய நெறிகள் (சான்று: திருப்பாவை), நோன்பால் விளையும் பயன் - மழை பொழிந்து நாடு செழித்தல் (திருப்பாவை), ஒப்புயர்வற்ற தலைவரைப் பெறுவதற்காக (திருப்பாவை), மற்றும் வீடுபேறு பெறுவதற்காக (திருவெம்பாவை) எனச் சான்று காட்டி விளக்கியுள்ளார். இதன் மூலம்,

> இவ்வாறு இம்மைப்பயன்கருதிக் கன்னியரால் ஆதியில் நடத்தப்பெற்றுவந்த மார்கழி நோன்பானது, மறுமை கருதி அடியார்களால் ஈசுவரபரமாகப் பாடப்பெறும் பெருமையை அடைந்தது. ஆனால், இந்நோன்பின் பழஞ்செய்திகள் மறக்கப்பட்டும் கன்னிப்பெண்களால் இது கைக்கொண்டு நடத்தப்படாமலும் போயின. எனினும், அவ்வடியார்கள் அருளிய திருப்பாவை திருவெம்பாவைகளை முக்கியமாகக் கொண்டு அம்மாதத்து வரும் உதய காலங்களில் நீராடுவதும் அத்திவ்யப்பிரபந்தங்களை யோதுவதும், ஆராதனைகள் நடத்துவதுமாய் ஆண்பாலர் பெண்பாலர் எல்லாராலும் சமயாசாரமாகக் கொண்டு பின்னோராற் பெரிதும் இஃது அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது.

> *மார்கழி முழுதுமே நீராட்டத்துக்குரியதாயினும். திருவாதிரையே அதற்குச் சிறந்த நாளாக முன்னோ ரெல்லோராலும் ஒருங்கு கொள்ளப்பட்டதென்றே தோன்றுகிறது (பக். 199-200).*

என்ற முடிவிற்கு வருகிறார். மார்கழி நோன்பு கேரளத்திலும் "திருவாதிரை திருவிழா" என்ற பெயரால் கொண்டாடப்பட்டு வருவதைச் சுட்டி, கோபால பணிக்கரின் "மலையாளமும் அதில் வாழ்நரும்" என்ற நூலில் அதுகுறித்துக் காணப்படும் செய்திகளைத் தொகுத்துக் கூறியுள்ளார். இவர்களிடம் காணப்படும் முறைகள் தமிழ்நாட்டு மார்கழி நோன்புடன் மிகுதியும் ஒத்துள்ளது. கேரளத்தில், நீரில் கைகொண்டு தட்டி ஓசையெழுப்பி நீராடும் பழக்கம், நீராடி முடித்தபின் உயர்ந்த ஆடை அணிகலன்களை அணியும் பழக்கம் முதலியவை இங்கும் காணப்பட்டுள்ளதைத் திருவெம்பாவை, திருப்பாவைப் பாடல்களைச் சான்று காட்டி ஆசிரியர் சுட்டியுள்ளார். கேரளத்தில் இந்த நோன்பு மன்மதனைப் பற்றியாகக் கருதப்பட்டுப் பின்பற்றப்படுகிறது. இதை ஆசிரியர்,

> *"காமன்நோன்பு பங்குனிமாதத்தே பழங்காலமுதல் நடைபெறுவதேயன்றி மார்கழிக்குரியதன்றாம். ஸ்ரீஆண்டாளும், மார்கழி நோன்பைத் திருப்பாவையாற் பாடிக் காமனோன்பைத் 'தையொரு திங்களும்' என்ற தனிப்பதிகத்தான் கூறுவதோடு அந்நோன்பு பங்குனியோடு முடிவுறுவதென்பதைக் குறிப்பித் தருளுதலும் காணலாம் (ப. 203).*

என்று மறுத்துக் கூறியுள்ளார்.

4. பத்தினி தேவியைப் பற்றிய சில குறிப்புகள் என்ற பொதுவான தலைப்பின் கீழ் "கண்ணகியின் குறிப்புப் பெயர்", "கண்ணகி வரலாறு பற்றிய சங்கச் செய்யுள்", "கண்ணகியின் தமிழ்ப் புலமை", "பத்தினிதேவியைப் பற்றிய பிற்காலக் கதைகள்" என்ற நான்கு சிறு தலைப்புகளில் கட்டுரையை அமைத்துள்ளார்.

முதல் பகுதியில் "திருமாமணி" எனக் கண்ணகியைச் சுட்டி வரும் தொடர் பற்றி ஆய்வு செய்துள்ளார். "திருமகள் தங்கும் சீரிய மணி" என்று தாமரையின் பொகுட்டைச் சுட்டுவதாக இத்தொடர் அமைந்துள்ளது. வடமொழியில் பொகுட்டைச் சுட்டும் கர்ணக, கர்ணிக என்ற சொல் தமிழில் மருவி கண்ணகி என்ற பெயர் தோன்ற வழிவகுத்தது என்று கூறுகிறார்.

கோவலன் கண்ணகி பற்றிய செய்திகள் எட்டுத்தொகை நூல்களிலும், பிற சங்கச் செய்யுட்களிலும் எடுத்துக் கூறப்படவில்லை

என்ற கருத்தை மறுத்து நற்றிணையுள் மதுரை மருதனிளநாகனார் பாடிய 216ஆம் செய்யுளைச் சான்று காட்டி, அதில் இடம்பெற்றுள்ள "ஒரு முலை யறுத்த திருமாவுண்ணி" என்ற தொடர் கண்ணகி வரலாற்றைச் சுட்டுவது என்று நிறுவுகிறார்.

யாப்பருங்கல விருத்தியுள் ஆரிடப் போலிக்கு மேற்கோளாகக் காட்டிய பாடல்களில்,

'கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செங் குருதியி னோஓ கிடந்ததே – கெண்டிக்
கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்னாள்
அழுதகண் ணீர் துடைத்த கை"

என்ற பாடலும் ஒன்று. இதனைப் பத்தினிச் செய்யுள் என்பர் விருத்தியுடையார். இந்தச் செய்யுள் தன் இன்னுயிர்க் கணவன் வெட்டுண்டு வீழ்ந்த நிலை கண்டு புலம்பிப் பாடுவதாக அமைந்துள்ளது. எனவே இப்பாடல் கண்ணகியால் பாடப்பட்டதே என்கிறார் ஆசிரியர். "கெழுதகை யில்லேன் . . . பன்னாள் அழுத கண்ணீர் துடைத்த கை" என்பது கணவனைப் பிரிந்து, அதனாற் பெரிதும் வருந்தி நின்ற நிலையைச் சுட்டுவதாக உள்ளது. சிலம்பிலும் கண்ணகி,

"கண்பொழி புனல்சோரக் கடுவினை யுடையேன்முன்
புண்பொழி குருதியராய்ப் பொடியாடிக் கிடப்பதோ"

என்று புலம்புவது மேற்கூறிய பாடல் மற்றும், அது காட்டும் சூழ்நிலைகளோடு பெரிதும் ஒத்துள்ளமையைச் சுட்டி ஆசிரியர், கண்ணகி நல்லிசைப் புலமையும் வாய்ந்தவள் என்று கூறுகிறார்.

பத்தினி தேவியைப் பற்றிய வரலாறு கூறுவனவற்றுள் ஒன்றான "கோவலன் கதை" சிலப்பதிகாரத்துடன் பெரிதும் மாறுபட்டுள்ளது. அந்தக் கதை கண்ணகியைக் காளியாகக் கொண்டு, முடிவில் திருவொற்றியூரில் வட்டபுரியம்மன் என்ற பேர் பெற்றுத் திருவிழா, பலி முதலியவற்றால் வணங்கப்பட்டாள் என்று குறிப்பிடுகிறது. சிலம்பின் அரும்பத உரையாசிரியர் கண்ணகியைத் துர்க்கை என்று குறிப்பிட்டுள்ளதையும், கண்ணகி வரவைக் குறிப்பிடும்போது,

"வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்லள்"

"கானக முகந்த காளி தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்
செற்றனள் போலுஞ் செயிர்த்தனள் போலும்"

என்று இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளதையும் சுட்டி, பத்தினிதேவியாகிய கண்ணகி காளியாகவே பின்னோரால் அழைக்கப்பட்டமைக்கு இவை காரணமாக இருந்திருக்கலாம் என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் திருச்செங்குன்றூரிலும் திருவொற்றியூரிலும் கண்ணகி கோயில் கொண்டாள் என்று கூறப்படுவதெல்லாம், அக்காலத்தே பத்தினி வணக்கம் நாடெங்கும் பரவியிருந்த தன்மையைக் காட்டுகிறது என்று கூறுகிறார்.

5. விளையாட்டின் இன்றியமையாமையை முதலில் கூறிய பின் முன்னூல்களின் வழிப் பழங்கால மக்களிடையே வழங்கிய விளையாட்டுகளையும், விளையாட்டுகள் நிகழ்ந்த காலச் சூழ்நிலைகளையும் சுட்டிச் செல்கிறார். பழந்தமிழரிடையே விலங்குகள், பறவைகளைப் பயன்படுத்திப் போர் விளையாட்டுகள் விளையாடப்பட்டமையைப் புறப்பொருள் வெண்பாமாலை, திருக்குறள், பெருங்கதை, உத்தரராமாயணம், நைடதம் முதலிய நூல்களிலிருந்து சான்று காட்டிக் கூறியுள்ளார். அரசர் மட்டுமன்றிப் பார்ப்பனரும் போர் விளையாட்டுகளில் ஈடுபட்டனர் என்பதற்குச் சேக்கிழார் பாடலைச் சான்று காட்டி நிறுவுகிறார்.

> செண்டாடுந் தொழின்மகிழ்வுஞ்சிறு சோற்றுப் பெருஞ்சிறப்பும்
> வண்டாடு மலர்வாலி மருவியநீர் விளையாட்டும்
> தண்டாமும் மதகும்பத் தடமலைப்போர் சலமற்போர்
> கண்டாரா விருப்பெய்தக் காவலனார் காதல் செய்நாள் (185)

என்பது அந்தப் பாடல் ஆகும். தமிழரசர், போர் வீரர்கள், போரின்றி அமைதியாயிருந்த காலத்தில் இவ்விளையாட்டுகளில் ஈடுபட்டனர் என்பதற்கு முதற்குலோத்துங்கச் சோழன் அபயன் பட்டத்திற்கு வந்த பிறகு நாடு அமைதியாயிருந்த காலத்தில் இவ்விளையாட்டுகள் நிகழ்ந்ததாகச் செயங்கொண்டார் பாடிய பரணியைச் சான்று காட்டிக் கூறியுள்ளார்.

அவன் நடத்திய சேவற்போரில், அவன் தோல்வி அடையாமல் இருத்தலை விரும்பித் தெய்வத்தை மக்கள் வேண்டித் திருவிளக்கு எடுத்தனர் என்ற செய்தியைத் தஞ்சை இராஜராஜேசுவரத்திற் பொறிக்கப்பட்ட சாசனங்களின் வழி சான்று காட்டுகிறார்.

> "கேரள வீதிவிடங்கனான வில்லவ மூவேந்த
> வேளான் தன்னை உடையார் ஸ்ரீராஜராஜ தேவர்
> கோழிப்போரில் ஊத்தை அட்டாமல் என்று
> கடவ திருவிளக்குக்கு வைத்த காசில்"

என்பது அந்தச் சாசனச் செய்தியாகும். இதில் காணப்படும் கோழிப்போர் என்பதற்கு "உறையூரில் நடந்த போர்", என்று பொருள் கூறும் அறிஞர் கருத்தை இராஜராஜசோழன், தன் பழைய தலைநகரான உறையூரிலே பெரும் போர் நடத்தியதற்குச் சான்றுகள் இன்மையைச் சுட்டிக்காட்டி மறுத்துள்ளார்.

அடுத்து, கோழிப் போரின் சிறப்புக் கூறி, அதற்குக் கம்பராமாயணம், நான்மணிக்கடிகை முதலியவற்றிலிருந்து சான்று காட்டியுள்ளார். புறப்பொருள் வெண்பாமாலையின் உரைவழிக் கோழிகளின் வகைகளும் கோழிப் போர் பற்றி வழங்கிய பரிபாஷைகளும், கோழி நூலொன்று வழக்கிலிருந்தமையையும் சுட்டிக்காட்டியுள்ளார். குறும்பூழ், சிவல் போன்ற பறவைகளும் இத்தகைய விளையாட்டுகளில் பயன்படுத்தப்பட்டன என்பதைக் கலித்தொகை, புறநானூறு முதலிய நூல்களிலிருந்து சான்று காட்டிக் கூறியுள்ளார்.

இறுதியில் விளையாட்டுகளின் சிறப்பைக் கூறி நிறைவு செய்கிறார்.

6. முதலில் ஆய்வுப்பகுதியைத் தேர்வு செய்ததன் காரணத்தைக் கூறியுள்ளார். அடுத்துச் சேரர் தாயமுறையை அறிவிக்கும் முன்னோர் கூற்றுகளைப் பதிற்றுப்பத்திலிருந்துத் தொகுத்துக் கூறியுள்ளார். அடுத்து மக்கட்டாயமுறைக்குரிய காரணங்களைக் கூறி,

> "தமிழகம் ஆளும் உரிமையும் வழக்க வொழுக்கங்களில் ஒரு தன்மையுமுடைய முடிகெழு வேந்தர் மூவரும் அநாதியாகக் கொண்டொழுகியது அம்மக்கட்டாய முறையே என்பதும் மேற்காட்டிய பதிற்றுப்பத்துத் தொடர்கள் சேரர்க்கு அம்முறையுண்மையையே விளக்குவன என்பதும் என் கருத்து" (ப. 340)

என்று தமது கருத்தையும் அங்கே கூறியுள்ளார். இதையடுத்து மருமக்கட்டாயமுறைக்குக் கூறப்படும் எட்டுக் கருத்துகளை வரிசைப்படுத்தி அளித்துள்ளார். இதையடுத்து மருமக்கட்டாயப் பொருளாராய்ச்சி, மக்கட்டாயமுறைக்கு அமைந்த பொருள், பிறசான்றுகள், முடிவுரை என இயல் பிரித்து ஆய்வினை மேற்கொள்கிறார். மருமக்கட்டாயம் (சேரர் மரபு I), சேரவமிசாவளி மக்கட்டாயம் (சேரர் மரபு I) என இரண்டு அட்டவணைகளைத் தந்துள்ளார்.

மருமக்கட்டாயப் பொருளாராய்ச்சி என்ற இயலில், முதலில் கூறிய எட்டுக் காரணங்களை, ஒவ்வொன்றாக மறுத்துக் கருத்துப் பொருந்தாத் தன்மையைக் காட்டியுள்ளார். அடுத்து, மக்கட்டாய முறைக்குரிய பொருள் பற்றிக் கூறத் தொடங்குகிறார். இதனை, "தேவிச் சொல்லின் பொருள்", "சோழன் மாதேவி, வளவன் மாதேவி", "வேண்மாட்சொல்லின் பொருள்", "பதுமன் தேவி", "பொறையன் பெருந்தேவி" என்ற தலைப்புகளின் கீழ் விளக்கியுள்ளார். அடுத்து மக்கட்டாயமுறையை வலியுறுத்தும் பிறசான்றுகளைச் சுட்டுகிறார். இதனைச் செங்குட்டுவற்குச் சோழன் மைத்துன முறையினனாதல், சேரர் மனைவியரே உடன்முடிகவித்தற்குரிய தேவியராதல், சேரர் மனைவியர்அரசுக்குரிய புதல்வரையுடையராதல், சேரரின் வேறொரு கிளையினரும் மக்கட்டாயமும் இளஞ்சேரலிரும்பொறையின் தாய்ப்பாட்டன், தொல்காப்பியமும் தாயமுறையும், சேரர் தாயமுறையும் சாஸன வழக்கும் என்ற தலைப்புகளின் கீழ் விளக்கியுள்ளார். இறுதியில் தம் கருத்தை முடிவுரையாகக் கூறியுள்ளார்.

## முடிவுகளும் முடிவுகளைக் கூறும் முறைகளும்

1. கைத்தொழில் முதலிய துறைகளில் நிகரற்ற அறிவும் பயிற்சியும் பெற்றிருக்கும் அந்நியரிடம் மதிப்பும் பணிவும் காட்டி அவரையொட்டியும் நம் பெருமைகளை முற்படுத்த முயல வேண்டும். கைத்தொழிலின் பெருமையை அறியாத காரணத்தாலேயே நம் நாடு உணவு, உடை மற்றும் வீட்டின் அடிப்படைத் தேவைகளுக்கும் அந்நியச் செயற்கைப் பொருள்களை எதிர்பார்க்கும்படியான நிலை ஏற்பட்டுள்ளது. இவ்வாறு அந்நிய நாட்டுக் கைத்தொழில் வணிகர்களுக்கு நாம் அடிமைப்பட்டிருப்பதைத் தவிர்த்து, உலக நாகரிக மக்கள் முன்பு நம்மைக் காட்டிக்கொள்ள வேண்டுமாயின், எல்லா மேல்வகுப்பாரும் நல்லறிஞரும் நாகரிகம் படைத்த செல்வர்களும் நாட்டின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாத தொழில் துறைகளிற் புகவேண்டியது இன்றியமையாதது ஆகும். இந்த நாட்டிலுள்ள எல்லா மக்களும் தமக்குள்ள அற்ப வேற்றுமைகளை அறவே ஒழித்து, "நாட்டின் நன்மை" என்னும் பொது நோக்கத்துக்காகத் தம் சக்திகளையெல்லாம் ஒருங்குதிரட்டி ஒற்றுமையுடன் உழைத்து வந்தால், நினைத்த எண்ணம் யாவும் நிறைவேறும்.

நாட்டின் முன்னேற்றத்தில் ஏற்பட்டுள்ள தேக்க நிலை குறித்த ஆசிரியரது வருத்தம் இக்கட்டுரையின் முடிவுரையில் வெளிப்பட்டுள்ளது.

2. வீரத்தாய்மார்களும் வீரப்புதல்வர்களும் சங்க காலத்திற்குப் பிறகு குறைந்த காரணத்தால் வடவேந்தர்கள் பலர் தமிழகத்தில் நுழையத் துவங்கினர். அதனால் தமிழ் வேந்தராகிய சேர சோழ பாண்டியரும் பிறரும் தம் பழம்பெருமை குன்றினர். இதன் விளைவாகத் தமிழர்தம் வீரமும் குறைந்தது. இக்காலத்தவருக்கு வீரத்தாய்மார், வீரப்புதல்வர், அவர்தம் வீரச்செயல்கள் என்பதெல்லாம் வெறுங் கற்பனைக் கதைகளே.

அடிமைப்பட்டிருந்த காலக்கட்டத்தில் எழுதப்பட்டுள்ள இந்தக் கட்டுரை ஆசிரியரது தேசப்பற்று மிக்க உள்ளத்தின் வெளிப்பாடாகக் காணப்படுகிறது.

3. மார்கழி நீராட்ட நோன்பிற் காத்யாயனி வணங்கப் படுவதாகக் கூறும் பாகவத உபாக்யானம் ஆண்டாள் திருப்பாவைக்கு மூலமாகும். திருவெம்பாவையும் சக்தியின் விரதத்தையே புலப்படுத்துகின்றது. மலையாளத்துத் திருவாதிரைப் பெருவிழா வானது பழைய மார்கழி நோன்பினின்றே சிற்சில மாறுபாடுகளுடன் நடைபெறுகிறது. சங்கப் பாடல்களில் காணப்படும் "தைந்நீராடல்" என்ற நோன்பு மார்கழி நோன்பையே சுட்டுகிறது.

ஒரு சிக்கலை எடுத்துக்கொண்டு, அதற்குத் தீர்வு கண்ட பின், அதோடு தொடர்புடைய அடுத்த சிக்கலை எடுத்து விளக்க முற்படுகிறார். இவ்விதம் படிப்படியாக விளக்கிச் சிக்கல்களுக்குத் தீர்வு கண்டு, இறுதியில் அத்தீர்வுகளைச் சிறு முடிவுரையாகத் தந்துள்ளார்.

4. கர்ணகா அல்லது கர்ணிகா என வடமொழியில் பொகுட்டைக் குறித்து வரும் சொற்கள் தமிழில் மருவிக் கண்ணகி என்ற பெயராயிற்று. "திருத்தகு மாமணிக் கொழுந்து" - திருமகள் விரும்பத்தக்க இளம்பொகுட்டு என்ற பொருளில் கண்ணகி குறிப்பிடப்படுகிறாள். வடமொழிப் பெயர்கள் நேராகவும் மருவியும் மக்களியற் பெயராகத் தமிழகத்தில் முற்காலத்தில் பெருக வழங்கி வந்தமை சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காவியங்களால் அறியப்படுகிறது. எனவே கோவலன் தேவிக்கும் பேகன் தேவிக்கும் வழங்கிய கண்ணகிப் பெயரும் அத்தகையதொன்றே.

மதுரை மருதனிளநாகனார் பாடிய நற்றிணைப் பாடலுள் இடம் பெற்றுள்ள "ஒருமுலை யறுத்த திருமாவுண்ணி" என்ற தொடர் கண்ணகி வரலாற்றைக் கூறி நிற்கிறது.

கண்ணகி நல்லிசைப்புலமையும் வாய்ந்தவள். பத்தினி வணக்கம் நாடெங்கும் பரவி இருந்தது.

சிக்கல்களைத் தனித்தனித் தலைப்புகளின் கீழ்க் கொண்டு வந்து நான்கு சிறு கட்டுரைகளாக இயற்றி, அந்தந்தச் சிக்கலுக்குரிய தீர்வுகளை, அந்தந்தக் கட்டுரைகளின் இறுதியில் தந்துள்ளார்.

5. விளையாட்டுப் போர்கள், வேட்டை முதலியவற்றைப் போல, சோர்வுற்ற காலங்களில் வீரர் மனங்கட்குப் பெருக்கம் அளித்து அவரது மறப்பெருமையைச் சிறப்பித்தற்குப் பெருந்துணையா யிருந்தன.

தலைப்போடு தொடர்புடைய செய்திகளைத் தொகுத்துக் கூறி இறுதியில் சிறு முடிவுரை தந்துள்ளார்.

6. மக்கட்டாயமே சேரர் கொண்டொழுகிவந்த பழைய முறை. முடிகெழுவேந்தர் மூவரும் வழக்க வொழுக்கங்களாலும் உள்ளக்கிடக்கைகளாலும் பெரிதும் ஒற்றுமையும் தொடர்பும் கொண்டிருந்தவரே என்பது பண்டை நூல்களால் தெளிவாக அறியப்படுகின்றது. எனவே அவருள் சோழ, பாண்டியரை விலக்கிச் சேரராகிய ஒரு பிரிவினர்க்கு மட்டும் பிற்காலத்துண்டாகிய புதிய தாயமுறையைப் புகுத்துவது கற்பனை ஆகுமேயன்றிச் சரித்திர உண்மைக்குச் சிறிதும் உரியதன்று.

ஆய்வுக் கட்டுரையின் முழுமையான அமைப்புடன் இயல் பகுப்பு, அட்டவணை எனப் பல்வேறு கூறுகளுடன் அமைந்துள்ள இக்கட்டுரையில், எடுத்துக்கொண்டுள்ள சிக்கலுக்கு எதிரான கருத்துகளை முதலில் கூறி, அவற்றை நிரல்பட மறுத்து, தன் கருத்துகளைத் தக்க சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார். முடிவுரை எனத் தனிப்பகுதியமைத்துக் கருத்துகளை இறுதியில் தொகுத்துத் தந்துள்ளார்.

இக்கட்டுரைகளில் ஆசிரியர் முடிவுகளைக் கூறும் முறைகளில் மூன்று உத்திகளைக் கையாண்டுள்ளார். அவையாவன:

அ. வருத்தத்தை வெளிப்படுத்துதல் (பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள், வீரத்தாய்மார்).

ஆ. பல சிக்கல்களை விடுவிக்க முற்படும்போது, நிரல்படத் தீர்வுகளைக் கூறி, பிறகு கட்டுரையின் இறுதியில் அனைத்துத் தீர்வுகளையும் முடிவுரையாகத் தருதல் (மார்கழி நோன்பாகிய தைந்நீராடல்)

இ. கட்டுரையின் இறுதியில் முடிவு கூறுதல். (பத்தினி தேவியைப் பற்றிய சில குறிப்புகள், விலங்குப் போர் விளையாட்டு, சேரவேந்தர் தாயவழக்கு).

## ஆய்வியல் நெறிமுறைகள்

1. ஆய்வுக்குரிய பொருளைத் தேர்வு செய்ததன் காரணத்தை விளக்கமாக முன்னுரையிலேயே கூறுகிறார்.

2. தமிழ், வடமொழி மற்றும் மொழிபெயர்ப்பு நூல்களையும் சாசனங்களையும் சான்று காட்டுதற் பொருட்டுப் பயன்படுத்தி யுள்ளார். அட்டவணைகளைத் தேவையான இடங்களில் பயன்படுத்தி யுள்ளார்.

3. வாசிப்பவருடன் நேரடியாக உரையாடுவது போன்ற நடையைப் பயன்படுத்தியுள்ளார். வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார். கருத்து விளக்கத்திற்கெனப் பழமொழிகளைப் பயன்படுத்தி வாசிப்பவரின் ஆர்வத்தைத் தூண்டுகிறார்.

4. இவை தவிர உட்பகுப்பைத் தொகைப்படுத்தி முன்னே கூறிவிடுதல்; தொகைப்படுத்தியவற்றை ஒவ்வொன்றாக விரித்துக் கூறுதல்; பிறரது கொள்கையைக் கூறிப் பிறகு தன் கருத்துக்கு வருதல்; சொற்பொருள் விளங்க வேண்டிய இடத்தில் விரித்து விளக்குதல்; வழக்கிறந்தவற்றை நீக்குதல்; ஐயமுள்ள இடத்தில் இது அல்லது, இதுவே என மொழிதல்; பிறநூன் முடிவுகளுடன் உடன்பட வேண்டிய இடங்களில் உடன்படுதல்; தாம் புதிதாகக் குறித்து வழங்குவனவற்றை அடிக்கடி எடுத்தாளுதல்; ஆராய்ந்தறிய வைத்தல் முதலிய உத்திகளை இவர் பயன்படுத்தியுள்ளார்.

### முடிவுரை

இவரது ஆய்வுகள் மற்றும் அதன் முடிவுகள், பல ஆய்வாளர்கள் தோன்றுவதற்கும், பல ஆய்வுகள் தோன்றுவதற்கும் காரணமாயின. பிறர் கருத்துகளை மறுத்துக் கூறுமிடத்து, தக்க சான்றுகளுடன் இவர் கூறுவதால், மாற்றுக்கருத்து கூறியவரே அதை ஏற்கும் நிலை ஏற்பட்டுள்ளது.

> "மண்டல புருடர் காலத்தை ஆராய்ச்சி செய்து தாங்கள் எழுதியிருக்கும் பத்திரிகை வியக்கத்தக்கதே. நான் எழுதிய புத்தகத்தில் ஸ்ரீமான் குப்புசாமி சாஸ்திரிகளோடு ஒத்து கி.பி. 10ஆம் நூற்றாண்டினரென்று எழுதியிருக்கிறேன். தங்களுடைய சிறந்த ஆராய்ச்சிக்குப் பின்னர் என் கொள்கை புனராலோசனைக் குரியதே. (ப. xxxvii)

என்ற கே.எஸ். ஸ்ரீநிவாஸ பிள்ளையவர்கள் எழுதியுள்ள கடிதம் இதற்குச் சான்றாகும்.

# வினைத்திரிபு விளக்கமும் மொழியியல் கோட்பாடும்

*எச். சித்திரபுத்திரன்*

*நல்லறிஞர் மு. இராகவையங்காரின் தமிழ் இலக்கிய, இலக்கண மற்றும் சரித்திர ஆராய்ச்சிகளைத் தமிழ் உலகம் நன்கு அறியும். 'தம் அரும் பணியால் தமிழ் ஆராய்ச்சி பல்லாற்றானும் சிறந்து விளங்கிட வாழ்ந்தவர் இராகவையங்கார். இவர் தமிழ் ஆராய்ச்சிக்குத் தந்தை போன்றவர் என்றும் மார்க்கதரிசி என்றும் பலவாறு போற்றப்பட்டவர். இவர் ஏறத்தாழ 55 ஆண்டுகள் தமிழ்த்தொண்டு ஆற்றியுள்ளார். முதல் பன்னிரண்டு ஆண்டுகள் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலும், அடுத்த 26 ஆண்டுகள் சென்னைப் பல்கலைக்கழகத்திலும் பணியாற்றியுள்ளார். எஞ்சிய ஆண்டுகளைத் திருவிதாங்கூர் பல்கலைக்கழகத்திலும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் தமிழ்த்தொண்டிற்கெனச் செலவிட்டுள்ளார்.*

*மு. இராகவையங்கார் தம் வாழ்நாளின் பெரும் பகுதியைச் சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதிக்கென அர்ப்பணித்துள்ளார். ஐயங்காரின் அகராதிப்பணி மிகவும் பாராட்டுதலுக்குரியது. தமிழ்ப் பேரகராதிப் பணியில் ஈடுபட்டிருந்த காலத்தில் தமிழ் வினைச்சொற்களின் வடிவம் மற்றும் முக்கால ஏற்புச்செயல்பாடு குறித்த கருத்துகளைத் தொகுத்து 'வினைத்திரிபு விளக்கம்' எனும் பெயரில் ஓர் அழகிய இலக்கண நூலாகச் செய்யுள் வடிவில் யாத்தார்கள். இந்நூல் 1958-இல் மதுரைத் தமிழ்ச் சங்கப் பேராசிரியர்கள் உதவியுடன், ஐயங்கார் புதல்வரின் முயற்சியால் நூலாக வெளிவந்தது.*

*நூலின் அமைப்பு*

*வினைத்திரிபு விளக்கம் எனும் இவ்விலக்கண நூல் கற்பவர்களுக்குப் பயன்தரும் வகையில் 59 சிறு நூற்பாக்களால் ஆனது. 91 பக்கங்களைக் கொண்டது. இந்நூலில் முன்னுரை, நூன்முகம், வினைத்திரிபு விளக்கம். நூற்பாப்பகுதி, வினைப்பகுதிகள் பற்றிய குறிப்புகள், வினைப்பகுதிகளின் விவரக்குறிப்பு, வினைப்பகுதி அட்டவணை எனும் ஆறு பகுதிகள் இடம்பெற்றுள்ளன.*

நூற்பாக்களின் விரிவான விளக்கங்கள் நூன்முகம் எனும் பகுதியில் தரப்பட்டுள்ளன. நூற்பாக்களின் அடியில் மிகச் சிறிய அளவிலான விளக்கங்கள் மட்டும் இடம்பெற்றுள்ளன. இறை வணக்கத்துடன் தொடரும் இந்நூல் ஒரு புத்திலக்கணமாகக் (விருந்திலக்கணம்) குறிப்பிடப்பட்டுள்ளது. 'வினைத்திரிபுறாஉம் விருந்திலக்கணமே'. (வி.தி.ப.31)

## நூல் தோற்றத்தற்குரிய காரணங்கள்

1. தமிழ் வினையடிகள் முக்கால இடைநிலைகளை ஏற்றுக் காலத்தை வெளிப்படுத்தும் பொழுது பல மாறுதல்களை அடைகின்றன.

2. புதிதாகத் தமிழ் மொழியைக் கற்பவர்களுக்கு வினைச்சொல் மற்றும் அதன் முடிபுகள் கடினமானவையாகவும் சிக்கல் தருவனவாகவும் உள்ளன.

3. நன்னூலாரின் வினையடிகள் (நட..., வா, மடி...) முக்காலங்களை ஏற்கும் நிலையில் இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனும் முக்காலங்களில் ஒரு காலத்திலோ பல காலங்களிலோ மாறுபாடுடைய பகாப்பதமாக மாறுகின்றன.

4. வின்சுலோவின் தமிழ்-ஆங்கில அகராதியில் (1964) சுட்டப் பெற்றுள்ள திரிபுகளும் அவற்றிற்கான விளக்கங்களும் குறைபாடுடையனவாக உள்ளன. மேலும் அவை முழுமையானதாகவும் இல்லை.

5. மேனாட்டு அறிஞர் டாக்டர் கிரால் (Graul) அவர்களின் வினைச்சொல் வகைப்பாட்டின் அடிப்படையில் தமிழ் வினைச்சொற்களின் முக்காலச் செயல்பாட்டை மாற்றியமைப்பது தேவையான ஒன்றாகும்.

6. தமிழ் வினைத்திரிபுகள் பழங்காலம் முதல் தற்காலம் வரை பல நெறிமுறைகளுக்கு உட்பட்டு உள்ளன. பொதுவாகவும் சிறப்பாகவும் அமைந்துள்ள இந்நெறிமுறைகளையும் விளக்கங்களையும் வெளிக்காட்டுதல் தேவையான ஒன்றாக உள்ளது.

7. தமிழ்ப் பேரகராதியில் சுட்டப்பெற்றுள்ள வினை வாய்பாடுகளில் பல ஐயங்கள் எழுகின்றன என்ற பல காரணங்களின் தூண்டுதலால் வினைத்திரிபு எனும் இவ்வரிய சிறப்பு இலக்கண நூலை எழுதியுள்ளதாக மு. இராகவையங்கார் தமது நூலில் சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

## ஆய்வுத்தரவு

வினைத்திரிபு விளக்கத்திற்காகத் தமிழ்ப் பேரகராதியில் இடம்பெற்றுள்ள 300 வினைகள் முதன்முதலில் தொகுக்கப்பெற்று அவற்றின் முக்காலச் செயல்பாடுகள் ஆராயப்பட்டன. பின்னர்ச் சங்ககாலம் முதல் தற்காலம் (1958) வரை வழக்கிலுள்ள உலக வழக்கு மற்றும் இலக்கிய வழக்கு வினைச்சொற்களும் ஆய்விற்கு உட்படுத்தப் பட்டு விதிமுறைகள் உருவாக்கப்பெற்றன. அவற்றின் அடிப்படையில் தமிழ் வினைச்சொற்கள் வகைப்பாடு ஒன்று உருவாக்கப்பெற்றது.

## வினை வகைப்பாடு

மேல்நாட்டு அறிஞர் கிரால் அவர்களின் வகைப்பாட்டில் வல்வினை, மெல்வினை, இடைவினை என வினைச்சொற்கள் 12 வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவ்வகைப்பாடு தமிழ் வினைச் சொற்களின் ஈற்றெழுத்துகளின் தன்மையினாலும் முக்கால இடைநிலைகளை ஏற்கும் வினைச்சொற்களின் செயல்பாட்டினாலும் அமைந்ததாகும். தமிழ் வினைச்சொற்கள் சுருங்கிய மூல வடிவுகளில் அதாவது ஒருசீர்ப் பகாப்பதங்களாகத் தோன்றியிருக்க வேண்டும் என்பது இராகவையங்காரின் கருத்தாகும். இது மொழியியல் சார்ந்த ஆய்வாக உள்ளது என்பது இவண் குறிப்பிடத்தக்கது.

பின்வருவன தமிழில் வழங்கப்பெறும், குறிப்பாகத் தமிழ்ப் பேரகராதியில் இடம்பெற்றுள்ள வினையடிகளின் வாய்பாடாகும்.

| வாய்பாடு | வினையடி | இறந்தகால இடைநிலைகள் |
|---|---|---|
| 1. | செய் | - த் - |
| 2. | ஆள் | - த் - |
| 3. | கொல் | - த் - |
| 4. | அறி | -(ந்)த்- |
| 5. | அஞ்சு | இன் |
| 6. | நகு | இரட்டிப்பு |
| 7. | உண் | - த் - |
| 8. | தின் | - த் - |
| 9. | கல் | - த் - |
| 10. | கேள் | - த் - |
| 11. | நட | -(ந்)த்- |
| 12. | பார் | -(த்த்-) |

மேற்காணும் வாய்பாட்டினுள் அடங்காது வருவன குறைவினை எனும் தலைப்பில் விளக்கப்படுகின்றன. வினைத்திரிபு விளக்கத்தில் 'ஒழிபு' எனும் பகுதியில் இத்தகைய விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன (ப28).

## கால இடைநிலைகளும் வினைகளின் சேர்க்கைத் தன்மையும்

இராகவையங்கார் தமிழ் வினைச்சொற்களை விளக்கி வகைப்படுத்துவதற்கு முன்னால் முக்கால இடைநிலைகள் குறித்த சில அடிப்படைச் செய்திகளைச் சில நூற்பாக்களில் குறிப்பிட்டுள்ளார். இந்நூற்பாக்கள் வினைச்சொற்களின் அடிப்படைச் செயல்பாடு, சொல் வகைப்பாடு, கால இடைநிலைகளின் வருகை, வரையறை, சந்தி மாற்றங்கள் என்பனவற்றைச் சுட்டுவனவாக உள்ளன (வி.தி.வி.1-9).

## சொல் வகைப்பாடு

மரபிலக்கணங்களை அடியொற்றி வினைத்திரிபு விளக்கத்திலும் தமிழ்ச் சொற்கள் பெயர், வினை, இடை, உரி என நான்காக வகைப்படுத்தப்பட்டுள்ளன. பின்வரும் நூற்பாவில் இத்தகைய செய்திகளைக் காணலாம்:

> **தமிழ்மொழி யதனுட் பெயர்வினை யிடையுரி**
> **எனச்சொல் நான்காம் இவற்றுளிடையுரி**
> **ஏனை யிரண்டினோடிணைந்து வருவனவே (வி.தி.1)**

பெயர், வினைச்சொற்கள் ஒழிந்த இடை, உரி என்பன தனித்தியங்காதன. அவை பெயர் வினைச் சொற்களைச் சார்ந்து வருவன எனும் இலக்கணச் செய்தியை இராகவையங்கார் பொதுநிலையில் எடுத்தியம்பி உள்ளார்.

## வினைச்சொற்களின் வரையறை

வினைச்சொற்கள் தெரிநிலை, குறிப்பு என இரண்டு வகைப்படும் என்றும் அவற்றுள் தெரிநிலை என்பது செய்பவன், கருவி,நிலம், செயல், செய்பவன், காலம் எனும் ஆறினையும் சுட்டும் என்றும் வினைத்திரிபு விளக்கத்தில் குறிப்பிடப் பெற்றுள்ளது (வி.தி.வி.3). வினைச்சொற்களின் செயல்பாட்டிற்குக் காலம் மிகவும் இன்றியமையாததாகலின், காலம், வினை வரையறைக்குரிய ஓர் இன்றியமையாத அடிப்படைக் கூறாக மரபிலக்கணங்களால் கருதப்பட்டுள்ளது. பின்வரும் நூற்பாக்களில் இத்தகைய விளக்கங்களைக் காணலாம்.

வினைதான் தெரிநிலை குறிப்பென இரண்டாம் (வி.தி-2)

வெளிப்படக் காலந் தெரிப்பது தெரிநிலை (வி.தி.-3)

## வினைச்சொல்லின் அமைப்பு

மரபிலக்கணங்களில் பலவற்றுள் சுட்டப்பெற்றுள்ள வினைச் சொற்களின் உறுப்பிலக்கணம் வினைத்திரிபு விளக்கத்திலும் இடம்பெற்றுள்ளது.

பகுதியொடு சிறக்க இடைநிலை பயின்று
சாரியை விகாரஞ் சந்தி விகுதிகள்
கொண்டு காலக்குறிக்கு மற்றதுவே (வி.தி.வி.4)

பகுதி, இடைநிலை, சாரியை, விகாரம், சந்தி, விகுதி என்பன ஆறும் வினைச் சொற்களுக்குப் பகுபத உறுப்புகளாகும். மேற்காணும் ஆறு உறுப்புகள் அன்றி அவற்றுள் சில குறைந்தும் வருவதுண்டு என்ற செய்தி வினைத்திரிபு விளக்கத்தில் இடம்பெற்றுள்ளது என்பது சுட்டத்தக்கது.

## காலமும் கால இடைநிலைகளும்

முக்காலங்களுக்குரிய இடைநிலைகளாகப் பின்வருவன சுட்டப்பெற்றுள்ளன.

கின்று கிறு ஆநின்று நிகழ்வும்
தடற இன் நான்கு இறப்பும் பவ்வொடு
வவ்வுமும்மும் எதிர்வும் வழக்கிடைக்
கால இடைச் சொல்லாகக் கழறுப (வி.தி.-6)

வினைத்திரிபு விளக்கத்தில் இடம்பெற்றுள்ள முக்கால இடை நிலைகளைப் பின்வருமாறு பட்டியலிட்டுக் காட்டலாம்.

| இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|
| -த- | -கின்று- | -ப- |
| -ட- | -கிறு- | -வ- |
| -ற- | -ஆநின்று- | -உம்- |
| -இன்- | | |

வினைத்திரிபு விளக்கத்தில் இறந்த காலத்திற்கென நான்கு இடைநிலைகளும் நிகழ்காலம் மற்றும் எதிர்காலத்திற்கெனத் தலா

மூன்று இடைநிலைகளும் சுட்டப்பெற்றுள்ளன. இறந்த காலத்தில் இடம்பெற்றிருக்கும் ட,ற என்பன 'த்' என்பதன் புணர்ச்சி மாற்று வடிவங்களாகும். இவை வினைத்திரிபு விளக்கத்தில் தனி இடைநிலைகளாகச் சுட்டப்பெற்றிருப்பினும் அவற்றின் தோற்றம் பற்றிய சில மொழியியல் செய்திகள் இந்நூலில் காணப்படுகின்றன (காண்க:பக்11-25).

மொழியியலார் இடைநிலைகளைத் தனிமெய்களாகக் குறிப்பிடுவர். சான்றாக, 'த' என்பதை 'த்' எனவும் கின்று, கிறு, ஆநின்று என்பனவற்றை முறையே - கின்ற்-, -கிற்-, -ஆநின்ற்- எனவும், 'ப', 'வ' என்பனவற்றை 'ப்', 'வ்' எனவும் சுட்டிச் செல்வர். 'கிறு' எனும் இடைநிலை பெருவழக்குப் பெற்றது எனவும் 'ஆநின்று' செய்யுள் வழக்கிற்குரியது எனவும் வினைத்திரிபு விளக்கத்தில் சுட்டப் பெற்றுள்ளது. எதிர்கால -உம் ஓர் இரட்டை இடைநிலை ஆகும். அது தமிழில் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் சுட்டும் என்கிற செய்தி இராகவையங்காரின் கருத்தாக வெளிப்படுகின்றது. மொழியியல் ஆய்வில் உம் எனும் இவ்விகுதி இரண்டு காலங்களைச் சுட்டும் இரட்டை இடைநிலையாகக் (aerostic future) கொள்ளப் படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

## இறந்தகால இடைநிலைகள்

*த் >/ட், ற்/*

தொல்காப்பிய உரையாசிரியர்கள் க், ட், த், ற் எனும் நான்கும் காலம் சுட்டுவன என்றும் அவை முறையே

| | | |
|---|---|---|
| நக்கனன் | (<நகு+க்+அன்+அன்) | /க்/ |
| உண்டனன் | (<உண்+த்+அன்+அன்) | /ட்/ |
| தின்றனன் | (தின்+த்+அன்+அன்) | /ற்/ |
| உரைத்தனன் | (உரை+த்+அன்+அன்) | /த்/ |

எனும் பகுபத உறுப்புகளைக் கொண்டு செயல்படும் என்றும் சுட்டிக் காட்டியுள்ளனர். இராகவையங்கார் ட், ற் எனும் இடைநிலைகள் த் எனும் இடை நிலையின் புணர்ச்சி வடிவங்கள் எனும் நிலையில் மொழியியலாரின் கருத்தை ஏற்றுச் செல்கின்றார்.

## –இன் >இ

-இன்- எனும் இறந்தகால இடைநிலையிலுள்ள /ன்/ விடுபெற்று -இ- என்பது இறந்தகால இடைநிலையாகச் செயல்படுகின்றது என்பது இராகவையங்காரின் கருத்தாகும் (ப.19).

-இன் > -இ

-இ- எனும் இடைநிலை வினை எச்சங்களிலும் வினைமுற்றுகளிலும் வினையால் அணையும் பெயர்களிலும் வழங்கப் பெறும். (எ-டு)

அஞ்சினது ன் Ø > அஞ்சியது
அஞ்சின ன் > Ø அஞ்சிய
அஞ்சினவன் ன் > Ø அஞ்சியவன்

## நன்னூலாரின் வினை அடிகளும் காலம் காட்டும் தன்மையும்

நன்னூலில் சுட்டப்பெற்றுள்ள வினையடிகளும் அவை காலம் ஏற்றுத் திரிபுகளாக வரும் தன்மையும் வினைத்திரிபு விளக்கத்தில் விரிவாகச் சுட்டிக்காட்டப்பெற்றுள்ளன.

| எண் | பகுதி | இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|---|---|
| 1. | நட | நடந்தான் | நடக்கிறான் | நடப்பான் |
| 2. | வா | வந்தான் | வருகிறான் | வருவான் |
| 3. | அடி | மடிந்தான் | மடிகிறான் | மடிவான் |
| 4. | சீ | சீத்தான் | சீக்கிறான் | சீப்பான் |
| 5. | விடு | விட்டான் | விடுகிறான் | விடுவான் |
| 6. | கூவு | கூவினான் | கூவுகிறான் | கூவுவான் |
| 7. | வே | வெந்தான் | வேகுகிறான் | வேவுவான் |
| 8. | வை | வைத்தான் | வைக்கிறான் | வைப்பான் |
| | வை | வைதான் | வைகிறான் | வைவான் |

நன்னூலில் சுட்டப்பெற்றுள்ள வினைகள் இருதிணை, ஐம்பால், மூவிடங்களுக்கும் உரிய விகுதிகளுடனும் சந்தி, சாரியை, விகாரங்களுடனும் இணையும்பொழுது மேற்காணும் வகையில் பல்வேறு விகற்பங்களைப் பெறுகின்றன. இவ்வகையில் பிற வினை அடிகளும் பல்வேறு வகையான திரிபுகளை ஏற்றுச் செயல்படுகின்றன.

## சொல்லீற்று எழுத்துகள்

தமிழில் சொற்களின் இறுதியில் இடம்பெறும் எழுத்துகள் பற்றிய வருகை முறை (distribution) வினைத்திரிபு விளக்கத்தில் சுட்டப்பெற்றுள்ளது.

*பன்னீருயிரும் பதினொரு மெய்யும்*
*மொழியீற்று வரூஉம் எழுத்தென மொழிப (வி.தி.–11)*

உயிர் பன்னிரெண்டும் மெய்கள் பதினொன்றும் ஆக 23 எழுத்துகள் சொல்லின் ஈற்றெழுத்துகள் ஆகும்.

சொல் இறுதி உயிர் எழுத்துகள்

அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ - 12 உயிர்கள்

சொல் இறுதி மெய்யெழுத்துகள்

ஞ் ண் ந் ம் ன் ய் ர் ல் வ் ழ் ள் - 11 மெய்யெழுத்துகள்

ஈற்றெழுத்தின் சிறப்பு விதியாக இடம்பெற்றுள்ள ஒரு நூற்பாவில் மேற்கூறப்பட்ட இருபத்துமூன்று எழுத்துகளுள் எ,ஞ,ந,ம,வ எனும் ஐந்து எழுத்துகள் தவிர எஞ்சியவை பதினெட்டும் பன்னிரு வாய்பாடுகளில் பயின்று வரத்தக்கன. பின்வரும் நூற்பாவில் இக்கருத்தினைக் காணலாம்.

*ஈற்றெழுத்தாய விவ்விருபான் மூன்றனுள்*
*ஈண்டு செய்கைக்கு நேரலாதன*
*எகரமும் ஞ,ந,மவும் என ஐந்தாமே (வி.தி.–12)*

சொல் இறுதியில் இடம்பெறாத ஞ,ந,ம,வ என்பன உகரச் சாரியையைப் (உரிஞு, பொருநு, திருமு, தெவ்வு) பெற்ற பின்னரே இடைநிலைகளை ஏற்று வரும்.

*ஏலா மெய்கள் இயங்குற வேண்டின்*
*உகரச் சாரியை யீற்றினுடையவாய்*
*இயல்வதன்றியமை யாதாகும் (வி.தி. –13)*

## வினைத்திரிபுகளின் இலக்கணம்

தமிழ் வினைத்திரிபுகளின் இலக்கணத்தைச் சுட்டும் வகையில் வினைத்திரிபு விளக்கத்தில் பின்வரும் நூற்பா இடம்பெற்றுள்ளது.

*முக்காலத்தினும் ஒத்தியல்வின்றி*
*வினையுரு காலமொன்றினும் பலவினும்*
*வேறுபட வருவது வினைத்திரிபாகும் (வி.தி.8)*

வினையடிகளுடன் ஒருகால இடைநிலையோ பலகால இடைநிலைகளோ இணையும்பொழுது வினையடியில் ஏற்படும்

மாற்றம் அல்லது வேறுபாடு வினைத் திரிபு விளக்கமாகும். "வினையுரு... வேறுபட வருவது வினைத்திரிபு" எனும் நூற்பா அடி வினைத்திரிபின் இலக்கணத்தை வெளிப்படுத்துகின்றது.

மொழியியலில் இத்தகைய வடிவங்கள் மாற்று வடிவங்கள் (alternates) எனச் சுட்டப்பெறுகின்றன. மாற்று வடிவங்கள் வினை மற்றும் பெயர்ச்சொற்களின் இலக்கணச் செயல்பாட்டில் (inflection/ conjugation) ஏற்பட்டவையாகும். இத்தகைய வடிவங்களே திரிபுகள் என இராகவையங்காரால் கொள்ளப் பெறுகின்றன.

## வினைத்திரிபுகள் தோன்றும் இடம்

வினைத்திரிபுகள் தோன்றும் இடங்களை இராகவையங்கார் பின்வருமாறு வரையறை செய்கின்றார்.

*இடைநிலை முதனிலை இவற்றினிடையிற்*
*சந்தி சாரியை வந்து பயில்வுழி*
*வினையடி கொள்ளும் விகற்பம் பலவாம் (வி.தி-7)*

வினைத்திரிபுகள் தோன்றுவதற்கு இடைநிலை, சந்தி, சாரியை என்பன காரணமாய் அமைந்துள்ளன என்பதை மேற்காணும் நூற்பா சுட்டுகின்றது. இடைநிலைகளுக்கும் விகுதிகளுக்கும் இடையேயும் வேறுபாடுகள் நிகழ்வதுண்டு (வி.தி.-34). அதன் விளைவாய்த் திரிபுகள் தோன்றுவதுண்டு.

## வினைத்திரிபுகளில் பன்னிரு வகைகள்

தமிழ் வினைத்திரிபுகளைப் பன்னிரண்டு வகைகளாக இராகவையங்கார் பகுத்துக் காட்டியுள்ளார். பின்வரும் நூற்பாக்களில் இத்தகைய செய்திகளைக் காண இயலும்.

*பன்னிரு வகையாப் பகுப்புறும் அதுவே (வி.தி-9)*
*அவைதாம்*
*செய்யாள் கொல் அறி அஞ்சு நகு உண்தின்*
*கேள் கல் பார் நட*

நூற்பாவில் இடம்பெற்றுள்ள பன்னிரு வாய்பாடுகள் பின்வருவன:

| வாய்பாட்டு எண் | வினை வாய்பாடு | ஈற்றெழுத்து |
|---|---|---|
| 1. | செய் | ய்,உ |
| 2. | ஆள் | ள் |

| | | |
|---|---|---|
| 3. | கொல் | ல் |
| 4. | அறி | இ |
| 5. | அஞ்சு | உ |
| 6. | நகு | உ |
| 7. | உண் | ண் |
| 8. | தின் | ன் |
| 9. | கேள் | ள் |
| 10. | கல் | ல் |
| 11. | பார் | ர் |
| 12. | நட | அ |

தமிழ் வினைச்சொற்கள், அவை ஏற்கும் கால இடைநிலைகளுக்கு ஏற்றவாறு இவ்வாய்பாடுகள் அமைந்துள்ளனவாக இராகவையங்கார் குறிப்பிடுவார். முன்னர்க் குறிப்பிட்ட சொல் ஈற்று எழுத்துகளில் எ,ஞ,ந,ம,வ, போக எஞ்சிய 18 எழுத்துகளைக் கொண்ட வினைச்சொற்கள் இவ்வாய்பாடுகளில் அடங்கத்தக்கன.

## வாய்பாடுகளின் ஈற்றெழுத்து வருகை முறையும் கால இடைநிலைகளின் இயைவும்

பன்னிரு வாய்பாடுகளில் இடம்பெறும் தமிழ் வினைச்சொற்களின் ஈற்றெழுத்துகளை வரையறை செய்து கால இடைநிலைகளின் செயல்பாட்டையும் சந்திமாற்றங்களையும் வெளிக்காட்டுவதற்கு இராகவையங்கார் பல நூற்பாக்களை யாத்தளித்துள்ளார். அவற்றைச் சுருக்கமாக இவண் காண்போம்:

### வினை வாய்பாடு – 1 (செய் வாய்பாடு)

செய் வாய்பாட்டில் உ,ஐ,ய் எனும் ஈற்றெழுத்து வினைகள் இடம்பெறும்.

> செய் வாய்பாடு உ ஐ யக்களை
> ஈற்றெழுத்தாக் கொண்டிணை வினையாகும் (வி.தி.14)

உழு, தொழு, அழு, பொரு, வை, எய், கொய், செய், பெய் எனும் 9 வினைகள் இவ்வாய்பாட்டிற்குரிய வினைகளாக வினைப்பகுதி அட்டவணையில் இடம் பெற்றுள்ளன.

| | | |
|---|---|---|
| உ (-u) | ஐ (-ai) | ய் (-y) |
| உழு | வை | செய் |
| தொழு | | கொய் |
| அழு | | பெய் |
| பொரு | | |

'எய்' எனும் வினையடி பட்டியலில் இடம்பெறவில்லை.

## கால இடைநிலைகளின் செயல்பாடு

மேற்காணும் வினைகள் இறந்த காலத்தில் -த்- எனும் இடைநிலையையும் நிகழ், எதிர்காலங்களில் முறையே -கிற்-/கின்ற், -வ்- எனும் இடைநிலைகளையும் பெற்றுவரும். இக்கால இடைநிலைகள் வினையடிகளுடன் எவ்விதப் புணர்ச்சி மாற்றமும் இன்றி அவ்வாறே இணைந்துவரும்.

செய் வாய்பாடு திரிபின்றியியலும் (வி.தி.-26)

| வாய்பாடு | இறப்பு | நிகழ்வு | எதிர்வு |
|---|---|---|---|
| செய் | த் | கின்ற்,கிற்- | -வ்- |
| | | ஆனின்ற் | |

இவ்வாய்பாட்டு வினைகளில் மொழியியல் நிலையில் வினைச் சொற்களுக்கும் கால இடைநிலைகளுக்கும் இடையில் எவ்வித மொழியியல் செயல்பாடுகளும் ஏற்படுவதில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## வினை வாய்பாடு – 2 (ஆள் வாய்பாடு)

/ள்/ எனும் மெய்யெழுத்தினை ஈற்றில் கொண்ட வினைச்சொற்கள் இவ்வாய்பாட்டில் அடங்குகின்றன.

ஆள் கொல் கேள் கல் வாய்பாடு முறையே
ளல வீறுடைய முதனிலைக்குரியன (வி.தி.-15)

மேற்காணும் நூற்பாவில் 2,3,9,10 எனும் நான்கு வாய்பாடுகளின் ஈற்றெழுத்துப் பற்றியச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஆள் (2), கேள் (9) எனும் இரு வாய்பாடுகளில் /ள்/ எனும் ஈற்றெழுத்து இடம்பெற்றுள்ளது எனினும் வினைத் திரிபில் மாற்றம் காணப்படுகின்றது.

இரண்டாவது வாய்பாடான ஆள்வாய்பாட்டின் வினைத்திரிபு பின்வருமாறு நிகழ்கின்றது.

ஆளது ளகரமும் . . . . . . . . . . .
ண . . . . . . . . வாய்த் திரிந்து தவ்வும் டறவாம் (வி.தி.27)

ஆள்வாய்ப்பாட்டில் இடம்பெறும் வினைகளின் இறுதியில் நின்ற /ள்/ > /ண்/ என மாற்றம் பெறும். இதன் விளைவாக இறந்தகால -த்->ட் என மாற்றம் பெறும். இவ்வகை மாற்றங்கள் ள் +த் > * ண் + த் > ண்ட் எனும் செயல்பாட்டை ஏற்படுத்துகின்றன என்பது இராகவையங்காரின் கருத்தாகும்.

## மொழியியல் கோட்பாடு

வினை ஈற்றெழுத்தான /ள்/ எனும் கால இடைநிலையுடன் இணையும் பொழுது ள் > ண் என எழுத்து மாற்றம் பெற வாய்ப்பில்லை. கால இடைநிலையில் ஏதேனும் ஒரு மெல்லின எழுத்து இருந்தால் மட்டும் இம்மாற்றம் ஏற்பட வாய்ப்புண்டு. இவ்வகையில் குமாரசாமி ராஜாவின் (1978) மும்மெய்ப்புணர்ச்சி சுட்டத்தக்கது.

ஆய் வாய்பாட்டின் இறந்தகால இடைநிலை -த்- என்பதைவிட -ந்த்- எனக் கொள்வது சாலப்பொருந்துவதாகும். ஆள் வாய்பாட்டில் ஏற்படும் புணர்ச்சி மாற்றத்தினைப் பின்வருமாறு எழுதிக்காட்டலாம்.

ஆள்+ந்த்+ஆன் > *ஆண்-ந்த் - ஆன் >

*ஆண் - ந்ட் - ஆன் > * ஆண்ட் - ஆன் > ஆண்டான்

'*' எனும் குறியிடப்பெற்ற இடை வடிவங்கள் வழுவுடையன. இத்தகைய மொழி மாற்றத்தை மனத்தில் கொண்டு இராகவையங்கார் ள் > ண் என்றும் த் > ட் என்றும் மாறும் எனச் சுட்டி செல்கின்றார்.

| வாய்பாடு | ஈற்றெழுத்து | கால இடை நிலை | மொழிமாற்றம் | |
|---|---|---|---|---|
| | | | வினையடி | இடைநிலை |
| ஆள் | ள் | -த்-(-ந்த்-) | ள் < ண் | -த்- > ட்- |

ஆள்வாய்பாட்டில் 33 வினைச்சொற்கள் பட்டியலிடப் பட்டுள்ளன. பிள், மூள், வெகுள் எனும் வினைச் சொற்கள் இப்பட்டியலில் இடம்பெறவில்லை. நிகழ் மற்றும் எதிர்கால இடைநிலைகளில் எவ்வித மாற்றமும் ஏற்படுவதில்லை.

ஆள்+கின்ற்+ஆன் > ஆள்கின்றான்
ஆள்+வ்+ஆன் > ஆள்வான்

'வ்' எனும் எதிர்கால இடைநிலை -ப்- எனும் இடைநிலையின் மாற்றுருபன் ஆகும்.

ஆள் வாய்பாட்டினைப் போன்று கொல் (3) கேள் (9) கல் (10) வாய்பாடுகள் சந்தி மாற்றங்களுடன் வினைத்திரிபுகளைப் பெறுகின்றன. இவை அவ்வவ் வாய்பாடுகளின் கீழ் விளக்கப் பெற்றுள்ளன.

## வாய்பாடு–3 (கொல் வாய்பாடு)

கொல் வாய்பாட்டு வினைச்சொற்கள் /ல்/ எனும் மெய்யெழுத்தை ஈற்றெழுத்தாய்ப் பெற்று வருகின்றன.

> கொல். . . வாய்பாடு . . .
> லவீறுடைய முதனிலைக்குரியன (வி.தி.–15)

இவ்வினைச்சொற்களின் லகரம் 'ன'கரமாய்த் திரியும். இந்நிலையில் இறந்தகால -த்- > -ற்- என மாற்றம் பெறும் (வி.தி.-27).

## மொழியியல் கோட்பாடு

முன்னர் இரண்டாம் வாய்பாட்டில் சுட்டியவாறு /ல்/ > /ன்/ னாக மாற்றம் பெறவேண்டுமெனின் கால இடைநிலையில் ஒரு மெல்லின மெய்யெழுத்து அவசியமாகுகின்றது. எனவே, சொல் வாய்பாடும் இறந்தகால இடைநிலையான -ந்த்- என்பதை ஏற்றுவரும் எனக் கொள்ளலாம்.

கொல்+ந்த் > * கொன்ந்த் >* கொன்த் > கொன்ற் > கொன்றான்

மும்மெய்ப்புணர்ச்சியின் செயல்பாட்டால் இத்தகைய ஒலி மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன எனக் கொள்ளலாம்.

சொல் வாய்பாட்டிற்குரியதாக 46 வினையடிகள் வினைத்திரிபு விளக்கத்தில் பட்டியலிடப்பட்டுள்ளன. இவற்றுள் இகல், உடல், கவல் என்பன இடம் பெறவில்லை. இவ்வாய்பாட்டில் இறந்த, எதிர்கால இடைநிலைகள் எவ்வித மாற்றங்களையும் பெறவில்லை என்பது சுட்டத்தக்கது.

| வாய்பாடு | ஈற்றெழுத்து | கால இடைநிலை | எழுத்து மாற்றம் வினையடி | இடைநிலை |
|---|---|---|---|---|
| கொல் | ல் | -த்-(-ந்த்-) | ல் > ன் | -த்- > -ற்- |

## வாய்பாடு – 4 (அறிவாய்பாடு)

பிறவினை வாய்பாடுகளைப் போலின்றி அறிவாய்பாட்டில் /இ, ஈ, உ, ஐ, ய, ர, ழ/ எனும் ஏழு ஈறுகளைக் கொண்ட வினைச்சொற்கள் இடம்பெற்றுள்ளன.

**அறிவாய்பாடு இ ஈ உ ஐ**
**யரழ ஈறிவை ஏற்கும் வினைச்சொலாம் (வி.தி.-16)**

அறிவாய்பாட்டுவினைச்சொற்கள் இறந்தகால இடைநிலையை ஏற்றுச் செயல்படும் தன்மையை இராகவையங்கார் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

**அறிவாய்பாட்டுத் தகர முன்னர்**
**இனவெழுத்திடை மிக்கியலுமென்க (வி.தி.-28)**

அறிவாய்பாட்டு வினைகளில் -த்- எனும் இறந்தகால இடைநிலை தோன்றும் பொழுது அதன் இன எழுத்தான /ந்/ என்பது வந்து தோன்றும் என்பது மேற்காணும் நூற்பாவின் பொருளாகும்.

*அறி+த்+/ந்/ அறிந்த் அறிந்தான்

இவ்வாய்பாட்டு வினைகளில் இடம்பெறும் இலக்கணச் செயல்பாட்டைப் பின்வருமாறு எழுதிக்காட்டலாம்:

| | | | | |
|---|---|---|---|---|
| | -இ | | | -இ |
| | -ஈ | | | -ஈ |
| | -உ | | வினை | -உ |
| வினை | -ஐ | +த்/ந்/ | | -ஐந்த் |
| | -ய | | | -ய் |
| | -ர | | | -ர் |
| | -ழ | | | -ழ் |

அறிந்த, ஈந்த, எழுந்த, இசைந்த, ஆய்ந்த, நேர்ந்த, வாழ்ந்த என்பன இவ்வாய்பாட்டிற்குரிய வினைத்திரிபுகளாகும்.

வினைத்திரிபு விளக்கத்தின் பின்னிணைப்பில் அறிவாய் பாட்டிற்குரியனவாக 372 வினைச்சொற்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. தமிழ்ப் பேரகராதியில் இடம்பெற்றுள்ள கரி, நெளி, பணி, பொளி என்பன இராகவையங்காரின் பட்டியலில் இடம்பெறவில்லை என்பது நோக்கத்தக்கது.

இவ்வாய்பாட்டு வினைகளில் நிகழ், எதிர்கால இடைநிலைகள் இயல்பாய் வந்து தோன்றும்.

(எ-டு) அறிகிறான், அறிகின்றான், அறியா நின்றான், அறிவான்.

## வாய்பாடு–5 (அஞ்சு வாய்பாடு)

அஞ்சு வாய்பாட்டுச் சொற்கள் /உ/கர ஈற்று வினைகளாகும். 'உ'கர ஈற்று வினைச்சொற்களை இராகவையங்கார் பின்வருமாறு வரையறை செய்கின்றார்.

> குற்றுகரங்களும் யழ மெய்யொழிந்த
> ஒற்றீயேற்கு முற்றுகரங்களும்
> அவ்வாய் பாட்டினமைய பெறுமே (வி.தி.–18)

அஞ்சு வாய்பாட்டின்கண் வரும் வினைச்சொற்கள் குற்றுகர, முற்றுகரங்களைப் பெற்றுவரும் என்பது மேற்காணும் நூற்பாவின் மூலம் பெறப்படும் செய்தியாகும். இவ்வாய்பாட்டின்கீழ் வரும் எல்லா வினைச்சொற்களும் /உ/ எனும் எழுத்தை ஈற்றெழுத்தாகக் கொண்டுவரும். குற்றுகரம், முற்றுகரம் என்பன ஒலிநிலையில் பெறப்படும் வேறுபாடுகளாகும் என்பது சுட்டத்தக்கது. /ய/, /ழ/ ஒழிந்த ஏனைய வினைச்சொற்கள் முற்றுகரங்களுடன் இவ்வாய்பாட்டிற் குரியனவாக ஆகுகின்றன.

/-உ/[1] (குற்றுகரம்) பாடு, ஆடு, ஓடு

/-உ/[2] (முற்றுகரம்) எழுது, திரும்பு, பயிற்று

அஞ்சு வாய்பாட்டுச் சொற்கள் -இன்- எனும் இறந்தகால இடைநிலையைப் பெற்று வருகின்றன.

> 'அஞ்சு வாய்பாட்டுக்கின்னே இடைநிலை' (வி.தி.–33)

அஞ்சு வாய்பாட்டுவினைகள் தமிழில் அதிகமாகப் பயன்படுத்தப் படுகின்றன என்று கூறும் இராகவையங்கார் அதற்குப் பின்வரும் காரணங்களையும் சுட்டியுள்ளார்.

> உகரமூர்ந்த வல்லெழுத்தாறும்
> பிறவினை குறிக்க இணைவினை சிலவுள
> அஞ்செனு வாய்ப்பாட்டமைவன அவையே (வி.தி.–50)

குற்றுகர ஈற்றாய் வரும் தன்வினைகள் பிறவினைகளாய் 'உகரம் ஊர்ந்த வல்லெழுத்துக்களுடன்' வரும். அவ்வமயம் /கு/, /சு/, /டு/, /து/, /பு/, /று/ என்பன இணைக்கப்பெற்ற சொற்கள் பிறவினைச் சொற்களாகச் செயல்படுகின்றன. இதன் காரணமாய் வினைச்சொற்களின் எண்ணிக்கை அதிகமாகுகின்றது (வி.தி. ப.26)

இராகவையங்காரின் இக்கருத்து மொழியியல் மாற்றங்கள் எனும் நிலையிலும் ஆராயத்தக்கது. மொழியியலில் இவ்வகை மாற்றங்கள் சந்திகள் மூலம் விளக்கப்பெறுகின்றன.

ங்க் > க்க

ந்த் > த்த்

ண்ட் > ட்ட் மெல்லொளி+வல்லொலி > வல்லொலி
வல்லொலி

ஞ்ச் > ச்ச் மெல்வல் > வல்வல்

ம்பு > ப்பு

மொழியியலில் ஞ்ச் > ச்ச் என்பதில் /ச்ச்/ தனி விகுதியாகக் கொள்ளப்படுகின்றது. மேலும்

க் > க்க

ற் > ற்ற என்பன வல்லொலி - வல்லொலி

ட் > ட்ட் வல்லொலி

என்பனவற்றிற்குரியன. எனவே, இரண்டு மாற்றங்களையும் இணைத்து (மெல்) வல் > வல்வல் என வழங்குவர்.

பல்வேறு வினை வாய்பாடுகளில் இடம்பெற்றுள்ள வினைச் சொறகள் பிறவினையின் பொருட்டு ஐந்தாவது வாய்பாட்டிற்கு வருவது என்பது குறிப்பிடத்தக்கது. இதனாலும் இவ்வாய்பாட்டுச் சொற்கள் அதிகமாகுகின்றன எனக் கொள்ளலாம்.

| வினை | வாய்பாடு | பிறவினையாக மாற்றம் பெறும் வினை (அஞ்சு வாய்பாடு) |
|---|---|---|
| உருள்- | 2 | உருட்டு |
| பயில்- | 3 | பயிற்று- |
| பாய்- | 4 | பாய்ச்சு- |
| நட- | 12 | நடத்து- |
| எழு- | 4 | எழுப்பு- |
| உண் | 7 | ஊட்டு |

அஃகு முதல் வெளவு ஈறாக 1210 வினைச்சொற்கள் வினைத்திரிபு விளக்கத்தின் பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

அஞ்சு வாய்பாட்டில் நிகழ்கால எதிர்கால இடைநிலைகள் இயல்பாய் எவ்விதமாற்றமும் இன்றி வரும் (வி.தி.-35, 40).

## வாய்பாடு-6 (நகு வாய்பாடு)

தனிக்குறிலினை அடுத்த /கு/, /டு/, /று/ என்பனவற்றை ஈறாகவுடைய வினைச்சொற்கள் நகுவாய்பாட்டிற்குரியனவாகவுள்ளன.

நகு வாய்பாடு தனிக்குறிலடுத்த
குடுறு வீற்றினைக் கொளும் முதனிலைகள் (வி.தி.-19)

இவ்வாய்பாட்டு வினைகளில் இறந்தகாலத்திற்கெனத் தனி இடைநிலை எதுவும் இடம்பெறுவதில்லை. இவ்வாறு ஒற்று இரட்டித்துவரும் தன்மை மரபிலக்கண உரையாசிரியர்களால் சுட்டப்பெற்றுள்ளது. மாறாக, இறந்தகாலத்தில் வினைச்சொற்களில் ஈற்றசை இரட்டித்துவரும். இது வினைத்திரிபு விளக்கத்தின் பின்வரும் நூற்பாவில் இடம்பெற்றுள்ளது.

நகுவாய்பாடு தனிக்குறிலடுத்த
குடுறு வீற்றினைக்கொண்டு கழிவினை
இடைநிலையின்றி யொற்றிரட்டி யிசைக்கும் (வி.தி.34)

(எ-டு) நகு > நக்கான் (க் க்க்)
புகு > புக்கான் ( " )
அடு > அட்டான் (ட் ட்ட்)
விடு > விட்டான் ( " )
பெறு > பெற்றான் (ற் ற்ற்)
உறு > உற்றான் ( " )

மேற்காணும் சொற்களில் தனிக்குறிலினை அடுத்து /உ/ எனும் எழுத்து இடம்பெற்றுள்ளது. சிறுபான்மையாக நெடிலை அடுத்துவரும் /டு/ வும் இரட்டித்து வரும் (போடு > போட்டான்).

## மொழியியல் கோட்பாடு

மொழியியலில் வழங்கிவரும் ஒரு சந்திவிதியின்படி -த்- எனும் எழுத்து அதற்கு முன்னால் வரும் /க்/ /ட்/ /ற்/ எனும் எழுத்தினை இரட்டிக்கச் செய்கின்றது. மூன்று எழுத்து மெய் மயக்கத்தின்வழி இரட்டிப்பு மாற்றம் சாத்தியமாகுகின்றது.

நகு+த் > நக்கு

naku + t > *nakktu > nakku

அடு > த் > அட்டு

aṭu + t > * aṭṭtu > aṭṭu

அறு+த் > அற்று

aRu+t>*aRRtu>aRRu

இவ்வகை மாற்றத்தினை

(c) V̂CU+ tu > (c) VCCU (c=க், ட், ற் t=த்)

மொழியியலார் கருத்துப்படி நகுவாய்பாட்டு வினைச்சொற்கள் -த்- எனும் கால இடைநிலையை ஏற்பன. எனவே, இவை ஒன்றாம் வாய்பாடான 'செய்து' வாய்பாட்டிற்கு உரியனவாகும். ஒன்றாம் வாய்பாட்டில் இடம்பெறும் வினைகள் குற்றியலுகரங்களுடனும் ஆறாம் வாய்பாட்டில் இடம்பெறும் வினைச்சொற்கள் முற்றுகரங்களுடனும் உள்ளன என்பதால் ஒன்றாம் வாய்பாட்டில் அடங்கும் இவ்வினைச் சொற்களை எளிதில் பிரித்தறிய இயலும்.

நகு வாய்பாட்டில் நிகழ்கால, எதிர்கால வினைமுற்றுகள் இயல்பாகத் தோன்றுகின்றன. வினைத்திரிபு விளக்கத்தில் நகு வாய்பாட்டிற்கென 30 வினைச்சொற்கள் பட்டியலிடப் பெற்றுள்ளன. இப்பட்டியலில் தகு, படு என்பன இடம்பெறவில்லை என்பது சுட்டத்தக்கது.

### வாய்பாடு-7 (உண் வாய்பாடு)

உண் வாய்பாட்டு வினைச்சொற்கள் /ண்/ எனும் ஈற்றெழுத்திற்குரியனவாகும்.

**உண்தின் வாய்பாடிரண்டும் முறையே**
**ணகர னகர வீறுடையனவாகும் (வி.தி.-20)**

உண் வாய்பாட்டு வினைச்சொற்கள் -த்- எனும் இறந்தகால இடைநிலையுடன் தோன்றும். எனினும் அது த் > ட் என மாற்றம் பெறும் என்பது வினைத்திரிபு விளக்கத்தில் இடம்பெறும் மற்றொரு செய்தியாகும்.

**உண்ணின் தகரமும் தின்னின் தகரமும்**
**டற வொற்றாகத்தா நடக்கும் (வி.தி.-29)**

**உண்+த்>உண்ட்>உண்டான்**

இராகவையங்காரால் சுட்டப்பெறும் எழுத்துமாற்றம் புணர்ச்சிவிதிக்கு உட்பட்டதாகும். மொழியியல் கோட்பாட்டின்படி Retroflex மூக்கொலியை அடுத்துவரும் பல்வெடிப்பொலி ṭ ஒலியாக மாற்றம் பெறும் (ṇ+t>ṇṭ). இராகவையங்காரின் விளக்கம்முழுநிலையில் மொழியியல் விதிகளுக்கு உட்பட்டதாய் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

உண், பூண், மாண், முரண் எனும் 4 வினைச்சொற்கள் பட்டியலில் தரப்பட்டுள்ளன. இந்நான்கு வினைச்சொற்களும் தன்வினையாகவுள்ளன. 'உண்', 'பூண்' என்பன பிறவினைகளாக ஆக்கப்பெறும்பொழுது ஊட்டு, பூட்டு என மாற்றம் பெற்று ஐந்தாம் வகைப்பாட்டிற்குரியனவாகுகின்றன.

## மொழியியல் கோட்பாடு

இவ்வாய்பாட்டு வினைகள் நிகழ்காலம் மற்றும் எதிர்காலங்களில் வரும் பொழுது /உ/ எனும் எழுத்தினைப் பெறுகின்றன. எதிர்காலத்தில் வரும் -ப், /உ/ கரத்தினால் -வ்- ஆக மாற்றம் பெறுகின்றது என்பது இவண் சுட்டத்தக்கது.

பூண்>*பூணு +ப்+ஆன் > பூணுவான்
மாண் >* மாணு +ப் +ஆன் > மாணுவான்
முரண் >* முரணு +ப்+ஆன் > முரணுவான்

'உண்' எனும் வினைச்சொல் மட்டும் 'ப்' எனும் எதிர்கால இடைநிலையைக் கொள்ளுமிடத்து, எஞ்சிய மூன்று வினைச்சொற்களும் /உ/ எனும் எழுத்தினைப் பெற்று -வ்- எனும் மாற்றுருபனைப் பெறுகின்றது. இத்தகைய மாற்றங்கள் வினைத்திரிபு விளக்கத்தில் சுட்டப்பெறவில்லை.

## வகைப்பாடு-8 (தின் வாய்பாடு)

தின் வாய்பாட்டு வினைகள் /ன்/ எனும் தனிமெய்யை ஈற்றெழுத்தாகக் கொண்டு அமைகின்றன.

உண்தின் வாய்பாடிரண்டும் முறையே
ணகர னகர வீறுடையனவாகும் (வி.தி.-20)

தின் வாய்பாட்டின் கால இடைநிலையான -த்-, > /ற்/ என மாற்றம் பெறுகின்றது.

. . . . தின்னின் தகரமும்
. . . . ற வொற்றாகத் தா நடக்கும்மே(வி.தி.-29)

முன்வாய்பாட்டில் சுட்டியதுபோன்று காலஇடைநிலையாக வரும் /த்/ எனும் வெடிப்பொலி மெல்லின மெய்யான /ன்/ என்பதற்கு முன்னால் வரும்பொழுது த்>ற் என மாற்றம் பெறும் (த்>ற்/ன்).

தின்+த்>தின்+ற்>தின்ற்

இராகவையங்கார் ஈன், தின், நோன் எனும் மூன்று வினைகளைப் பட்டியலிட்டுள்ளார். இப்பட்டியலில் என், கவன் எனும் வினைகள் விடுபட்டுள்ளன.

## வாய்பாடு –9 (கேள் வாய்பாடு)

கேள் வாய்பாட்டு வினைச்சொற்கள் /ள்/ எனும் மெய்யெழுத்தை ஈற்றெழுத்தாகக் கொண்டுள்ளன.

. . . .கேள் வாய்பாடு. . .
. . . .ள. . . .வீறுடைய முதனிலைக்குரியன (வி.தி.–14)

இவ்வாய்பாட்டு வினைச்சொற்கள் -த்- எனும் கால இடைநிலையை ஏற்கும் நிலையில் வினையின் ஈற்றெழுத்தும் கால இடைநிலையும் /ட்/ என மாற்றம் பெறுகின்றன. பின்வரும் நூற்பாவில் இச்செய்தியைக் காணலாம்.

கேள் கல் வாய்பாட்டு ளகர லகரங்கள்
டறவாய்த் தகரமும் டறவாகும்மே (வி.தி.–30)

## மொழியியல் கோட்பாடு

/ள்/ எனும் மெய்யொற்றை அடுத்து /த்/ எனும் வெடிப்பொலி வருமிடத்து ள்>ட் என முதலில் மாற்றம் பெறும். பின்னர் /ட்/ எனும் எழுத்தால் த்>ட் என மாற்றம் பெறும்.

கேள்+த்>*கேட்+த் > கேட்ட் > கேட்டான்
ḷ+t > ḷt > ṭṭ

இராகவையங்காரால் சுட்டப்பெற்றுள்ள இவ்வகை மாற்றம் மொழியியல் மாற்றங்களுக்கு உட்பட்டுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது. நிகழ்கால, எதிர்கால இடைநிலைகளின் சேர்க்கையின்பொழுது வினை ஈற்றெழுத்து 'ட்' என மாற்றம் பெறுகின்றது (வி.தி.-41).

கேள்+கிற்>கேட்கிற். . .
கேள்+ப்> கேட்ப். . .

கள், கேள், தள், தெள், தோள், பெள், மீள், வேள் எனும் எட்டுவினைச் சொற்கள் வினைத்திரிபு விளக்கத்தின் பட்டியலில் இடம்பெற்றுள்ளன. தொள், பிள் எனும் இரண்டு சொற்கள் இப்பட்டியலில் இடம்பெறவில்லை.

### வினை வாய்பாடு–10 (கல்வாய்பாடு)

கல் வாய்பாட்டு வினைகள் /ல்/ எனும் ஈற்றெழுத்திற்கு உரியன.

. . . கல் வாய்பாடு . . .
. . . ல வீறுடைய முதனிலைக்குரியன (வி.தி.–15)

இவ்வாய்பாட்டு இறந்தகால இடைநிலை /ற்/ என மாற்றம் பெறுகின்றது.

. . .கல் வாய்பாட்டு . . .லகரம்
. . . ற வாய்த் தகரமும் டறவாகும் (வி.தி.–30)

### மொழியியல் கோட்பாடு

கல்+த்>*கற்த் > கற்ற்>கற்றான்

இறந்த காலத்தின் பொழுது வினையடியின் ஈற்றெழுத்தும் கால இடைநிலையும் மாற்றமடைகின்றன.

இறந்த கால இடைநிலையைப் போன்றில்லாமல் நிகழ்கால, எதிர்கால இடைநிலைகள் வினையடியுடன் இணையும்பொழுது வினை ஈற்றெழுத்து மட்டும் /ற்/என மாற்றம் அடைகின்றது.

கல்+கிற்>* கற்கிற் > கற்கிறான்
கல்+ப்>*கற்ப்>கற்பான்

கல், கில், தோல், நூல், நோல், வில் எனும் ஆறு வினைகள் வினைத்திரிபின் பட்டியலில் இடம்பெற்றுள்ளன. 'ஏல்' எனும் வினை இப்பட்டியலில் இடம் பெறவில்லை.

### வினைவாய்பாடு–11 (பார் வாய்பாடு)

வினை வாய்பாடுகளில் அதிகமான ஈற்றெழுத்துகளைக் கொண்ட வாய்பாடு பார் வாய்பாடாகும். இவ்வாய்பாட்டிற்கு 10 ஈற்றெழுத்துகள் உள்ளன.

பார் வாய்பாடு அஇஉவ்வொடு
ஆ,ஈ,ஐ,ஓ,ய,ர,ழ வீறும்பெறும் (வி.தி.–21)

பின்வருவன பார் வாய்பாட்டிற்குரிய 10 ஈறுகளாகும்.

| | | |
|---|---|---|
| அ (சலசல) | ஈ(சீ) | ய(தேய்) |
| இ(அடி) | ஐ(உழை) | ர் (உதிர்) |
| உ(மடு) | ஓ(கோ) | ழ்(முகிழ்) |
| ஆ(கா) | | |

பார் வாய்பாட்டில் இறந்தகால இடைநிலை -த்- இரட்டித்து வரும்.

பாரின் தகரம் தன்னொற்று மிகும் (வி.தி.-31)

பார்+த் > பார்த்த் > பார்த்தான்
சலசல +த் > சலசலத்த் > சலசலத்தான்
அடி+த் > அடித்த் > அடித்தார்

இவ்வகைப்பாட்டிற்குரியனவாக 1327 வினைச்சொற்கள் வினைத்திரிபு விளக்கத்தில் பட்டியலிடப்பட்டுள்ளன.

## மொழியியல் கோட்பாடு

மொழியியலார் வினைச்சொற்களை வல்வினை, மெல்வினை, இடைவினை என மூன்று வகைகளாகப் பாகுபாடு செய்வர். அவற்றுள் வல்வினை என்பது முக்கால இடைநிலைகள் வினைச்சொற்களுடன் இணையும்பொழுது இரட்டித்து வரும். (த்த், க்கிற், ப்ப்) அவ்வாறு இரட்டித்துவரும் வல்வினைகள் 'X' எனும் குறியீட்டுடன் மொழியியலில் காட்டப்பெறுகின்றன.

படி X > படித்தான், படிக்கிறான், படிப்பான், படிக்கும். .
பார் X > பார்த்தார், பார்க்கிறான், பார்ப்பான். . .

இம்மாற்றத்தைப் பின்வருமாறு எழுதிக்காட்டலாம்:

X+த் > த்த்
X+க் > க்க் > X+கிற் > க்கிற்
X+ப் > ப்ப்

மரபிலக்கண உரையாசிரியர்கள் இவ்வகை இரட்டிப்பை உரைகளில் சுட்டிக் காட்டியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

பார் வாய்பாட்டின் பெருக்கத்திற்கான காரணத்தையும் இராகவையங்கார் சுட்டியுள்ளார். அவை:

* தன்வினையாகச் செயல்படும் வினைகளின் பிற வினையாக்கத்தில் கால இடைநிலையின் வல்லொற்று

இரட்டிப்பதாலும் (சேர்ந்தான் > சேர்த்தான், சாய்ந்தான் > சாய்த்தான்)

* ஒலி, ஒளி, விரைவு முதலிய பண்பு குறிக்கும் இரட்டைக்கிளவிகளாய்க் குறிப்புப்பொருள் உணர்த்தும் பகுதிகள் கூடிப் பெருகுதலாலும் (சலசலத்தது, பளபளத்தது)

* வடசொற்கள், திசைச்சொற்கள் அடியாக வழங்கும் பகுதிகள் கூடிப் பெருகுதலும் (பராமரித்தல், பரிணமித்தல், அதிகரித்தல்)

பதினொன்றாம் வாய்பாட்டுச் சொற்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. (வி.தி.ப.27)

## வாய்பாடு-12 (நட வாய்பாடு)

நட வாய்பாட்டு ஈறுகள் பின்வருவன,

நடவாய்பாடு தனிக்குறிலடுத்த
அகர ஆகார ஓகார வீற்றது (வி.தி.-22)

நடவாய்பாட்டுச் சொற்கள் 'அ', 'ஆ', 'ஓ' எனும் ஈறுகளைப் பெற்று வரும்.

அ > அள, நட, கட . .
ஆ > அண்ணா, மல்லா, அல்லா, இறுமா, செம்மா
ஓ > மோ (மோந்து)

நட வாய்பாட்டு வினைச்சொற்களில் இடைநிலைகளைக் கூறுமிடத்து இராகவையங்கார் பின்வருமாறு கூறிச்செல்கின்றார்.

நடவின் தகர மின வெழுத்து மிகுமே (வி.தி.-32)

நட என வாய்பாட்டு வினைச்சொற்களில் -த்- எனும் கால இடைநிலையை இணைக்கும் பொழுது -த்- எனும் எழுத்தின் இன எழுத்தான 'ந்' வந்து சேரும்.

*நட + த் > நட + ந்த் # த் > ந்த்

இவ்வாய்பாட்டிற்கென வினைத்திரிபு விளக்கத்தில் 72 வினைச்சொற்கள் பட்டியலிடப்பட்டுள்ளன.

இறந்தகால அடிப்படையில் வினைச்சொற்களை விளக்கிய இராகவையங்கார் பன்னிரண்டு வாய்பாடுகளிலும் நிகழ்கால மற்றும்

எதிர்கால வினைச்சொற்கள் செயல்படும் தன்மையையும் சில நூற்பாக்களில் சுட்டிக்காட்டியுள்ளார். வினைச்சொற்கள் பற்றிய முழுச்செய்தியையும் சுட்ட வேண்டும் எனும் அவரது ஆர்வம் அவரது ஆய்வுத்திறனுக்கு வலுவூட்டுவதாய் உள்ளது.

### வினை வாய்பாடுகளில் நிகழ், எதிர்கால, இடைநிலைகளின் செயல்பாடு

வினைச்சொற்கள் இறந்தகால இடைநிலையை ஏற்பதில் தம்முள் பல வேறுபாடுகளைக் கொண்டுள்ள நிலையில் நிகழ், எதிர்கால இடைநிலைகள் வினைச்சொற்களுடன் பெரும்பாலும் இயல்பாகவும் சிறிது மாற்றங்களுடனும் இணைகின்றன. இத்தகு செய்தியை இராகவையங்கார் தமது நூலில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

### நிகழ்கால இடைநிலை

செய் வாய்பாடு முதல் தின் வாய்பாடு ஈறாக உள்ள எட்டு வாய்பாடுகளில் நிகழ்கால இடைநிலைகள் இயல்பாய் வரும்.

கின்றுங் கிறுவுமாநின்றும் உம்மும்
செய்முதலாகச் செப்பிய வாய்பா
டெட்டின் இயல்பாய்த் தனித்தியங்கும்மே (வி.தி.-35)

ஒன்பதாவது (கேள் வாய்பாடு) மற்றும் பத்தாவது (கல் வாய்பாடு) வாய்பாடுகளில் நிகழ்கால இடைநிலைகளினால் வினைச்சொல்லின் ஈற்றெழுத்தில் மாற்றம் ஏற்படுகின்றது.

கேள் கல்லி ரண்டிலுங்கின்றும் கிறுவும்
வினையின் ளலக்கள் டறவாய்த் திரியும் (வி.தி.-36)

ஒன்பது முதல் 12 வரையிலான (கேள், கல், பார், நட) வாய்பாடுகளில் ஆநின்று /கு/ கரம் பெற்றும் பெறாமலும்வரும்.

கேட்கா நின்றார் ~ கேளாநின்றான்
கற்கா நின்றான் ~ கல்லாநின்றான்

நிகழ்காலத்தில் -உம்- எனும் இடைநிலையின் செயல்பாடு பற்றிப் பின்வரும் செய்தி வினைத்திரிபு விளக்கத்தில் இடம்பெற்றுள்ளது.

ஏனை உம்மை குச் சாரியை யின்றி
மற்றவை தம்மில் வழங்கா தென்க

கேட்கும், கற்கும் எனவரும். ஆனால் கேளும், கல்லும் (வி.தி.39) என வருவதில்லை.

## எதிர்கால இடைநிலைகள்

செய்முதல் நகுவரையிலான ஆறு வாய்பாடுகளில் எதிர்கால இடை நிலையான -வ்- இயல்பாய்த் தோன்றும் என்று இராகவையங்கார் குறிப்பிடுகின்றார்.

எதிர்வின் வகர விடைநிலையது தான்
செய்முதல் நகுவரை வாய் பாடாறினும்
இயல்பின் வந்தே இயங்குவதாகும் (வி.தி.40)

செய்வான், ஆள்வான், கொல்வான், அறிவான், அஞ்சுவான், நகுவான் என்பன இதற்குச் சான்றாகும். எதிர்காலத்திற்குரிய -ப்-வின் செயல்பாட்டினால் வினையடிகளின் ஈற்றெழுத்தில் மாற்றம் ஏற்படுகின்றது.

பகரவிடைநிலை கேள்கல் லிரண்டினும்
ளலக்கள் டறவாய்த் திரிந்து நடைபெறும் (வி.தி.–41)

மேலும்,

நிகழ்வினும்மே போலச் செய்கையின்
எதிர்வினும்மே எய்தும் என்க (வி.தி.–42)

உண்ணும், கேட்கும் என்பன போன்ற வினைகள் இதற்குச் சான்றாகும்.

முடிவுரை

தமிழ் வினைச்சொற்களின் அமைப்பினைப் பொறுத்த மட்டில் கால இடைநிலைகளின் செயல்பாடு இன்றியமையாததாகும். பிறமொழிகள் போலன்றி இறந்தகால இடைநிலைகள் தமக்கெனத் தனி வினையடிகளைப் பெற்றுள்ளன. எனவே, தமிழ் வினைச் சொற்களின் பாகுபாடு ஆழ்ந்து ஆராயத்தக்க ஒன்றாக உள்ளது. தமிழ் அகராதிகளில் குறிப்பாக இருமொழி அகராதிகளில் வினைச் சொற்களின் வரையறைக்குக் கால இடைநிலைகளின் பயன்பாடு தேவையான ஒன்றாக உள்ளது. வினைகளை இறந்தகால இடைநிலைகளின் அடிப்படையில் வகைப்படுத்துவதற்குரிய முயற்சி பல காலங்களிலும் பல அறிஞர்களால் மேற்கொள்ளப் பெற்றுள்ளது. தமிழ் அறிஞர் மு. இராகவையங்காரின் பணி மிகவும் பாராட்டுதற்குரியது. தமிழ் வினைச்சொற்களை வினை ஈறுகளின் அடிப்படையில் வகைப்படுத்திக் காணவேண்டும் என்ற அவரது நோக்கு மொழியியல் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு

அமைந்துள்ளது என்பது சுட்டத்தக்கது. மு. இராகவையங்காரால் தொகுத்தளிக்கப் பெற்றுள்ள வினைப்பட்டியல் மிகவும் பயனுடையது. வினைகள் குறித்த மேல் ஆய்விற்குப் பயனளிப்பது. ஐந்து மற்றும் பதினொன்றாம் வாய்பாடுகளின் பெருக்கம் பற்றிய செய்தி இதுபோன்ற பிற ஆய்வுகளில் இடம்பெறாத செய்தியாகும். பன்னிரண்டு வாய்பாடுகளிலும் இடம்பெறாத செய்தியாகும். பன்னிரண்டு வாய்பாடுகளிலும் இடம்பெறாத வினைகள் அல்லது சுட்டிய விதிகளுக்கு மாறாக வரும் வினைகள் 'ஒழிபு' எனும் பகுதியில் சுட்டப்பெற்றிருப்பது வினைச்சொற்களின் ஒட்டுமொத்த செயல்பாட்டையும் அவற்றின் முரணான செயல்பாட்டையும் தெரிந்துகொள்வதற்கு மிகவும் துணையாக அமைகின்றது.

## துணைநூல்கள்

Chithiraputhiran, H. Tamil Verbal Suffixes (un published) PhD Thesis, Annamalai University Annamalai Nagar, 1984

Kumaraswami Raja, N. "Three Consanant Clusters inTamil" Seminar on Phonology (mimeo) Annamalai University, Annamalai Nagar.

# செந்தமிழும் மு.இரா.வும்

மோ. கோ. கோவைமணி

மதுரையில் 1901ஆம் ஆண்டு பாண்டித்துரைத்தேவர் மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவினார். 1902ஆம் ஆண்டு அத்தமிழ்ச் சங்க மாத வெளியீடாகச் 'செந்தமிழ்' உருவாயிற்று. இதன் முதல் இதழாசிரியராக ரா. இராகவையங்காரும் முதல் உதவியாசிரியராக மு. இராகவையங்காரும் அமர்ந்து செந்தமிழ் இதழை உலகில் நிலையாகக் கால்கொள்ளச் செய்திருக்கின்றனர். தமிழ்க் கல்வியிலும் தமிழாராய்ச்சியிலும் பேரவாக்கொண்ட தமிழ்மக்கட்கு உறுதுணையாய் நின்றது செந்தமிழ் என்றால் அதுமிகையன்று. ஒவ்வொரு மாத இதழும் புதிய புதிய பல அரிய செய்திகளை வெளியிடுவதாகவே வெளிவந்துள்ளது. "ஒவ்வொரு மாதமும் செந்தமிழ் எப்போது வெளிவருமென்ற பேராவலோடு தமிழன்பர்கள் எதிர்பார்த்தவண்ண மாயிருந்தார்கள். தமிழ்நாட்டுப் பெரும் பேராசிரியனாயமைந்து தமிழ் மக்கள் வீடுதோறுஞ் சென்று தமிழர் கல்வி நலத்தை அவர்கள் நுகரும்படிச் செய்து வந்த பெருமை செந்தமிழ்ப் பத்திரிகைக்கே உரியதாயிருந்தது. இப்பத்திரிகையின் உயிர்நிலையாயிருந்தவர்கள் இவ்வாசிரியரவர்களே (மு.இரா.)" (ஆராய்ச்சித் தொகுதி, முன்னுரை, பக். 10-11) என்னும் பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை கருத்துப்படி செந்தமிழுக்கும் மு. இரா.வுக்கும் இருந்த தொடர்பு வெளிப்படும். மு.இரா. முதல் எட்டு ஆண்டுகளுக்குச் செந்தமிழ் இதழின் உதவியாசிரியராக இருந்த போதும் அதன் பிறகும் (43ஆம் தொகுதி வரை) வெளி வந்த செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் இவர்தம் ஆய்வுப்பணி தொடர்ந்திருக்கின்றது. குறிப்பாக, இலக்கியம், இலக்கணம், மொழி நூல், எழுத்து வரலாறு, நூற்பதிப்பு முறை, நூலாராய்ச்சி, நாட்டு வரலாறு, சமயம், பண்டை ஆசிரியர்கள், பண்டைத்தமிழர்களின் ஒழுக்க நெறி, சிலாசாசனங்கள், இடப்பெயர்கள், பண்டைக் காலத்துச் சான்றோர்கள் முதலிய பலபொருள்கள் இவர்தம் ஆய்வுகளில் இடம் பெற்றிருக்கின்றன. மேலும் பழந்தமிழ்ச் சுவடிகளிலிருந்து வெளிவந்த நூல்கள், வாழ்த்துப்பா, இரங்கற்பா என்றவாறும் இவர் தம் பணிகள் செந்தமிழ் இதழில் இடம் பெற்றிருக்கின்றன. இவற்றைப் பொதுவாக மூன்று வகைகளாகப் பாகுபடுத்திக் காணலாம்.

அவை, 1. பதிப்பு
2. படைப்பு
3. ஆய்வு என்பனவாகும்.

## 1. பதிப்பு

மகாவித்துவான் மு. இராகவையங்கார் செந்தமிழ் இதழில் பதிப்பித்த சுவடிப்பதிப்பு நூல்களை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை,

அ. தனிநூலாகாத இதழ்ச் சுவடிப்பதிப்பு
ஆ. தனிநூலான இதழ்ச் சுவடிப்பதிப்பு

என்பனவாகும்.

### அ. தனிநூலாகாத இதழ்ச் சுவடிப்பதிப்பு

சுவடியிலிருந்து நேரிடையாக இதழில் வெளியாகி இன்று வரை இதழ்ப்பதிப்பாகவே இருப்பதைத் 'தனிநூலாகாத இதழ்ச் சுவடிப்பதிப்பு' எனலாம். இவ்வாறமைந்த இதழ்ப்பதிப்புகள், இதழ்கள் வெளிவந்த காலத்து மட்டும் பேசப்பட்டு இன்று பேசுவாரற்றுக் கிடப்பனவாகும். ('பருவஇதழ்ச் சுவடிப்பதிப்புகள்' என்னும் முனைவர் பட்ட ஆய்வேடு மோ.கோ. கோவைமணி, அச்சில் வராதது, 2002). 184 புதிய இலக்கியங்களைத் தமிழிலக்கிய உலகிற்கு அறிமுகம் செய்து வைத்திருக்கின்றது. இவற்றில் மு.இரா. எதிராசரந்தாதி, புரூரவ சரிதை ஆகிய இரண்டு நூல்களைத் தமிழிலக்கிய உலகிற்குச் செந்தமிழ் இதழ் வாயிலாக அறிமுகப்படுத்தி யிருக்கின்றார். இவ்விரு நூல்களும் இன்று வரை இதழ்ப்பதிப்பாகவே இருக்கின்றன.

#### எதிராசரந்தாதி

பத்துக் கலித்துறைப் பாடல்களாலான இந்நூலைப் பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றியுள்ளார். இந்நூல் உடையவரென்றும், எம்பெருமானாரென்றும் வழங்கும் ஸ்ரீஇராமாநுஜரது வைபவத்தைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இந்நூல் 1906ஆம் ஆண்டு செந்தமிழ் இதழில் மு.இரா.வாலும், 1929ஆம் ஆண்டு ஹரிசமய திவாகரன் இதழில் ரெ. இராமையங்காரின் குறிப்புரையுடனும் வெளி வந்துள்ளது.

#### புரூரவ சரிதை

ஐம்பெருமாள் சிவந்த கவிராயரின் 'புரூரவ சரிதை' 845 பாடல்களால் ஆனது. இதில் புரூரவா உற்பத்திப் படலம் முதல்

தேவிசேர் படலம் ஈறாக 26 படலங்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூல் சந்திரகுல திலகனாகிய புரூரவ சக்கரவர்த்தியின் வரலாற்றைக் கூறுகின்றது. இவனது கதை மகாபாரதத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அச்சுருக்கத்தின் விரிவாக ஆசிரியர் 845 பாடல்களை 26 படலங்களாக யாத்திருக்கின்றார். கும்பப்படலத்தை அடுத்த ஓர் படலம் ஏட்டிலேயே இடம்பெறவில்லை என்பதை மு.இரா. தமது பதிப்புரையில் சுட்டிச் சென்றிருக்கின்றார். ஆக, இந்நூலினின்று 25 படலங்களே செந்தமிழ் இதழில் வெளிவந்த ஒரு குறைப்பதிப்பாகத் திகழ்கின்றது. சனிபகவனால் ஏற்படும் இன்னல்களை இந்நூல் பூர்வச்சக்கரவர்த்தியின் வாழ்க்கை வரலாற்றோடு எடுத்தியம்புகின்றது. இந்நூலைப் பற்றிய அறிமுகத்தை மு.இரா. செந்தமிழ்த் தொகுதி 6இல் முதன் முதல் ஆய்வுக் கட்டுரையாகத் தந்திருக்கின்றார். அதன்பிறகு இதழ்ப் பதிப்பாக 1922-25ஆம் ஆண்டு வெளியிட்டிருக்கின்றார்.

## ஆ. தனிநூலான இதழ்ச் சுவடிப்பதிப்பு

மு. இராகவையங்கார் செந்தமிழ் இதழில் வெளியிட்டுப் பின்னர்த் தனிநூற்பதிப்பான சுவடிப் பதிப்புகளை இரண்டு நிலைகளாகப் பிரித்துக் காணலாம். அவை,

1. இதழ்ப் பதிப்பிற்குப் பின் தனிநூற் பதிப்பு
2. இதழ்ப் பதிப்பிற்கு முன்-பின் தனிநூற் பதிப்பு

என்பனவாகும்.

## 1. இதழ்ப் பதிப்பிற்குப் பின் தனிநூற்பதிப்பு

சுவடியிலிருந்து முதன்முதலில் செந்தமிழ் இதழில் வெளியிடப்பெற்றுப் பின்னர்த் தனிநூலாக வெளியிடப்பெற்றதை 'இதழ்ப் பதிப்பிற்குப் பின் தனிநூற்பதிப்பு' எனலாம். இம்முறையில் சிதம்பரப்பாட்டியல், நரிவிருத்தம், பாண்டி மண்டல சதகம், பெருந்தொகை, விக்கிரமசோழனுலா ஆகிய ஐந்து சுவடிப்பதிப்புகள் வெளிவந்துள்ளன.

### சிதம்பரப்பாட்டியல்

பரஞ்சோதியாரின் 'சிதம்பரப்பாட்டியல்' 52 செய்யுட்களாலானது. உறுப்பியல், செய்யுளியல், மொழியியல், பொருத்தவியல், மரபியல் என்ற ஐந்து இயல்களில் 57 வகையான சிற்றிலக்கியங்களுக்கான இலக்கணங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இந்நூற்குப் பழைய உரை ஒன்றுண்டு. இவ்வுரையுடன்

மு.இரா. 1907-08ஆம் ஆண்டுச் செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் தனிப்பக்க எண் கொடுத்து வெளியிட்டிருக்கின்றார். பின்னர் இவ் இதழ்ப்பதிப்பு 1911ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பிரசுரம் 20ஆவதாக வெளிவந்திருக்கின்றது. இதன் இரண்டாவது பதிப்பைக் கி. இராமாநுஜையங்கார் 1932ஆம் ஆண்டு சில திருத்தங்களுடன் செந்தமிழ்ப் பிரசுர வெளியீடு 20ஆகவே வெளியிட்டிருக்கின்றார்.

## நரிவிருத்தம்

சீவகசிந்தாமணியின் ஆசிரியராகிய திருத்தக்கத்தேவரின் 'நரிவிருத்தம்' காப்பு 1, நூல் 50 ஆக 51 பாடல்களாலானது. இவற்றுள் நரியின் கதையைக் கூறும் பாடல்கள் எட்டு. ஏனையவற்றில், இக்கதையை ஆதாரமாகக் கொண்டு நீதிகளும் அந்நீதிகட்கேற்ற பல கதைகளும் கூறப்பெற்றுள்ளன. இந்நூலுள் 18 நீதிக்கதைகள் இடம்பெற்றுள்ளன. அவை முழுவதும் சைன மதம் தொடர்பானவை யாகும். யாக்கை, செல்வங்களது நிலையாமையும், பொய் கொலை களவு கள் காமம் என்பவற்றால் அழிந்தவர் கதைகளும், அவையின்றி உயர்ந்தோர் கதைகளும், யதி தர்ம சிராவக தர்மங்களது பெருமையும் பிற தர்ம விஷயங்களும் இதனுள் அடங்கியுள்ளன.

நரிவிருத்தம் என்பது நரியைப் பற்றிய பாடல்களாலானதொரு நூல் எனப் பொருள்படும். இக்கதை, "தினைப்புனத்தை யழித்த யானையும் யானையை யெய்த வேடனும் வேடனைக் கடித்த பாம்பும் ஒருசேர இறந்து கிடந்ததனில் பக்கத்தே கண்டிருந்த ஒரு நரி மிக்க மகிழ்ச்சியுடன் 'ஆ நமக்கு நிரம்பவும் உணவு குவிந்து விட்டன. யானை ஆறுமாதத்துக்கும் வேடன் ஏழு நாட்கும் நாகம் ஒரு நாட்கும் ஆகாரமாகும்' என்று பலவாறு நினைந்து அப்பிணங்களின் அருகே வந்து முதலில் வீழ்ந்து கிடக்கும் வேடன் கை வில்லின் குதைவரை கடித்துண்ணத் தொடங்கவும் அவ்வாரறுந்து போக வில்லு விசையாக நிமிர்ந்து, கடித்த நரியின் வாய்க்குட் கோத்துக் கொண்டமையால் நரியும் விரைவிற் செத்தது" (முன்னுரை, செந்தமிழ் தொகுதி 6, பகுதி 11, 1907) என்பர்.

இந்நூல் 1907ஆம் ஆண்டு செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் வெளியிடப்பெற்றுள்ளது. பின்னர் இவ்விதழ்ப் பதிப்பு செந்தமிழ்ப் பிரசுரம் 21ஆவதாக 1907, 1920ஆம் ஆண்டுகளில் முறையே முதல் மற்றும் இரண்டாம் பதிப்பாக வெளிவந்துள்ளது. இதற்குப் பிறகு ஆறுமுகஞ்சேர்வை விளக்க உரையுடன் 1923ஆம் ஆண்டு சைன இளைஞர் மன்ற வெளியீடாக வெளிவந்துள்ளது.

## பாண்டிமண்டல சதகம்

மதுரை ஐயம்பெருமாளின் 'பாண்டிமண்டல சதகம்' காப்பு 2, அவையடக்கம் 1, நூல் 100 கட்டளைக்கலித்துறையாலானது. பாண்டிமண்டலத்தின் வைபவத்தைக் கூறும் இந்நூல் முழுமையும் கிடைக்கவில்லை. கிடைத்தவரை தெளிவான 36 பாடல்கள் மட்டும் செந்தமிழ் இதழில் 1921ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றிருக்கின்றன. அதன்பிறகு நூல் முழுமையையும் ஸ்ரீகாழிக் கண்ணுடைய வள்ளல் சந்தானத்து ஸ்ரீமுத்துச்சட்டைநாத வள்ளல் பல பிரதிகளைக் கொண்டு பரிசோதித்துத் தர ப. அ. முத்துத்தாண்டவராய பிள்ளையால் 1932ஆம் ஆண்டு சீர்காழி ஸ்ரீஅம்பாள் பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

## பெருந்தொகை

தொல்காப்பியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களின் பழைய உரைகளினின்றும், முற்காலத்தவும் பிற்காலத்தவுமான இலக்கிய உரைகளினின்றும் தனிப்பாடல்களாக ஏட்டுப்பிரதிகளிலும் இதழ்களிலும் வாய்மொழியிலும் சிலாசாசனங்களிலும் கிடைத்த 2215 பாடல்களின் தொகுப்பாகப் 'பெருந்தொகை' அமைந்துள்ளது. இது, கடவுள் வாழ்த்து, அறவியல், பொருளியல், இன்பவியல், ஒழிபியல் என்ற ஐந்து இயல்களைக் கொண்டது. இந்நூற்குப் பின்னிணைப்பாக ஒவ்வொரு பாடலுக்கும் 'விசயசூசிகை' அமைந்துள்ளது. இத்தொகையைச் செய்தவர் மு.இரா.

"இந்நூற் பாடல்கள் பழைய உரைகளிலே மேற்கோளாக ஆளப்படும் பாடல்களில் பெரும்பாலும் இப்போது அச்சேறிய நூல்களில் இருக்கின்றவையாக அமைந்துள்ளன. இவையன்றி, உரைகாரர் காலத்து வழங்கி, இப்போது பெயர் தெரியாத நூல்களினின்று உதகரிக்கப்பட்ட செய்யுட்களும் பலஉள. இவற்றுள் வெளிவந்த நூற்பாடல்களை விடுத்து, இன்னநூலென்று தெரியாத உதாரணச் செய்யுட்களும், உரையாளர்களாற் பெயர்கூறி ஆளப்பட்டு இப்போது கிடைத்தற்கரியவாயுள்ள பாரதம், தகடூர்யாத்திரை, ஆசிரியமாலை, முத்தொள்ளாயிரம் போன்ற நூற்பாடல்களுமே இதனுள் தொகுக்கப் பட்டுள்ளன. இவையன்றிப் பேரரசர், சிற்றரசர், வள்ளல்கள், பெரியோர் முதலியவரைப் பற்றியும் தமிழ்நாட்டின் நிலைமை நிகழ்ச்சிகளைப் பற்றியும், உள்ள பழம்பாடல்களைப் பலவிடங்களினின்றுந் திரட்டி முறைப்படுத்தியுள்ளேன்" என்னும் மு.இரா. கூற்று (முன்னுரை, செந்தமிழ் 33:4, 1936) இந்நூலமைப்பை விளக்குவதாக உள்ளது.

இந்நூல் 1923ஆம் ஆண்டு முதல் 1936ஆம் ஆண்டுவரை வெளிவந்த செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் தனிப்பக்க எண்ணுடன் வெளிவந்துள்ளது. பின்னர் இவ் இதழ்ப்பதிப்பு 1936ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பிரசுரம் 62ஆவதாக வெளிவந்துள்ளது. இதனையடுத்து இதிலுள்ள முதல் ஐம்பது பாடல்களுக்குச் சீ. ஆழ்வாரையங்கார் உரையுடன் 1969ஆம் ஆண்டு செந்தமிழ்ப் பிரசுரம் வெளியிட்டுள்ளது. பின்னர் இவ் ஐம்பது பாடல்களுக்கு இரா. இளங்குமரன் உரையுடன் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1974ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது.

### விக்கிரம சோழனுலா

ஒட்டக்கூத்தரின் 'விக்கிரம சோழனுலா' நூற்பயன் 1, உட்பட 343 கண்ணிகளாலானது. விக்கிரமசோழன் உலாச் சிறப்பை விவரிக்கும் இந்நூல் கலிவெண்பாவாலாகியது. இது, அரசன் உலாவைக் கண்ட பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகை மகளிர் நிலைகளை விளக்குகின்றது. எழுவகை மகளிர் உருவ அழகையும் அவர்தம் உள்ளத்தில் எழுந்த காதலுணர்ச்சியையும் இவ்வுலாச் சித்திரிக்கின்றது.

இந்நூலை மு. இரா. 1909ஆம் ஆண்டு செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் தனிப்பக்க எண்ணுடன் வெளியிட்டுள்ளார். பின்னர் இவ் இதழ்ப் பதிப்பு செந்தமிழ்ப் பிரசுரம் 23ஆவதாக 1914, 1915ஆம் ஆண்டுகளில் முறையே முதல் மற்றும் இரண்டாம் பதிப்பாக வெளிவந்துள்ளது. இந்நூல் மூவருலாப் பதிப்புகளில் இடம் பெற்றிருக்கக் கூடியது. பண்டித அ. கோபாலையர் 1926ஆம் ஆண்டு அடையாறு கலாக்ஷேத்திர வெளியீடாகப் பழைய உரைக்குறிப்புடன் ஆன பதிப்பு, எஸ். கலியாணசுந்தரம் ஐயர் (1946) பதிப்பு, திருமதி ருக்மணி தேவி (1952)யின் இரண்டாம் பதிப்பு என மூவருலாப் பதிப்புகள் வெளிவந்துள்ளன. இப்பதிப்புகளுக்குப் பிறகு சங்குப்புலவரின் உரையுடன் 1971ஆம் ஆண்டு சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் இந்நூலைத் தனியாக வெளியிட்டுள்ளது.

## 2. இதழ்ப் பதிப்பிற்கு முன்–பின் தனிநூற்பதிப்பு

இதழ்ப் பதிப்பாக வெளிவருவதற்கு முன்னும் பின்னும் தனிநூற்பதிப்பாக வெளிவந்தவை 'இதழ்ப்பதிப்பிற்கு முன்-பின் தனிநூற் பதிப்பு' எனலாம். இதழ்ப்பதிப்பிற்கு முன்னர் வெளிவந்ததாயினும் இதழில் வெளிவந்தவை திருத்தப்பதிப்பாகவும், மூலச்சுவடியை அடிப்படையாகக் கொண்ட பதிப்பாகவும்

அமைந்திருப்பதைக் காணமுடிகின்றது. இம்முறையில் மு. இரா. செந்தமிழ் இதழில் திருக்கலம்பகம், தொட்டிக்கலைக் கேசவப் பெருமாள் இரட்டை மணிமாலை ஆகிய இரண்டு சுவடிப் பதிப்புகள் வெளியிட்டுள்ளார்.

## திருக்கலம்பகம்

உதீசித்தேவரின் 'திருக்கலம்பகம்' 110 செய்யுட்களாலானது. அருகக்கடவுள் வழிபாடு, சமண சமயக் கோட்பாடு போன்றவற்றை இயம்பும் இந்நூல் கலம்பக இலக்கணங்களையும் எடுத்தியம்புகின்றது. இந்நூலின் மூலம் மட்டும் திருவேங்கடமுதலியாரால் 1883ஆம் ஆண்டு பாகுபலிநயினாரின் இயற்றமிழ் விளக்க அச்சுக்கூடத்தில் அச்சிடப் பெற்றுள்ளது. இந்நூலுக்கு அனந்தகவி என்பார் பொழிப்புரை, பதவுரை என இருவேறு உரைகள் செய்திருக்கின்றார். இவற்றில் பொழிப்புரையை மு.இரா. 1907-08ஆம் ஆண்டு செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் வெளியிட்டுள்ளார். பின்னர் இவ் இதழ்ப்பதிப்பு செந்தமிழ்ப் பிரசுரமாக 1911, 1951ஆம் ஆண்டுகளில் முறையே முதல் மற்றும் இரண்டாம் பதிப்பாக வெளிவந்துள்ளது. திண்டிவனம் ஆ. பழனிச்சாமி சிவாசாரியார் 1951ஆம் ஆண்டுக்குப் பிறகு ஒரு பதிப்பைக் கொணர்ந்துள்ளார். 1955ஆம் ஆண்டு தஞ்சை ஆ. சக்ரவர்த்தி நயினார் மகளின் திருமண வெளியீடாகவும், 1995ஆம் ஆண்டு தன்யகுமார் உரையுடனும் இந்நூல் மறுபதிப்புகளாகி இருக்கின்றது.

## தொட்டிக்கலைக் கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை

தொட்டிக்கலை ஸ்ரீசுப்பிரமணிய முனிவரின் 'தொட்டிக்கலைக் கேசவப்பெருமாள் இரட்டை மணிமாலை' காப்பு வெண்பா 1, நூல் 20 (வெண்பா, கலித்துறை என முறையே அமைந்தது) பாடல் களாலானது. இந்நூல் தொட்டிக்கலையில் கோயில் கொண்டிருக்கும் கேசவப்பெருமாள் மீது பாடப்பெற்றதாகும். முனுசாமி முதலியார் 1892ஆம் ஆண்டு பதிப்பித்த 'தொட்டிக்கலைச் சுப்பிரமணியர் பிரபந்தங்கள்' என்னும் தொகுப்பு நூலில் இதுவும் ஒன்றாகத் திகழ்கின்றது. அடுத்து மு. இரா.வால் 1906, 1929ஆம் ஆண்டுகளில் முறையே முதல் மற்றும் இரண்டாம் பதிப்புகள் வெளிவந்துள்ளன. அடுத்து 1953ஆம் ஆண்டு திருவாவடுதுறை ஆதீனம் வெளியிட்ட 'தொட்டிக்கலை மதுரகவி ஸ்ரீசுப்பிரமணிய முனிவர் பிரபந்தங்கள்' எனும் தொகுப்பு நூலிலும் இந்நூல் இடம்பெற்றுள்ளது.

## II படைப்பு

மகாவித்துவான் மு. இராகவையங்கார் செந்தமிழ் இதழ் வழியாக வெளியிட்ட படைப்புகளை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை,

1. வாழ்த்துப்பா, 2. இரங்கற்பா

என்பனவாகும். வாழ்த்துப்பா என்ற நிலையில் சண்முகநாத சேதுபதியின் 35ஆவது வெள்ளி விழாவின்போது பாடிய 5 பாடல்கள்; இரங்கற்பா என்ற நிலையில் மஹாராஜா ஸ்ரீராஜராஜேசுவர சேதுபதி மறைவு குறித்துப் பாடிய 10 பாடல்கள் மகாமகோபாத்தியாய உவே. சாமிநாதையர் மறைவு குறித்துப் பாடிய 20 பாடல்கள் என்பன முறையே 1943, 1926, 1942, 1946ஆம் ஆண்டுகளில் செந்தமிழ் இதழ்ப் பகுதிகளில் வெளிவந்திருக்கின்றன. மு.இரா. கவித்திறனுக்குச் சான்றாகச் சில பாடல்கள்.

இராமநாதபுரத்து ஸ்ரீராஜமாந்ய சண்முகநாத சேதுபதி
வேந்தரவர்களது 35ஆவது ஆண்டுவிழா

### வாழ்த்துப்பா

மூவேந்தர் தங்கள்பின் முத்தமிழ்ப் பைங்கொடி மூண்டுபடர்
தேவேந்தர் தாருவென் றான்றோர் புகழ்ந்த திருக்குலத்தே
கோவேந்தன் சண்முக ராஜேசப் பூம்பணை கோலமுடன்
பாவேய்ந்த நாண்மங் கலத்திற் றழைத்துப் பலித்ததுவே. (1)

ககராஜ கேதன காமா இரணிய கர்ப்ப யஜ்ஞ
ரகுநாத வம்ச ரவிகுல தீப நயசகுணா
ஜெகராஜ சேகர சண்முக ராஜேந் திரமுகவை
மகராஜ ஸேது மகிபால வூழியும் வாழியவே. (2)

மஹாராஜா ஸ்ரீராஜராஜேசுவர சேதுபதி மீது சரமகவி

மதிபுக்க திருமுகத்தான் மகிழ்ந்தேற்கு முபசரிப்பும் மதுர வாக்கால்
எதிபுக்க பாடல்பல வின்னிசையிற் பன்னழகு மேற்பக் கூறுநீ
துதிபுக்க சொன்னயமுஞ் சூழ்திறமும் ஆழ்மதியுந் தோன்றா வென்றும்
பதிப்புக்குன் பாற்காண்பேன் விதிபுக்கவா வின்று பாரா வாறே.

மகாமகோபாத்தியாய உ.வே. சாமிநாதயைர் மீது இரங்கற்பா

பாவாழ்ந்த சங்கத்தார் பலருருவும் ஒருருவாய்
நீவாழ்ந்தாய் உன்காலம் நெடுஞ்சங்க காலமெனப்

பூவாழ்ந்து தமிழகத்தைப் புதுக்கியநீ பொன்னுலகம்
சாவாழ்ந்து சென்றதென்னோ சாமிநா தேந்திரனே. (1)

தொண்டிழைத்துப் பாடிநனி துதித்தவடி யார்தம்மைப்
பண்டழைத்துக் கொண்டருளுங் கயிலைப் பரம்பரன்றான்
மண்டழைத்த நற்கீர்த்தி மான்சாமி நாதனையும்
தண்டழைத்த தாணிழற்கீழ்ச் சாந்திபெற வைத்தனனே. (2)

மகாவித்துவான் ரா. இராகவையங்கார் மீது இரங்கற்பா

கல்விக் கடலே! கவிசேகர! சொல்லின்
செல்வப் பெருமானே சீராகவ! உன்னைக்
கொல்வித் ததுமுடக் கூற்றம் அஃதுனது
சொல்வித் தகத்தின் சுவையறிய வல்லதுவோ. (1)

கீதை மொழிபெயர்த்தான் கேடில் புகழ்க்காசி
தாதனார் சாகுந் தலத்தைத் தமிழ்செய்தான்
சீதகல எம்மான் திருவடிமேற் பாமாலை
ஓதியே யுய்ந்தான் உரைத்தான் தொழிற்சிறப்பே. (2)

சின்ன வயதுமுதற் சீராகவ! நீசெல்
நன்னெறியே சென்றுநலம் படைத்தேன் நாடறிய
'என்னருமை யம்மான்சேய்' என்றெனையும் போற்றினையால்
பின்னமுற என்னோ பிரிந்திங் ககன்றாயே. (3)

## III ஆய்வு

மகாவித்துவான் மு. இராகவையங்கார் பதிப்பு, படைப்பு ஆகியவற்றில் காட்டிய ஈடுபாட்டைவிடப் பல்வேறு வகையான ஆய்வுகளிலேயே ஆழ்ந்திருக்கின்றார் என்பது செந்தமிழ் இதழில் வெளிவந்த அவர்தம் ஆய்வுக் கட்டுரைகளை நோக்குவார்க்கு எளிதில் புலனாகும். செந்தமிழ் இதழில் அவர்தம் ஆய்வு,

அ. இலக்கிய ஆய்வு, ஆ. இலக்கண ஆய்வு, இ. பெயராய்வு, ஈ. வரலாற்றாய்வு

என்ற நிலைகளில் பரந்து செல்கின்றது.

### அ. இலக்கிய ஆய்வு

செந்தமிழ் இதழில் மு. இரா. இலக்கிய ஆய்வை ஆறு நிலைகளாகப் பகுத்துக் காணலாம். அவை,

1. நூலாய்வு, 2. நூலறிமுகம், 3. பாடவேறுபாடு, 4. வானொலி உரை, 5. மறுப்புரை, 6. உரை

## 1. நூலாய்வு

அருச்சுனனும் பாண்டியன் மரபும், கண்ணபிரானைப் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள், மார்கழி நோன்பாகிய தைந்நீராடல், வீரத்தாய்மார், வேள்-பேகன் என்ற நிலையில் வெளிவந்திருக்கின்றன. சான்றிற்கு ஒரு நூல் காண்போம்.

### வேள் – பேகன்

வேள் - பேகன் என்பவன் வேளிர் தலைவருள் ஒருவனான ஆவியின் குடியிலுதித்த பெருந்தகையாவான். இவனை வையாவிக்கோப்பெரும்பேகன் எனவும் வழங்குவர். கடைச்சங்க நாளில் விளங்கிய கடையேழு வள்ளல்களில் இவனும் ஒருவன். இவன் மனைவி கண்ணகி. இவன் வாழ்வில் பரத்தை ஒருத்தி குறுக்கிடு கின்றாள். இதனால் கண்ணகியின் வாழ்வு கோவலன் - கண்ணகி வாழ்வு போல் ஆகின்றது. இதைக் கண்ட அரிசில் கிழார் மற்றும் பெருங்குன்றூர்க்கிழார் ஆகிய புலவர்கள் பேகனையும் கண்ணகியையும் சேர்த்து வைப்பதற்கு முயல்கின்றனர். இச்செய்திகளைப் புறநானூறு 143, 144, 145, 146, 147 ஆம் பாடல்கள் விளக்குகின்றன. இப்பாடல்களை எடுத்துக்காட்டியுள்ள மு.இரா. இப்பேகனின் கொடைச்சிறப்பைப் பரணர் கூற்றாக,

"குளத்திலும் வயலிலும் களர்நிலத்தும் ஒப்பப்பெய்யும் வரையறையில்லாத மாரிபோலப் பேகனும் கொடையிடத்துத் தான் அறியாமைப் படுவதல்லது பிறர்படைவந்து பொரும்போது அப்படையிடத்துத் தான் அறியாமைப்படான்"

என்றும், மயிலுக்குப் போர்வை தந்ததைப் பரணரின் புறநானூற்றுப் பாடல்களிலும் (141, 145) இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனாரின் சிறுபாணாற்றுப்படையிலும் (84-87 வரிகள்) விளக்கிச் செல்கின்றனர் என்றும், முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும் தந்ததை ஐயனாரிதனார்,

"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத் – தொல்லை
இரவாம லீந்த இறைவர்போ னீயுங்
கரவாம லீகை கடன்"

எனும் பாடலாலும் இவனைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருக்கின்றன என்றும் கட்டிக்காட்டி (செந்தமிழ் 11:2, 1912) விளக்கிச் செல்கின்றார்.

## 2. நூலறிமுகம்

கருமாணிக்கன் கோவை எனும் கப்பற் கோவை, நரிவிருத்தம் ஆகியவை நூலறிமுகம் என்ற நிலையில் வெளிவந்திருக்கின்றன.

கப்பற்கோவையின் பாட்டுடைத்தலைவன் கருமாணிக்கன் என்னும் சிற்றரசன் ஆவான். இவன் பாண்டிய நாட்டிலுள்ள கப்பலூர்,துறை என்னும் ஊர்களிலிருந்து ஆட்சி புரிந்தவன், யாதவ குலத்தவன்; தொண்டைமான் என்ற பட்டப்பெயர் பெற்றவன் ஆவான். இக்கருமாணிக்கனைப் படைத்தலைவனாகக் கொண்ட பாண்டியன் யார் என்பது துணிய இடமில்லை. என்றாலும் கருமாணிக்கன் வரலாறுகளில் வடவரசரை வென்றது, கன்னடர் நாடு கவர்ந்தது, காடவர்மன் கொண்டது என்னும் வீரச்செயல்களை நோக்கும்போது கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்த ஜடாவர்மன் - சுந்தரபாண்டியன் இவன் தலைவனாயிருக்கக் கூடும் என்ற கருத்தை மு.இரா. இக்கட்டுரையில் முன் வைக்கின்றார்.

மேலும், இலக்கண விளக்கம் அகத்திணையுரையுள் இந்நூலின் எட்டுப் பாடல்கள் இடம்பெற்றிருப்பதையும் சுட்டிக் காட்டியிருக்கின்றார். இதனால் இந்நூல் இலக்கண விளக்கத்திற்கு முற்பட்டதாகலாம் என்றும் இந்நூலின் காலத்தை வரையறுக்கின்றார்.

இந்நூல் தனிநூலாக வெளிவர இருப்பதால் சுருக்கமான முறையில் சிலவற்றை மட்டும் செந்தமிழ் இதழில் தொகுதி 6இல் வெளியிட்டிருக்கின்றேன் என்றும், பின்னர் இந்நூல் சுவடி அழிந்துபடவே செந்தமிழ் வெளியீடாக வெளிவரவில்லை என்றும் கூறுகின்றார். (சிலவாண்டுகட்குமுன் மதுரைத் தமிழ்ச் சங்க மாளிகையில் நேர்ந்த அக்கினியுபாதையால் எரிவாய்ப்பட்ட சுவடிகளுள், இக்கருமாணிக்கன் கோவையும் ஒன்று என்ற செய்தி யாவர்க்கும் பெருந்துக்கம் விளைக்கத்தக்கது. அதனால், இக்கோவையுள் மேலே யானெழுதிய பாடல்களுந் தொடர்களுமே இப்போது எஞ்சியுள்ளவை என்று சொல்லலாம். ஒருகால், இக்கோவைப்பிரதி வேறிடங்களில் உண்டாயின், அறிஞர் அதனை வெளியிட முந்துவார்களென்றே நம்புகின்றேன் - ஆராய்ச்சித் தொகுதி, ப. 459)

மு.இரா.வின் இக்கூற்றுக்குப் பிறகு உ.வே.சா. சுவடித் தொகுப்புள் இந்நூல் இருப்பதைக் கண்ட ஸ்ரீநிவாஸன் 1958ஆம் ஆண்டு உ.வே.சா. நூலக வெளியீடாக இந்நூலைப்

பதிப்பித்திருக்கின்றார். ஆக, ஒரு நூல் பதிப்புக்கு இவர்தம் ஆய்வுக்கட்டுரை மூலாதாரமாக விளங்கியது என்றால் அதுமிகையல்ல.

## .3. பாடவேறுபாடு

அருளிச்செய்த பாடவமைதி, கலிங்கத்துப்பரணியாராய்ச்சி ஆகியன பாடவேறுபாடு என்ற நிலையில் வெளிவந்திருக்கின்றன.

### அருளிச்செய்த பாடவமைதி

நாலாயிரதிவ்விய பிரபந்தத்திற்குப் பலர் உரைவரைந்திருக்கின்றனர். அவ்வுரைகள், முன்னோரின் பாடங்களைப் பொன்னே போல் போற்றி அப்படியே ஏற்று மறுப்பின்றி வெளிவந்திருக்கின்றன. இப்பதிப்புகளில் பாடவேறுபாடுகள் மலிந்திருப்பதைக் கண்ட மு.இரா. அவற்றில் சிலவற்றை விளக்கும் முகமாகவும் பாடவேறுபாட்டைக் களையும் முகமாகவும் இக்கட்டுரையை அமைத்துள்ளார். அவர் மேற்கொண்ட பாடவேறுபாடுகள் பின்வருமாறு:- (முதற் பாடம் முன்னைப் பதிப்புகளில் காணப்படக்கூடியது. அடுத்த மு. இரா. பாடம்)

| | | |
|---|---|---|
| கேசவ நம்பி பிறந்தனில் | - பிறந்தினில் | (பெரி. திரு. முதற்பத்து) |
| பிள்ளை பிறந்தனில் | - பிறந்தினில் | (மேற்படி) |
| ஓசலிக்கும் | - ஓசனிக்கும் | (பெரிய. திரு. 4ம்பத்து முதல் பாடல்) |
| பாடுகாவலிடுமின் | - பாடிகாவலிடுமின் | (பெரி. திரு. 3:7) |
| அரவதண்டம் | - அறவதண்டம் | (பெரி. திரு. 4-5ஆம் பத்துகள்) |
| அதில் நாயகர் | - மதில் நாயகர் | (பெரி. திரு. 9:4) |
| குழற்கற்றை | - குழக்களிற்றை | (இயற்பா, 2:53) |
| நறவேற்றான் | - நரையேற்றான் | (பெரிய. 3:31) |
| பல்லவன் | - வல்லவன் | (பெரிய. 2:9:1) |
| பஞ்சியமெல்லடி | - பஞ்சிமெல்லடி | (பெரிய. 3:4:4) |
| விண்ணணி | - வெண்ணணி | (பெரிய. 6:6:4) |
| விளைந்தவேளை | - விளந்தவேளை | (பெரிய. 6ஆம் பாசுரம்) |
| அஞ்சலோதி | - அஞ்சிலோதி | (பெரிய. 10:2:4) |
| பிறவிக்கள் | - பிறவிக்கண் | (பெரிய. 11:8-3; 6:10; 4:10:6) |
| திருவடிக்கள் | - திருவடிக்கண் | (மேலது) |

## கலிங்கத்துப்பரணியாராய்ச்சி

தமிழ்ப் பண்டிதர் அ. கோபாலையரின் கலிங்கத்துப்பரணிப் பதிப்பு நான்காவதாக வெளிவந்திருக்கின்றது. இவருக்கு முன் மூவர் இதனைப் பதிப்பித்திருக்கின்றனர். இந்நான்கு பதிப்புகளிலும் படிப்படியே பாடவேறுபாடுகள் திருத்தம் செய்யப்பெற்றிருப்பினும் மேலும் திருத்தம் பெறவேண்டிய பாடங்களை மு. இரா. எடுத்துக் காட்டி அவற்றின் உண்மைப் பாடங்களை இக்கட்டுரை வழியாக வெளிப்படுத்தி யிருக்கின்றார்.

"மீனம்புகு கொடிமீனவர் விழியம்புக வோடிக்
கானம்புக வேழம்புகு மடவீர்கடை திறமின்"

என்பது சிறைப்பிடிக்கப்பட்ட மகளிர் பற்றிக் கூறுகின்றது. இங்கு வேழம்புகு, வேனம்புகு என்பனவற்றில் வேறுபட்ட மு.இரா. வேளம்புகு என வருதல் பொருத்தமுடையது என்கின்றார்.

"தொழுது மன்னரே கரைசெய் பொன்னியிற்
றொடர வந்திலா முகரி யைப்படத்
தெழுது சென்றுகண் டிவைமிகைக்கணென்
றிங்க ழிக்கவே யங்க ழிந்ததும்" (184)

என்பது கரிகாலன் காவிரிக்கரை கட்டிய வரலாற்றைக் கூறுகின்றது. இதில் இதுமிகைக்கண், இவை மிகைக்கண்' என முன்பதிப்புகளில் இடம்பெற்றதை இவர் 'இவைமிகைக்கண்' என்பதே சரியான பாடம் என்கின்றார்.

அபயன் பரிவேட்டைக்குப் புறப்பட யானைமீது ஏறியபோது அவனுடன் விளங்கிய தேவியைக் குறிக்கும் இடத்தில்,

"வாழி சோழகுல சேகரன் வகுத்த விசையின்
மதுர வாரியென லாகுமிசை மாதரிதெனா
ஏழு பாருலகொ டேழிசை வளர்க்க வுரியான்
யானை மீதுபிரி யாதுட னிருந்து வரவே"

என்று பாடுகின்றார். இவற்றில் 'உரியான்' என்பது 'உரியாள்' என்று இருத்தலே பொருத்தமான பாடம் என்கின்றார்.

"முறையி டத்தரு மந்திர வோலையாண்
முன்வணங்கி முழுவதும் வேந்தர்தம்"

என்பதில் 'திருமந்திரவோலையாள்' என்றிருக்க வேண்டிய பாடம் 'தருமந்திரவோலையாள்' என்றிருக்கின்றது என்கின்றார்.

'தண்ணார் மலர்சேர் திரடோ ளபயன்
தானேவிய சேனை தனக்கடையக்
கண்ணாகிய சோழ னிசக்கரமாங்
கருணாகரன் வாரண மேற்கொளவே" (350)

என்ற பாடலில் 'சோழனசக்கிரமாம், சோழனிசக்கரமாம்' போன்ற பாடங்கள் பயிலப் பெற்று வருகின்றன. ஆனால் 'சோழனசக்கிரமாம்' என்னும் பாடமே சரியானது என்கிறார்.

'தளத்தொ டும்பொரு தண்டெழப் பண்டொர்நாள்
அளத்திற் பட்ட தறிந்திலை யையநீ" (378)

என்பதில் 'அளத்திற்பட்டது' என்பது 'அளத்திபட்டது' என்றிருக்க வேண்டும் என்று கூறுகிறார். இதுபோல் பல்வேறு இடங்களில் இந்நூற் பாடவேறுபாடுகளைப் பரவலாகக் காட்டிச் செல்கின்றார்.

## 4. வானொலி உரை

சிலப்பதிகார வழக்கவொழுக்கங்கள், பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி, மதுரைக்காஞ்சி, வில்லிபுத்தூரார் காட்டிய வீரநெறிகள் ஆகியவை திருச்சி வானொலியில் இலக்கியச் சொற்பொழிவாக ஒலிபரப்பப்பெற்றன. இச்சொற்பொழிவுகள் பின்னர்ச் செந்தமிழ் இதழில் வெளிவந்திருக்கின்றன.

### சிலப்பதிகார வழக்கவொழுக்கங்கள்

கோவலன் - கண்ணகி வரலாற்றைக் கூறும் நூலாகச் சிலப்பதிகாரம் விளங்கினாலும் இந்நூலிற்குள் இடம்பெற்றிருக்கும் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் ஆகிய நிலப்பாகுபாட்டின் படி அமைந்த நில ஒழுக்கங்களைப் பற்றியும்; அந்நிலத்தில் வாழும் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் ஆகிய நால்வகை வருணத்தவர் பற்றியும் பாமரரும் எளிதில் உணரும் வகையில் 6.8.1943இல் திருச்சி வானொலியில் உரையாற்றிய மு. இரா. அப்பொழிவினை 1943ஆம் ஆண்டு செந்தமிழ் இதழிலும் வெளியிட்டுள்ளார்.

### பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை முதன் முதல் அறிவித்த நூல் புறநானூறு. அந்நூலின் தொடக்கப் பாண்டியரில் முதலாவதாக நிற்பவன் இவனது தந்தை 'கருங்கை யொள்வாட் பெரும்பெயர்வழுதி' ஆவான். முதுகுடுமிப்பெருவழுதி பல யாகங்கள்

புரிந்தவன் என்பதும், முதுகுடுமி என்பதனால் அந்த யாகத்திற்குரிய மயிர்முடியை நெடிது வளர்த்திருந்தவன் என்பதும் அறியலாம். இம்முதுகுடுமியின் காலத்தவராய் இவனால் பரிசுபெற்ற புலவர்கள் மூவர். காரிக்கிழார் (புறம். 6), நெட்டிமையார் (புறம். 9, 12, 15), நெடும்பல்லியத்தனார் (புறம். 64) போன்றோராவர். இம்மூவரின் பாடல்களிலிருந்து, 'பஃறுளி என்ற நதி இவன் காலத்தில் இருந்ததென்றும், பழைய பாண்டியனொருவனால் அஃது உண்டாக்கப்பட்டது என்றும் தெரியவருகின்றன. இந்த நதி குமரியாற்றோடு கடல்கொள்ளப்பட்டதென்று கூறுவர் இளங்கோவடிகள். ஆனால், தென்பாண்டியின் கோடியில் உள்ள ஆய்நாட்டில் பறளியாறு என்ற நதியொன்று உண்டு. இது, திருவாங்கூர்ச் சாஸனத்தாலும் இப்போதை வழக்காலும் அறிந்தது. பறளி என்பது, பஃறுளி என்பதன் திரிபே. பலதுளி பெருவெள்ளமாய் ஓடும் காட்டாறுகள் சிலவும் இப்பெயர் பெற்றுள்ளன. தென்திருவாங்கூர்ச்சீமையில் உள்ள இப் பறளி என்ற பஃறுளியே நெட்டிமையார் கூறியதாயின், பழைய கடல்கோளால் இந்த நதியின் கடலோரத்து முனைப்பகுதியே அழிபட்டதாக வேண்டும். இவ்வாறு சரித்திரப்பிரசித்தனான சங்க காலத்துப் பாண்டிய முன்னோன் ஒருவனது வரலாறுகள் சுருக்கமாகத் தெரிய வருகின்றன" (செந்தமிழ் 40:3, 1943) என்கின்றார். இக்கருத்தினை மு. இரா. 5.2.1943இல் திருச்சி வானொலியில் உரையாற்றியிருக்கின்றார். அதன் பிறகு அச்சொற்பொழிவினை 1943ஆம் ஆண்டு செந்தமிழ் இதழில் வெளியிட்டிருக்கின்றார்.

## மதுரைக் காஞ்சி

வீடுபேறு பெறுவதற்குத் தேவையான நிமித்தங்களையும், பலவகை நிலையாமைகளையும் அரசர்க்கு எடுத்துரைப்பது மதுரைக்காஞ்சி. காஞ்சி என்பது உலகம் நிலையற்றதென்பதைக் கூறும் ஒரு தமிழ்த்திணை. இத்திணைப் பொருளை மதுரையோடு இணைத்து நெடுஞ்செழியனுக்குப் புலவர் கூறியதே இந்நூல். இதன் சிறப்புகளையெல்லாம் மு. இரா. 14.8.1942இல் திருச்சி வானொலியில் உரையாற்றியதை 1943ஆம் ஆண்டு செந்தமிழ் இதழிலும் வெளியிட்டுள்ளார்.

## வில்லிபுத்தூரரார் காட்டிய வீரநெறிகள்

வில்லிபாரதம் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகை உறுதிப் பொருளையும் விளக்கவல்லது. அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருளையும் அறநிலை, மறநிலை என்ற இருவகையால்

அடக்குகின்றார். அறநிலையாவது, சாந்தமான முறை என்றும்; மறநிலையாவது வீரமடியாக நிகழும் முறை என்றும் விளக்குகின்ற மு. இரா. வீடுபேறு பெறுதற்கு அறநிலையே போதும் என்பதில்லை மறநிலையும் வேண்டும் என்கிறார். மேலும் மறநிலையாவது,

"ஆனிரை மீட்டல் அரும்பகை தெறுதல்
ஊனமில் செஞ்சோ றுதவி யோர்பகை
ஈனஞ்செய்தல்" (திவாகரம்)

என்பர். இம்மூன்று செயல்களையும் வில்லிபாரதம் தெளிவாக விளக்குகின்றது என்பதை மு. இரா. 26.5.1943இல் திருச்சி வானொலியில் உரையாற்றியிருக்கின்றார். இவ் உரைப்பொழிவை 1943ஆம் ஆண்டு செந்தமிழ் இதழில் அதன் பிறகு வெளியிட்டிருக் கின்றார்.

## 5. மறுப்புரை

செந்தமிழ் இதழில் மு. இரா. இரண்டு விதமான மறுப்புரைகள் அளித்துள்ளார். பிறர் கருத்துக்கு மறுத்தெழுதியது. இந்நிலையில் 'ஆழிவடிவம்பலம்ப நின்றானும்' எனும் நளவெண்பாப் பாட்டுரை, சேரவேந்தர் தாயவழக்கு ஆகியனவும்; தாம் எழுதிய கருத்துக்கு மறுப்புரை எழுதியவர்க்கு மறுப்புரை எழுதிய நிலையில் ஆழ்வார்கள் சரித்திரவாராய்ச்சி, பொய்கையார் ஆகியனவும் வெளிவந்திருக் கின்றன. சான்றிற்கு ஒவ்வொன்றைக் காணலாம்.

### நளவெண்பாப் பாட்டுரை

புகழேந்திப் புலவரின் நளவெண்பாவில் 'ஆழிவடிவம்பலம்ப' (பா. 137) எனத் தொடங்கும் பாடல் தமிழ்நாட்டைச் சாராத வேற்றரசன் ஒருவனின் வரலாறு என்பர். இக்கருத்தை மு. இரா. மறுக்கின்றார். இப்பாடல் பாண்டிய மன்னனைப் பற்றிக் கூறுகின்றது என்பதற்குப் 'புறநானூறு 9ஆம் பாடலின் விசேடவுரையிலும், வில்லிபாரதம் 15ஆம் போர்ச்சருக்கம் 18ஆம் கவியிலும், வேம்பத்தூரார் திருவிளையாடலில் 21ஆம் படலத்து 9ஆம் கவியிலும், மதுரைக்காஞ்சி உரையிலும்' இடம்பெற்றிருக்கும் செய்திகளைக் கொண்டு ஆராய்ந்தவர் இப்பாடலும் பாண்டியனுக்குரியதே என்கின்றார். மேலும் நளவெண்பாவின் 135ஆவது பாடலில்,

'பருத்ததோர் மால்வரையைப் பண்டொருகாற் செண்டாற்
றிரித்தகோ இங்கிருந்த சேய்"

என்னும் 3,4ஆம் வரிகள் பாண்டியனைக் குறிப்பிடுகின்றது என்பாரின் கருத்தையும் மறுத்து இவ்வரிகள் கரிகாற்சோழனைக் குறிப்பிடுகின்றன

என்று விளக்குகின்றார். அதாவது, "பாண்டியன் மேருவைச் செண்டா லடித்த கதையைச் சோழனதாகக் கொண்டது பொருந்துமோவெனிற் கூறுவேன்; அவ்வரலாறு பாண்டியனுக்கு வழங்குவதினும் சோழனுக்கே அது பெருவழக்காக உள்ளதாம். கரிகாற்சோழன் என்பான், உலகமுழுதுந் தன்னடிப்படுத்து வரும்போது, இமயமலை 'தன்னொடு எதிர்த்து விலக்குதலின் அதனைப் புறங்காண்டற்கும், அதன் வடபாலும் தனதாணை சேரற்கும் சாத்தனதருளால் தான் பெற்ற செண்டினாலே அதனை அடித்துத் திரித்துப் பொறித்து மறித்து நிறுத்தா' னென்பது கதையாதல் காண்க" (ஆராய்ச்சித் தொகுதி, ப. 471) என்பதால் இவ்வரிகள் சோழனுக்குரியன என்று தக்க சான்றுகளுடன் விளக்கிவிட்டு 137ஆம் பாடல் பாண்டியனுக் குரியதென்று உணர்த்துகின்றார்.

## பொய்கையார்

திருமாலடியாராகிய பொய்கையாரும், களவழி பாடிய பொய்கையாரும் ஒருவரே என்று மு. இரா. எழுதினார். இதற்கு என்.எஸ். ரெங்கசாமி ஐயர் களவழிப் பொய்கையார்க்கும், பொய்கையாழ்வார்க்குமுள்ள பெயர் ஒற்றுமை ஒன்றையே கொண்டு இவ்விருவரும் ஒருவரென்று காட்டுதல் சிறிதும் ஏற்றதன்று என்று மறுத்தெழுதியிருக்கின்றார். நச்சினார்க்கினியர் முதலிய உரையாளர் களால் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் பேசப்பட்ட 'யாப்பருங்கலவிருத்தி' என்னும் பழைய உரைநூலில், பொய்கையாரொருவர் "இம்மை மறுமை முக்காலமுமுணர்ந்த தமிழிருடி" என்று கூறப்படுதலோடு அவர் பாடல்களிற் சிலவும் "இனி பொய்கையார் பாடல்கள் இரண்டு பொய்கையாழ்வார் அருளிய முதல் திருவந்தாதியில் உள்ளன; இது விருத்திகாரர் கருதிய தெய்வப் பொய்கையார் ஆழ்வாரில் முன்னவரே என்பதை விளக்கியதாம். இனி, எஞ்சிய தெய்வப் பொய்கை பாடல்கள் சேரசோழரையும் பிறவற்றையும் பற்றி அமைந்துள்ளது. இஃது ஆழ்வாரே அரசர் முதலியோரையும் பாடினவரென்பதைக் காட்டியதாம். ஆக, ஆழ்வாராகிய ஒரு பொய்கையாரே அரசரையும் பாடியவர் என்று நன்கு விளக்கியதாதலால், களவழியிற் சோழனைப் புகழ்ந்த தன்மையொன்று பற்றி ஆழ்வாரின் வேறான பொய்கையாரொருவரை நாம் கற்பிக்க வேண்டுவது இல்லை என நியாயங்காட்டி அவ்வியாசம் எழுதலாயிற்று என்றவர், யான் அம்முடிவுக்குக் கூறிய காரணங்களை யெல்லாம் ஐயங்காரவர்கள் ஆராய்ந்தவர்களாதலின், என் கொள்கை ஒருகால் அவர்கட்கு ஏற்புடையதாகலாம் என்று தம்முடைய மறுப்புரையை நயமாக எடுத்துரைத்திருக்கின்றார்.

இவரது காலத்தையும் மு. இரா. இக்கட்டுரை வழி நிலைநாட்டுகின்றார். தென்னிந்திய சிலாசாஸன ஆராய்ச்சிப் பத்திரிகை நான்காம் புத்தகத்திற் காணப்படும் யாவருமுண்மை யென்றது கருதற்கரிய சோழவம்சாவளியொன்றில் ஒருவனே செங்கணான் காணப்படுகின்றான். அவன் பெயர் முதலாங் கரிகாற்சோழனுக்குப் பின்னும் கி.பி. 890ஆம் ஆண்டிற் பட்டமெய்திய விஜயாலய சோழனுக்கு முன்னுங் கூறப்பட்டுள்ளது. எனவே, கரிகாலன் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் செழித்து விளங்கினன் என்பதும் தெளியப்படுதலால், சோழன் செங்கணானும் கி.பி. 2ஆம் நூற்றாண்டிற்கும் 6ஆம் நூற்றாண்டிற்கும் இடையில் இருந்தவனாதல் வேண்டுமெனவும் சரித்திரவாராய்ச்சி செய்யும் அறிஞர் கூறுகின்றனர். இக்கூற்றாலும் முற்கால நூல் என்று கருதப்படும் புறநானூற்றில் அவ்வரசன் பெயரும் அப்புலவர் பெயரும் காணப்படுதலாலும் கரிகாற் சோழனுக்குச் சில தலைமுறைக்குப் பிற்பட்ட அவ்விருவரும் இருந்தனரென்றே கொள்ளலாம் என்று முன்னவர்களின் கூற்றை ஆதரித்து இலக்கியச் சான்று காட்டி விளக்கியிருக்கின்றார்.

### 6. உரை

திருவள்ளுவரின் திருக்குறள் 22ஆம் அதிகாரமான 'ஒப்புரவறித'லுக்கு மு. இரா. உரை வரைந்திருக்கின்றார். இவ் உரைப் பகுதி செந்தமிழ் இதழில் வெளிவந்திருக்கின்றது.

மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத லோகோபகாரங்களை அறிந்து செய்தல் என்பதையே ஒப்புரவறிதல் அதிகாரத்து வரும் ஒவ்வொரு குறளும் விளக்கி நிற்கின்றது. செல்வம் வலி முதலியவற்றை ஒருவன் எவ்வளவு சிறப்பாக அடையப் பெற்றவனேயாயினும், பிறருடைய உதவியில்லாதவிடத்து அவன் உலகத்தே தனித்து நின்று இல்வாழ்க்கையில் கிடைக்கும் இன்பத்தை நுகர்தல் ஒருபோதும் இயலாத ஒன்று என்பதைத் திருவள்ளுவர் இவ்வதிகாரத்துள் விளக்குகின்றார். இதிலுள்ள பத்து குறட்கருத்துகளை விளக்குவதாக மு. இரா. இப்பகுதியை அமைத்துள்ளார். காட்டாக,

> "ஒப்புரவி னால்வருங் கேடனி னஃதொருவன்
> விற்றுக்கோட் டக்க துடைத்து"

என்னும் குறளுக்கு மு. இரா. "இவ்வருமைக்குறள் இவ்வதிகாரத்திற்கே ஓர் சிகாமணி என்னலாம். லோகோபகாரஞ் செய்யும் முயற்சியில், ஒருவனுக்கு வருவது கேடு என்பா ருண்டாயின், அக்கேடு, அவன் தன்னை விற்றாயினும் பெற்றுக்கொள்ளும் தகுதியுடையதாம் என்பது இதன் பொழிப்பு. என்றது ஒப்புரவு செய்தலால் ஒருவனடையுங்

கேடு கேடன்று, பேறென்று கருதத்தக்கது என்பதாம்" (ஆராய்ச்சித் தொகுதி, ப. 216) என்கின்றார். இதுபோல் பத்துக் குறட்பாக்களுக்கும் உரை செய்திருக்கின்றார்.

## ஆ. இலக்கண ஆய்வு

தொல்காப்பியனாரும் புள்ளியெழுத்துக்களும், ஆய்தவோசை ஆகிய இரண்டு இலக்கண ஆய்வுகள் செந்தமிழ் இதழில் வெளிவந்திருக்கின்றன.

### தொல்காப்பியனாரும் புள்ளியெழுத்துக்களும்

தொல்காப்பியர் எழுத்துகளுக்கான வரிவடிவம் எப்படியிருக்கும் என்று நூற்பா வகுக்கவில்லை. என்றாலும் உயிர், மெய், சார்பெழுத்தின் தோற்றம் என்ற மூவகைப்பட்ட எழுத்துகளினும் புள்ளிபெறுவன பற்றித் தொல்காப்பியர் கூறி இருக்கின்றார். இவற்றைப் பற்றி மு. இரா. இக்கட்டுரை வாயிலாக விளக்குகின்றார்.

புள்ளிபெறும் மெய்களை, "மெய்யி னியற்கை புள்ளியொடு நிலையல்" (தொல். நூன்மரபு. 15), என்றும்; "மெய்யீ றெல்லாம் புள்ளியொடு நிலையல்" (தொல். நூன்மரபு. 104) என்றும்; புள்ளிபெறும் உயிர்களை "எகர ஒகரத் தியற்கையு மற்றே" (தொல். நூன்மரபு. 16) இதனை எ், ஒ் என்றும்; புள்ளிபெறுஞ் சார்பெழுத்துகளை "அவைதாம், குற்றியலிகரம் குற்றியலுகரம், ஆய்தமென்ற, முப்பாற் புள்ளியு மெழுத்தோரன்ன" (தொல். நூன் மரபு. 2) என்ற நூற்பாப்படி குற்றியலிகரமும் குற்றியலுகரமும் புள்ளி பெறும் என்பதைப் பேராசிரியரும், யாப்பருங்கலம் 2ஆம் சூத்திரமும், சங்கயாப்பும், நன்னூல் விருத்தியாசிரியர் சங்கரநமச்சிவாயப் புலவரும் கூறுகின்றனர் என்றும்; முற்றுகரத்தின் வேறுபாடு தோன்றக் குற்றுகரங்கட்குக் கொக்ு, நாடு், வரகு் என்பன போல் புள்ளியிடுதல் தொல்காப்பியர் வழக்கு என்றும்; குற்றியலிகரமும் புள்ளி பெறும் வண்டி்யாது, நாகி்யாது, கேண்மி்யா என்றும்; ஆய்தம் : என்று வந்தது ஃ என்றாகியது என்றும் விளக்குகின்றார்.

மேலும் புள்ளிபெறும் மகரக்குறுக்கத்தினை, "உட்பெறு ×s ° ÙÚYôÏmúU"BRû ] ம் என்றும்; காலுக்குப் பிரதியாக வழங்கிய புள்ளியினை, "புள்ளியில்லா வெல்லா மெய்யும், உருவுரு வாகி அகரமொ டுயிர்த்தலும், ஏனை யுயிரோ டுருவுதிரிந் துயிர்த்தலும், ஆ ஈர் இயல உயிர்த்தலாறே" (தொல். நூன் மரபு. 17) என்ற நூற்பாப்படி இதற்கு நச்சினார்க்கினியர் "உருவு திரிந்துயிர்த்தலாவது - மேலும் கீழும் விலங்கு பெற்றும்

கோடுபெற்றும் புள்ளிபெற்றும் புள்ளியுங் கோடும் உடன்பெற்றும் உயிர்த்தலாம். கி, கீ முதலியன மேல் விலங்கு பெற்றன. . . . . கா, ஙா முதலியன புள்ளிபெற்றன. அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர் என்றும் விளக்குகின்றார். இவ்வாறு தொல்காப்பியர் கூறிய புள்ளியெழுத்துகள் இவையிவை யென்று எடுத்தோதி இருப்பது இவரின் இலக்கண அறிவைப் புலப்படுத்து கின்றது.

## ஆய்தவோசை

தொல்காப்பியர் காலத்தில் வழங்கி வந்த ஆய்தவோசை குறித்துத் தொல்காப்பியனாரும் புள்ளியெழுத்துக்களும் என்ற கட்டுரையில் விரிவாக ஆராய்ந்த மு. இரா. வல்லெழுத்தின் முன்பு ஒலிக்கும் ஆய்தமானது இடைக்காலத்தில் வேறோர் ஓசையும் பெற்றதை அறிந்து அவற்றை வெளிப்படுத்தும் முகமாக இக்கட்டுரையை அமைத்திருக்கின்றார்.

போலி எழுத்துகளைப் பற்றி மு. இரா. தெளிவாக ஆய்ந்திருக்கின்றார். தொல்காப்பியனார்,

"அகரம் இகரம் ஐகாரம் ஆகும்" (தொல். எழுத். 21)

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயெ னெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்" (தொல். எழுத். 22)

என்ற இரண்டு நூற்பாக்களால், ஐகாரத்துக்குப் போலியாக வரும் எழுத்துகளைக் குறிப்பிட்டிருத்தல் கற்றார் பலரும் அறிவர் என்றும்; இச்சூத்திரங்களின் படி, அஇ, அய் என்ற இரண்டும் ஐகாரத்தின் போலிகளாகும் என்றும் கூறியவர், இவ்விரண்டு மட்டுமன்றி வேறொன்றும் அதற்குப் பதிலாக வழங்கியதுண்டு என்பதை யாப்பருங்கல விருத்தி எடுத்துரைக்கின்றது எனச் சுட்டிக்காட்டு கின்றார். அதாவது அவிநயனார்,

"ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயெ னெழுத்தொடு மெய்பெறத் தோன்றும்"

என்ற சூத்திரத்தின்வழிக் குறிப்பிட்டுள்ளதனை, அவ்விருத்திகாரர் ஐகாரத்துக்கு அய் என்பதும் அஃ என்பதும் போலிகளாக முன்னோர் கொண்டிருந்தமை தெரியலாம் என்கின்றார். இக்கருத்தையே நன்னூலாரும் தழுவினர் என்று சொல்ல இடமுண்டு. அவர்,

"அம்முன் இகரம் ஆய்தம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் . . ."

என்று சூத்திரித்திருந்தனர் என்பதும், 'அகரமுன் இகரமும் ஆய்தமும் வரின்' என்று பதப்பொருளும், 'அஇவனம், ஐவனம், கஃசு, கைசு' என உதாரணமும் தந்து மயிலைநாதர் உரையிட்டிருந்தனர் என்பதும் அறியப்படுகின்றது. கைசு முதலிய ஐகார முதன்மொழிகள் கஇசு, கய்சு, கஃசு என்ற மூவகையுருவினும், அக்காலத்து வழங்கி வந்தமை தெரியலாம். எனவே, அஇ, அய், அஃ, ஐ என்ற நான்கும் தம்முள் ஓசை யொற்றுமை பெரிதுமுடையன என்பதும், அதனால் அகரத்தையடுத்த ஆய்தம் ஐ, அய், அஇ என்ற ஒலிகளைப்பெற்று இசைத்தற்கும் உரியன என்பதும் பெறப்படுகின்றன என்று விளக்குகின்றார்.

மேலும், "ஐகாரத்துக்கு அய் போலியாவது போலவே, அவ்வைகாரப் போலியான அஃ என்பது ஐகாரத்தின் போலிகளையெல்லாம் கொண்டொலிக்கும் என்பது அறியலாகும். ஆகவே, ஐயின் மற்றொரு போலியாகத் தொல்காப்பியரும் அவரைத் தழுவி நன்னூலாருங் கூறிய அஇ என்பதும், அஃ என்பதற்குப் பிரதியாக வந்து இசைத்தற்குரியது என்பது பெறப்படுகின்றது. இங்ஙனம் அஃ, அய், அஇ இம்மூன்றும் ஓசை ஒப்புமை கொண்டு தம்முட் பரிமாறிவரக் கூடுமேனும், இவற்றுள் அய், அஃ என்பன ஒற்று நீங்க ஒரு மாத்திரையும், அஇ என்பது இரண்டு மாத்திரையும் உடையவாகச் செய்யுளில் வருமென்றும் உணர்ந்து கொள்க.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால், ஆய்தவெழுத்து, தொல்காப்பியர் காலத்தே தான்சார்ந்த வல்லெழுத்துச் சாயலான ஓசையையும், இடைக்காலத்தில் அய், அஇ என்ற இரண்டு ஓசைகளையும், பிற்காலங்களிலே குகரச்சாயலான ஓசையையும் ஏற்று ஒலித்து வந்த செய்தி விளக்கமாகும்" (செந்தமிழ் 41:1, 1943) என்று தெளிவுறுத்துகின்றார்.

## இ. பெயராய்வு

அமிதசாகரர், இளம்பூரணவடிகள், கருணாகரத் தொண்டைமான், கூத்தச் சாக்கையன், திருவள்ளுவர், பகழிக்கூத்தர், வேள் ஆயண்டிரன், ஸ்ரீஇருந்தவளமுடையார் போன்ற பெயராய்வுக் கட்டுரைகள் செந்தமிழ் இதழில் வெளி வந்திருக்கின்றன. இவற்றில் ஸ்ரீஇருந்தவளமுடையார் மட்டும் தெய்வப்பெயர் கொண்டதாகவும், ஏனையவை மக்கட்பெயர் கொண்டதாகவும் அமைந்திருக்கின்றன.

### அமிதசாகரர்

அமிதசாகரர், அமுதசாகரர் என்ற பெயர் வழக்கு இரண்டும் ஒருவரையே குறிக்கும் என்றும், இவர் முதல் இராசேந்திரன் காலமான

கி.பி. 985-1013ஆம் ஆண்டை ஒட்டி வாழ்ந்தவர் என்றும் சாசனப் பாடலை ஆதாரமாகக் கொண்டு மு. இரா. விளக்கியிருக்கின்றார். மேலும், யாப்பருங்கலப் பாயிரத்துள்,

"யாப்பருங் கலநனி யாப்புற வகுத்தோன்
தனக்குவரம் பாகிய தவத்தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கலுங் கேள்வித் துகடீர் காட்சி
அளப்பருங் கடற்பெய ரருந்தவத் தோனே"

என்று கூறியவற்றில் 'அளப்பருங் கடற்பெயரினர்' என்று குறிப்பிடுவதை மு. இரா. எடுத்துக் கொண்டு ஆராய்கின்றார்.

வடமொழியில் 'அளப்படும்' என்பது 'அமித' என்றும்; 'கடல்' என்பது 'சாகரம்' என்றும் அழைப்பர். இதனால் அமிதசாகரர் என்பதே சரியான பாடம் என்கின்றார்.

இவரது காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்கின்றார். அதாவது, "காரிகை யழகு பெண்ணே கலித்துறை யொருசொற்கும்பேர்" (11, 187) என்று சூடாமணி நிகண்டு கூறுதலால், அவர் காரிகையாசிரியரான அமிதசாகரர்க்குப் பிற்பட்டவரே என்றும், அமிதசாகரர் 10ஆம் நூற்றாண்டுக்கும் முற்பட்டவராகார் என்பதற்கு வேண்டிய ஏதுக்கள் உள்ளன என்றும் விளக்கிச் செல்கின்றார்.

## இளம்பூரணவடிகள்

இளம்பூரணவடிகள் என்பவர் யார்? அவரைப் பற்றிப் பிறவகை இலக்கியங்களில் கூறப்படும் பெயர் என்ன? என்ற வினாக்களுக்கு விடைபகர்ந்துவிட்டு இவரது காலத்தைச் சுட்ட முற்படுவதாக இவ் ஆய்வு அமைந்துள்ளது.

நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர், தம் சூத்திரங்கள் சிலவற்றை இளம்பூரண அடிகள் உரைக்கருத்தையே தழுவி இருக்கின்ற காரணத்தினால் பவணந்திக்கு முந்தியவர் இளம்பூரணர் என்றும், இளம்பூரணர் கொள்கைகள் சிலவற்றைச் சேனாவரையர் பல இடங்களில் மறுக்கின்றார். இம்மறுப்பு எதையும் பவணந்தியார் சுட்டவில்லை. அதனால் பவணந்திக்கும் பிற்பட்டவர் சேனாவரையர் என்றும் இவர்களின் கால முறைவைப்பைச் சுட்டுகின்றார். அதாவது, முதலில் இளம்பூரணர் பின்னர் பவணந்தியார் அதற்கும் பின்னர் சேனாவரையர் என்றவாறு முறைப்படுத்துகின்றார்.

மேலும், அச்சிடப்பெற்றுள்ள இறையனார் களவியலுரைக்கும் இளம்பூரணருக்கும் தொடர்பிருக்குமோ என்ற எண்ண வெளிப்பாட்டில் இவ் ஆய்வு நீள்கின்றது. நக்கீரனாரின் வேறான உரை ஒன்று களவியலுக்கு உண்டு என்பது தமிழுலகம் அறிந்த ஒன்று. அவ்வுரையில் தொல்காப்பியச் சொல்லதிகார இளம்பூரணத்தில் பயிலும் பல இடம்பெற்றுள்ளதைக் காண முடிகின்றது என்றும், இதனால் இவ்வுரைகாரர் இளம்பூரணராக இருக்கலாமோ என்றும் தம்முடைய எண்ணத்தை வெளிப்படுத்து கின்றார். அதாவது, "களவியலுரைகாரர் இளம்பூரணர் தாமோ என்னும் ஐயத்தை எழுப்புதற்குக் காரணமாயிருந்தவற்றைக் காட்டியபடியாம். இதற்குப் பிறசான்றுகளும் வேண்டியிருத்தலின் இக்கொள்கையே முடிவுடையதென்பது என் கருத்தன்று. ஆயின், இதனை ஈண்டுக் கூறவந்த தென்னையெனின் இப்புதிய கருத்து வெளியிடப்படின், அது பின் ஆராயப்பெற்று முடிவடைதற்குங் காரணமாகலாமென்னும் எண்ணங் கொண்டே என்க" (ஆராய்ச்சித் தொகுதி, ப. 405) என்பதால் உணரலாம்.

## கருணாகரத் தொண்டைமான்

கருணாகரன் வண்டை என்ற ஊரின் தலைவனென்பதும், பல்லவ வமிசத்தவனாய்த் தொண்டைமான் என்ற சிறப்புப் பெயர் பெற்றவன் என்பதும், அபயனது சேனாபத்தியத்துடன் மந்திரத் தலைமையும் வகித்து விளங்கியவன் என்பதும் கலிங்கத்துப்பரணி கூறுவன. ஆனால், தொண்டைமண்டல சதகம் கருணாகரனுக்குரிய வண்டை என்னும் ஊர் தொண்டை நாட்டிலுள்ள வண்டலூர் என்று கூறுகின்றது. இவ்விரு கூற்றுகளும் பொய் என்றும், கருணாகரனது வண்டை என்னும் ஊர் சோழநாட்டில் உள்ளது என்றும் மு. இரா. நிலைநாட்டுகின்றார். இதற்குத் தக்க சாசனங்கள் மற்றும் இலக்கியச் சான்றுகள் போன்றவற்றை மேற்கோளாகக் காட்டித் தம் ஆய்வை நிலைப்படுத்துகின்றார். மேலும் இராமபிரானுக்குக் கருணாகரப்பெருமான், கருணாகரமூர்த்தி போன்ற பெயர் இருப்பதைச் சுட்டிக்காட்டி இவனுக்கும் கருணாகரன் என்ற பெயர்கள் இருப்பதைச் சுட்டிக்காட்டி இவனுக்கும் கருணாகரன் என்ற பெயர் வந்தமைக்கான பெயர்க்காரணத்தையும் இக்கட்டுரை வாயிலாக விளக்குகின்றார்.

## கூத்தச்சாக்கையன்

இலக்கியங்களிலும் சாசனங்களிலும் கூத்தச்சாக்கையன் என்பவர் யார்? அவனது தொழில் எது? என்பன பற்றியெல்லாம் இக்கட்டுரையில் மு. இரா. ஆய்ந்திருக்கின்றார். சிலப்பதிகாரம்

நடுகற்காதை (65-79)யில் இளங்கோவேண்மாளோடு சேரன் செங்குட்டுவன் வஞ்சிமாடம் செல்லும் போது இடையிலுள்ள நாடக அரங்கத்தில் கூத்தச்சாக்கையன் நிகழ்த்திய கூத்தைக் கண்டுகளித்தான் என்றும், அவன் ஆடிய ஆட்டம் 'கொட்டிச்சேதம்' என்றும், இக்கொட்டிச்சேதம் சிவபெருமான் உமையவளுடன் ஆடிய பதினொரு புறநாடகங்களில் ஒன்று என்றும் சுட்டிச்செல்கின்றார். மேலும், இச்சாக்கையர் தமிழ்நாட்டிலுள்ள பழைய குடியினராய்க் கூத்து நிகழ்த்துவதில் தொன்றுதொட்ட பெருமை உடையவர் என்றும், சிலப்பதிகாரத்தில் "இமையவனாடிய கொட்டிச்சேதம், பாத்தரு நால்வகை மறையோர் பறையூர்க், கூத்தச் சாக்கையன் ஆடினேன்" என்னும் செய்தியும் கூத்தச்சாக்கையனின் பழமையைப் புலப்படுத்தும் என்றும் விளக்கிச் செல்கின்றார்.

## திருவள்ளுவர்

திருவள்ளுவரின் காலம், திருவள்ளுவர் பெயர்க்காரணம், அவரின் ஊர், அவர்தம் தேவியர் பெயர்க்காரணம், பிரமதேவனோடு திருவள்ளுவர்க்குள்ள தொடர்பு ஆகியன பற்றியெல்லாம் மு. இரா. இக்கட்டுரையில் விளக்கிச் செல்கின்றார்.

> "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
> பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
> பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்"

என்ற சாத்தனாரின் வாக்கைப் பார்க்கும் போது திருவள்ளுவரின் காலம் சில நூற்றாண்டுகளாவது சாத்தனார்க்கு முற்பட்டதாக இருக்க வேண்டும் என்கின்றார்.

பிரமதேவர் இயற்றிய திரிவர்க்கம் முப்பால் உணர்த்தும் முதல் நூலாகத் திகழ்கின்றது. அதிலிருந்தே ஏனைய நீதிநூல்கள் தோன்றின என்பது ஆய்வாளர் கருத்து. திரிவர்க்க நூலைச் சுருக்கித் திருவள்ளுவர் திருக்குறளைத் தமிழுலகிற்கு அருளினார் என்கிறார். அதாவது, 'நான்முகன் அவதாரமான திருவள்ளுவர்" என்ற முன்னோர்தம் கூற்றை ஆதாரமாகக் கொண்டு பிரமதேவரோடு திருவள்ளுவரையும் ஒப்பீடு செய்து ஆய்ந்திருக்கின்றார்.

அரசர்க்குக் கருமத்தலைவராய் உயர்பதவி வகித்தவர்க்கு வள்ளுவன், சாக்கை என்ற சிறப்புப் பெயர்கள் வழங்கப் பெற்றதைத் திவாகரம் உணர்த்துகின்றது. இதனை

> "வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னர்க்கு
> உள்படு கருமத் தலைவர்க் கொன்றும்"

என்னும் திவாகர சூத்திரத்தினால் உணரலாம். வல்லபர் என்ற வடசொல் வள்ளுவர் என்றாகியது என்கின்றார். இதற்குப் புதுக்கோட்டை சித்தன்னவாசல் சாசனம் 'ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன்' என்றும், திருவிசலூர் பரகேசரிவர்மன் இராசேந்திரசோழன் சாசனம் 'பாண்டியன் ஸ்ரீவல்லுவர்' என்றும், வீரராஜேந்திரன் மெய்க்கீர்த்தி 'சிரீவல்லவன்' என்றும் வழங்குவதை உணர்த்தி வல்லபன் என்பது வல்லுவன் என்று ஆகிப் பின்னாளில் 'ல'கரம் 'ள'கரமாகத் திரிந்து 'வள்ளுவன்' என்றாகியது என்கின்றார். புறநானூற்றில் (137) படைத்தலைமை வகித்தவனை 'நாஞ்சில் வள்ளுவன்' என்று சுட்டப்பெறுவதைச் சிறப்பாகக் காட்டி விளக்கிச் செல்கின்றார்.

"உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப - இப்பக்கம்
மாதான பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு" (திருவள்ளுவ மாலை)

என்பதில் உலகை வாழ்வித்தருளிய கண்ணபிரான் மதுரைக்கு எங்ஙனம் ஆதாரமாய்ச் சிறந்தவரோ, அங்ஙனமே திருக்குறளாசிரியராய்த் தமிழகத்தை வாழ்வித்த வள்ளுவர் தென்மதுரைக்கு ஆதாரமாகச் சிறந்தவர் என்பது உண்மை. ஆகவே வள்ளுவர் பிறந்தது தென்மதுரையே அன்றி மயிலாப்பூர் அல்ல என்று உணர்த்துகின்றார்.

மேற்கூறிய 'உப்பக்க நோக்கி' எனும் பாடலில் கண்ணன் தேவியாக உபகேசியைக் கூறியது போல வள்ளுவரின் தேவியாக மாதானுபங்கியைக் குறிப்பிடுகின்றார். நப்பின்னையை உபகேசி என்ற சிறப்புப் பெயரால் அழைத்தது போல வாசுகியை மாதானுபங்கி என்ற சிறப்புப்பெயரால் அழைத்திருக்கின்றனர் என்கின்றார்.

### பகழிக்கூத்தர்

திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ் இயற்றியவர் பகழிக்கூத்தர். இவர் பிறப்பால் வைணவர் என்றும், முருகப் பெருமான் மீது மிகுந்த பக்தி கொண்டு இந்நூலைப் பாடியவர் என்றும், சைவராக வாழ்ந்தவர் என்றும் மு. இரா. இக்கட்டுரை வாயிலாக விளக்கிச் செல்கின்றார். அதாவது, சர்க்கரை இராமசாமிப் புலவர் மதுரை தமிழ்ச்சங்கத்திற்கு அளித்த ஏட்டுப்பிரதியில் "செம்பிநாட்டுச் சன்னாசிக் கிராமத்துத் திருப்புல்லாணி மாலடியான் தர்ப்பாதனன் மகன் பகழிக்கூத்தன் வாக்கு" என்பதை அடிப்படையாகக் கொண்டு இவரது தந்தையார் தீவிர வைணவர் என்பது இவ்வரிகளால் தெரிகின்றது என்கின்றார். பிறப்பால் வைணவரான பகழிக்கூத்தர் தம்முடைய வயிற்று

வலியைப் போக்கத் திருச்செந்தூரில் கோயில் கொண்டிருக்கும் முருகப்பெருமான் மீது 'திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்' பாடினார் என்ற கூற்று உண்மையே என்று விளக்குகின்றார்.

### ஈ. வரலாற்றாய்வு

தமிழரும் ஆந்திரரும், திருமங்கையாழ்வாரும் தந்தி துர்க்கனும், பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள், பாரத காலமும் தமிழரும், பெரியாழ்வார் கால நிர்ணயம், ஸ்ரீவால்மீகி முனிவரும் தென்னாடும், வேளிர் வரலாறு ஆகிய வரலாற்றாய்வுகள் வெளிவந்திருக்கின்றன. இவற்றுள் ஆய்விற்குச் சில.

### தமிழரும் ஆந்திரரும்

சங்ககாலத்தில் தமிழ் மக்கள் ஆந்திரரை வடுகர் என்றும் அவர் மொழியை வடுகு என்றும் வழங்கி வந்தனர். அவ்வாறே ஆந்திரர் தமிழரை அரவர் என்றும் அவர் மொழியை அரவம் என்றும் வழங்கி வந்தனர். இன்றும் அவ்வாறே வழங்கி வருகின்றனர். 'வடுகர், அரவர்' என்ற இருசொற்கள் யாருக்குரியது, இவற்றின் உண்மை வடிவம் என்ன என்பன குறித்து மு. இரா. இக்கட்டுரையில் விவரிக்கின்றார்.

மைசூர் - ராஜ்யத்தின் வடபாகத்துக்கும், பல்லாரி அனந்தபுர ஜில்லாக்களின் பகுதிகட்கும் 'படகநாடு' என்று பெயர். படகநாடு என்பது வடுக நாடென்பதன் திரிபே. அகநானூறு (253, 107), குறுந்தொகை (11) மற்றும் சுந்தரர் தேவாரம் போன்றவற்றில் குறிப்பிடப்பெறும் வடுகர் படகநாட்டவர் என்பது இக்கட்டுரையில் உறுதி செய்யப் பெற்றிருக்கின்றது.

தமிழகத்தைச் சூழ்ந்த நிலங்களிலே கன்னடம், வடுகு, தெலுங்கம் என்பவை தனித்தனி நாடுகள் என்று நச்சினார்க்கினியரும் (தொல். சொல். 400உரை), மயிலைநாதரும் (நன்னூல் 272இன் உரை) கூறுகின்றனர். இவ்வாறு தெலுங்கு நாட்டின் வேறாக வடுகநாடென ஒன்று எண்ணப்படுவது உணரலாம் என்றும், பிற்காலத்தில் வடுகு, வடகர் ஆகிய இரண்டும் தெலுங்கர்களைக் குறிக்கும் வடுகர் என்ற சொல்லாக நிலவியது என்றும் சுட்டுகின்றார்.

அரவர், வடுகர் என்ற பெயர் 300 வருடங்களுக்கு முன் வழங்கியதற்கான சான்றில்லை. ஆனால் அகராதி நிகண்டு 'அரவரென்பது தமிழராகும்' என்று எடுத்தாண்டுள்ளதை எடுத்துக்காட்டி, அரவர் என்பது தமிழருக்குண்டா? என்ற வினாவுக்கு

'அருவர் என்பதே அரவர்' என்று விரிவாக அதற்குத் தக்க சான்றுகளுடன் விளக்கியிருக்கின்றார். மேலும், தமிழரும் வடுகரும் முற்காலத்தும் பிற்காலத்தும் எவ்வகைத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை மூன்று பகுதிகளாகப் பிரித்து ஆய்வு செய்திருக்கின்றார். அவை,

1. தமிழரும் ஆந்திரரும் தம்முட் பெரும்பாலும் நட்பினராய் வாழ்ந்த காலம் (முடிவேந்தர் மூவர் காலம்)
2. தமிழர் ஆந்திரரின் மேம்பட்டு ஆண்ட காலம் (சங்க காலத்திற்குப் பிறகு இராசராசன் - 2 வரை)
3. ஆந்திரர் தமிழரின் மேம்பட்டு ஆண்ட காலம் (விஜயநகரப் பேரரசு உதயம் தொடங்கி)

என்பனவாக இவ் ஆய்வு அமைந்திருக்கிறது. மேலும் இவர்களின் உறவு முறைகள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதை வரலாற்றாதாரத்துடன் விளக்கிச் செல்வதாகவும் இக்கட்டுரை அமைந்துள்ளது.

## திருமங்கையாழ்வாரும் தந்திதுர்க்கனும்

பல்லவர்க்கு வயிரமேகன் என்ற பெயர் வழக்கு உண்டென்று கே.வி. சுப்பிரமணிய ஐயர் கூறுகின்றார். இதற்கு ஆதாரமேயில்லை. "இக்காலத்தில் உள்ளது போலச் சரித்திரச் செய்திகள் தெரியவருவதற்கு வேண்டிய சாதனங்கள் அப்போது இல்லாமையால், கர்ணபரம்பரையாக அறியப்பட்ட தொண்டைமான் சக்கரவர்த்தியையே திருமங்கைமன்னன் நெடுகக் கூறினவராகக் கொண்டு அவனுக்கேற்பப் பூர்வீகப் பொருளை இணக்கி எழுத நேர்ந்தது சிறிதும் வியப்பன்று" (செந்தமிழ், 22:1, 1923) என்றவர் அவ்வழியைப் பின்பற்றிச் செல்வது இன்றைய வரலாற்றாராய்ச்சியார்க்கு உகந்ததன்று என்கின்றார். இவர் தம்முடைய ஆய்வில், "பல்லவ மன்னன் அறுபது வருஷங்கட்கு மேல் ஆட்சிபுரிந்தவன் என்பது, சரித்திரப் பிரஸித்தமாயுள்ளது. அவனது ஆட்சியின் தொடக்கத்தில் நடந்த போர்களே உதயேந்திர சாஸனமும் பரமேச்சுர விண்ணகரப் பதிகமுங் கூறுவன. இவனாட்சி முடிவுக்குப் பத்துப்பன்னிரண்டு ஆண்டுகட்கு முன்புதான் வயிரமேகனாகிய தந்திதுர்க்கன் இவனை வென்றவனென்று அறியப்படுகிறது. இதனால், திருமங்கைமன்னன், பரமேச்சுரவிண்ணகரப் பதிகத்தைப் பல்லவ மல்லனது ஆட்சியிடையிலும், அட்டபுயகரப் பதிகத்தை வயிரமேகன் வெற்றிகொண்ட காலமாகிய கி.பி. 754இலும் பாடினவராதல்

வேண்டுமென்று கருதுவது, ஒருபோதும் தவறான ஊகமாகாதென்க" (செந்தமிழ் 22:1, 1923) என்கின்றார்.

மேலும், வயிரமேகன் என்ற பெயர்க்காரணத்தைப் பற்றி எழுதும் போது, "அது, தோற்றவனான பல்லவர்குலப் பெயரைத் தந்திதுர்க்கன்தன் வெற்றிக் குறியாகத் தரித்ததாகலாம் என்று ஐயரவர்கள் கருதுகிறார்கள். வென்றவன் பெயரைத் தோற்றவன் தானடங்கியதற்கறிகுறியாகத் தரித்தல் பொருந்துமேயன்றித் தோற்றவன் பெயரை வென்றவன் தரிப்பதென்பது அருமையேயாம். . . . . பல்லவனை வெற்றிகொண்ட வயிரமேகன் ஆகிய தந்திதுர்க்கன், பின் பகைமைநீங்கித் தன்மகள் ரேவாவை அப்பல்லவனுக்கே யளித்தானென்றும், அவளிடம் பல்லவமல்லனுக்குப் பிறந்த மகனே தந்திவர்மனென்றும் சிலரால் ஊகிக்கப்படுவதால், தாய்வழிப் பாட்டனான அவ்வயிரமேகன் பெயரைப் பின்வந்த பல்லவர் சிலர் தரிக்கலாயினர் என்று ஒருகாற் கொள்ளலாமேயன்றி, மாறிக் கூறுகூது சிறிதும் பொருந்தாதென்க" (மேலது) என்று விளக்குகின்றார்.

"பல்லவமல்லன் வழியிற் சிலரும் வயிரமேகன் என்று பெயர் தரித்திருப்பதாகத் தெரிய வருவதால், அதனைப் பற்றிக்கொண்டு அவர்களில் ஒருவனே ஆழ்வார் கூறியவராக வேண்டும் என்று ஆதாரமில்லாமல் பொதுப்படையாக நலிந்து கூறும் பொருள்களிலும், பல்லவனை வெற்றிகொண்டவனாகச் சாசனத்தாலும் ஆழ்வார் வாக்காலும் தெளிவாக அறியப்படுபவனும் முன்னவனுமாகிய வயிரமேகனையே கொள்வது எத்துணை நேரிமையும் சிறப்புமுடையது என்பதை அறிஞர் சிந்திப்பார்களாக" (மேலது) என்ற சிந்தனை வினாவையும் இதனுள் வைத்திருக்கின்றார்.

## பாரதகாலமும் தமிழரும்

பாரதப்போர் நிகழ்ந்த காலமும் கடைச்சங்க காலமும் ஒன்றே என்பதை மு. இரா. 'பாரத காலமும் தமிழரும்' என்ற கட்டுரையில் விளக்கிச் செல்கின்றார். மேலும் ஆதியில் மூன்று சங்கங்கள் இருந்தன என்னும் கூற்றுக்கு மறுப்பாகவும் இந்த ஆய்வு அமைந்திருக்கின்றது.

இடைச்சங்க மிருந்தாருள் நிலந்தரு திருவிற் பாண்டியன் என்பான் ஒருவன் என்பது முன்னூல்களில் காணப்படுகிறது. இவனே தொல்காப்பியம் புலப்படுத்தினான், இதனை 'நிலந்தருதிருவிற் பாண்டியனவையத்து' எனவரும் அவ்விலக்கண நூற் பாயிரத்தால் அறியலாம். இவனைக் கடைச்சங்கத்தாராகிய மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில் புகழ்ந்திருப்பதால் இடைச்சங்கம் என்று ஒன்று

ஆதியில் இல்லை என்கின்றார்.

மூன்று சங்கங்களுள் தலைச்சங்கச் செய்தியாக வழங்குவனவற்றில், முரஞ்சியூர் முடிநாகராயர் என்பவர், அச்சங்கமிருந்தாருள் ஒருவர் என்று இறையனார் களவியலுரை முதலியவற்றில் சொல்லப்படுகின்றது. ஆனால் மு. இரா. புறநானூற்றில் இரண்டாவது பாடலை முரஞ்சியூர் முடிநாகராயர் என்பார் சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனைப் பாடியிருக்கின்றார்; இதனால் முதற்சங்கம் ஒன்று இல்லை என்று கூறுகின்றார். இச்சேரலாதன் பாரத யுத்தத்திற் பாண்டவர் பக்கம் நின்று, அப்போர் முடியும் வரை பாண்டவர் சேனைகட்கு உணவளித்தவன். இக்காரணம் பற்றியே இவன் 'பெருஞ்சோற்றுதியன்' என்றழைக்கப் பட்டான் என்கிறார். இவ்வரலாற்றுச் செய்தியைப் பண்டைக் காலத்துப் புலவர் சிலரும் புகழ்ந்துரைத்துள்ளனர். குறிப்பாக, மாமூலரின் அகநானூற்றின் 'மறப்படைக் குதிரை' என்ற 233ஆம் பாட்டாலும்; இளங்கோவடிகளின் 'ஓரைவ ரீரைம் பதின் மருடன் றெழுந்த, போரிற் பெருஞ்சோறு போற்றாது தானளித்த சேரன்' என்ற வரிகளாலும் இக்கருத்தைச் சுட்டிக்காட்டி உணர்த்துகின்றார்.

இவ்வுதியனை முன்னிலையில் வைத்துப் பாடிய முடிநாகராயரும், தலைச்சங்கப் புலவர் வரிசையில் நூல்களிற் கூறப்படும் முடிநாகராயரும் ஒருவரே. இவ்விரண்டடிகளிலும் 'முரஞ்சியூர்' என்ற ஒரே ஊர் இடம் பெற்றுள்ளது என்று ஊர் அடிப்படையிலும் ஆய்வு செய்து தம் கருத்தை நிலைநாட்டுகின்றார்.

மேலும், ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கமும்' என்னும் தொல்காப்பியச் சூத்திரவுரையில் தலைச்சங்க காலத்தவராக வான்மீகனார், மார்க்கண்டேயனார், கௌதமனார் போன்றோரைக் கூறுகின்றார். ஆயின், இவர்களும் பாரத காலத்தை ஒட்டியிருத்தல் கூடும் என்று மு. இரா. உணர்த்துகின்றார். வான்மீகனார் இயற்றிய பாடல் ஒன்று புறநானூறு 358இல் உள்ளது என்றும், கௌதமனார் இயற்றிய பாடல் ஒன்று புறநானூறு 365இல் உள்ளது என்றும் சுட்டிக்காட்டி இவர்களும் பாரத காலத்தில் வாழ்ந்தவர்கள் என்று கூறுகின்றார்.மேலும் குமட்டூர்க்கண்ணனார், அகத்தியர் போன்றோரும் பாரதயுத்த காலத்தில் வாழ்ந்த புலவர்களே என்பதைத் தக்க சான்றுகளுடன் விளக்கிச் செல்கின்றார்.

## பெரியாழ்வார் காலநிர்ணயம்

கர்ண பரம்பரைச் செய்திகளைக் கொண்டு ஆழ்வார்களின் காலத்தைப் பின்வருமாறு சுட்டுவர்.

| | | |
|---|---|---|
| பொய்கையார் | - | கி.மு. 4203 |
| பூதத்தாழ்வார் | - | கி.மு. 4203 |
| திருமழிசையாழ்வார் | - | கி.மு. 4203 |
| நம்மாழ்வார் | - | கி.மு. 3102 |
| மதுரகவியாழ்வார் | - | கி.மு. 3102 |
| குலசேகராழ்வார் | - | கி.மு. 3075 |
| பெரியாழ்வார் | - | கி.மு. 3056 |
| ஆண்டாள் | - | கி.மு. 3005 |
| தொண்டரடிப்பொடி | - | கி.மு. 2814 |
| திருப்பாணாழ்வார் | - | கி.மு. 2760 |
| திருமங்கையாழ்வார் | - | கி.மு. 2706 |

இக்காலப் பகுப்பு முற்றிலும் போலியானது என்கின்றார் மு. இரா. நாதமுனிகளால் அறியப்பட்டுப் பின்னர்க் குருபரம்பரையில் வந்த ஆழ்வார்கள் கால வரலாறு பிற்காலத்துச் சிலபல மாறுதல்களுக்கு உள்ளாகியிருத்தல் கூடும் என்றவர், ஆழ்வார்கள் வரலாறு தெரிவிக்கும் சில பழைய நூல்களில் மேற்கண்ட காலம் குறிக்கப்பட்டிருத்தல் காணவில்லை என்கின்றார். எனவே, "மேலே கூறிய கால வரையறைகள் அதிகப்பட்டிருப்பனவாகத் தோன்றினும், அவற்றால் நாமறியக் கிடக்கும் விஷயங்களும் உண்டு. முன்னின்ற பொய்கையார் முதலிய நால்வரும் இடைநின்ற நம்மாழ்வார் முதலிய ஐவரும் பின்னின்ற தொண்டரடிப்பொடியாழ்வார் முதலிய மூவரும் தனித்தனி மூவேறு காலங்களில் வாழ்ந்தவர்கள் என்பது தெரிகின்றது" (செந்தமிழ் 2:3, 1903) என்று பழைய வரிசைமுறையை மு. இரா. ஏற்றுக் கொள்கின்றார்.

கம்பர் காலம் கி.பி. 885ஆகும். நாதமுனிகள் சந்நிதியில் கம்பராமாயணம் அரங்கேறியது என்ற வழக்கால் கம்பருக்கும் முன்னவர் நாதமுனிகள் என்றும்; பெரியாழ்வார், ஆண்டாள் பாடல்கள் விருத்தப் பாடல்களால் ஆனவை. விருத்தம் சங்கப் பாடல்கள் காலத்தில் இல்லை. ஆண்டாள் திருப்பாவை முடிவில் அருளிய 'பைங்கமலத்......' என்னும் பாசுரக் கூற்றை நன்றாக ஆராய்ந்தால் பெரியாழ்வார் மற்றும் ஆண்டாள் ஆகியோர் கடைச்சங்க காலத்துக்குப் பிற்பட்டவர்கள் என்று துணியலாம். கடைச்சங்க காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என்பர். எனவே, பெரியாழ்வார், ஆண்டாள் ஆகியோரது காலம் கி.பி. 2ஆம் நூற்றாண்டு என்றும் விளக்குகின்றார்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகியோர் வெண்பாவில் செய்யுள் செய்திருக்கின்றனர். நம்மாழ்வார்

பிற்காலத்தனவாகிய பாவினங்களில் செய்யுள் செய்திருப்பதால் நம்மாழ்வாருக்கும் முன்னவர்கள் இம்மூவர் என்றும்; திருமழிசையாழ்வார் சந்த விருத்தத்தால் செய்யுள் செய்திருப்பதால் முதலாழ்வார்க்குப் பிற்பட்டவர் என்றும்; திருமழிசையாழ்வார் காலத்திருந்த பல்லவ அரசன் செழித்து வளமுடன் இருந்தது பற்றிய பழைய நூல் ஒன்று கூறுகின்றது. இதிலிருந்து திருமழிசை ஆழ்வார் கி.பி. 6ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்றும்; அவதார முறையில் திருமழிசையாழ்வாருக்கு அடுத்தவ்ராக நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள் இவர்கள் பல்லவர் செழித்து வாழ்ந்த ஆறாம் நூற்றாண்டுக்குப் பிறகான 7ஆம் நூற்றாண்டவர் என்றும்; பெரியார்வார் திருமொழி திருமாலிருஞ்சோலை மலைப் பாசுரத்தின் (மன்னன் மறுக) வழி ஆராயின் மதுரையை ஆண்ட நெடுமாறன் என்னும் பாண்டியன் குறிக்கப்பட்டுள்ளான் என்பது விளங்கும்; இவனது காலம் கி.பி. 8ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பது பல இலக்கியச் சான்றால் விளங்கும் என்றும் ஆழ்வார்களின் காலத்தை வரையறை செய்கின்றார்.

## முடிவுரை

மகாவித்துவான் மு. இராகவையங்கார் செந்தமிழ் இதழின் உதவி ஆசிரியராக இருந்த காலத்தும், சென்னைப் பல்கலைக்கழகப் பேரகராதிப் பணியில் ஈடுபட்டிருந்த காலத்தும் அவர்தம் ஆய்வுக் கட்டுரைகளும் பதிப்புகளும் படைப்புகளும் செந்தமிழ் இதழில் பல்வேறு நிலைகளில் வெளிவந்திருக்கின்றன. இவரது எழுத்துருக்களில் பெரும்பான்மையைச் செந்தமிழ் இதழே வெளியிட்டிருக்கின்றது என்றால் அது மிகையல்ல. செந்தமிழ் இதழோடு முதல் எட்டு ஆண்டுகள் நெருங்கியிருந்தாலும் அதற்குப் பிறகு சுமார் 33 ஆண்டுகள் இவ்விதழோடு உறவு வைத்திருக்கின்றார் என்பது இவர்தம் எழுத்துரு வெளிவந்த ஆண்டைக் கண்ணுற்றோர்க்கு விளங்கும்.

## ஆய்வுக்குப் பயன்பட்டவை

ஆராய்ச்சித் தொகுதி, மு. இராகவையங்கார், தமிழ்ப் பல்கலைக்கழகம், நிழற்படப் பதிப்பு, தஞ்சை, 1984.

செந்தமிழ், தொகுதி 1 முதல் 43 வரை.

பல இதழ்களில் சுவடிப்பதிப்புகள், மோ.கோ. கோ., த.ப.க. முனைவர் பட்ட ஆய்வேடு 2002. (அச்சிடப்படாதது)

## செந்தமிழ் இதழில் மு. இரா. வின் எழுத்துருக்கள்

அமிர்தசாகரர், தொகுதி 24: பகுதி 4: 1926.

அருச்சுனனும் பாண்டிய மரபும், 8:10:1910.

அருளிச்செயற் பாடவமைதி, 40:1:1942 முதல் 40:10:1943 வரை.
ஆய்தவோசை, 41:1:1943.
ஆழ்வார்கள் சரித்திர ஆராய்ச்சி, 4:2:1905.
'ஆழிவடிவம்பலம்ப' என்ற நளவெண்பாப் பாட்டுரை, 6:7:1907-08.
இளம்பூரணவடிகள், 4:7:1906.
எதிராசரந்தாதி, 4:10:1906.
ஒப்புரவறிதல், 4:9:1906.
கண்ணபிரானைப் பற்றிய தமிழ்நாட்டு வழக்குகள், 8:4:1909-10.
கருணாகரத் தொண்டைமான், 23:8:1925.
கருமாணிக்கன் கோவை எனும் கப்பற்கோவை, 6:7:1907-08.
கலிங்கத்துப்பரணி யாராய்ச்சி, 23:3:1925 முதல் 23:9:1925 வரை
கூத்தச் சாக்கையன், 7:1:1908-09
சண்முகநாத சேதுபதி - வாழ்த்துப்பா, 41:2:1943
சாமிநாதையர் - இரங்கற்பா, 39:6:1942
சாஸனமும் தமிழ்ச் சரிதங்களும், 13:8:1915.
சிதம்பரப்பாட்டியல் - உரையுடன், 5:5:1907 முதல் 6:5:1908 வரை
சிலப்பதிகார வழக்கவொழுக்கங்கள், 40:12:1943.
சேதுபதி - சரமகவி, 26:9:1928
சேரவேந்தர் தாயவழக்கு, 27:10:1929 முதல் 27:11:1929 வரை
தமிழரும் ஆந்திரரும், 22:8:1924
திருக்கலம்பகம் - மூலமும் உரையும், 5:7:1907 முதல் 6:4:1908 வரை
திருமங்கையாழ்வாரும் தந்திதுர்க்கனும், 22:1:1923
திருவள்ளுவரைப் பற்றிய சில குறிப்புகள், 8:4:1909-10
தொட்டிக்கலைக் கேசவப்பெருமாள் இரட்டைமணிமாலை, 5:1:1906
தொல்காப்பியனாரும் புள்ளியெழுத்துக்களும், 25:5:1927
நரிவிருத்தம், 5:11:1907
பகழிக்கூத்தர் 6:6:1907-08
பண்டைக் கைத்தொழில் வியாபாரங்கள், 7:3:1909
பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி, 40:3:1943
பாண்டிமண்டல சதகம், 19:8:1921
பாரத காலமும் தமிழரும், 3:9:1905
புரூரவ சரிதை, 20: - :1922 முதல் 23:-:1925 வரை
பெரியாழ்வார் கால நிர்ணயம், 2:3:1903
பெருந்தொகை, 21:12:1923 முதல் 33:4:1936 வரை
பொய்கையார், 1:6:1903
மகாவித்துவான் ரா. இராகவையங்கார் மறைவு - இரங்கற்பா, 43:8:1946
மதுரைக்காஞ்சி, 40:6:1943.
மார்கழி நோன்பாகிய தைந்நீராடல், 19:7:1918-19
விக்கிரமசோழனுலா, 7:4:1909 முதல் 7:6:1909 வரை
வில்லிபுத்தூரார் காட்டிய வீரநெறிகள், 40:11:1943
வீரத்தாய்மார், 5:10:1907
வேள் ஆயண்டிரன், 4:3:1906
வேள் - பேகன், 11:2:1912
வேளிர் வரலாறு, 3:7:1905
ஸ்ரீஇருந்தவளமுடையார், 8:-:1909-10
ஸ்ரீவால்மீகி முனிவரும் தென்னாடும், 8:1:1909-10

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113
## அண்மை வெளியீடுகள்




**Pub.No.497 மூதறிஞர் மு. இராகவையங்கார் 40.00**